கோவைத் தமிழ்ச்சங்க வெளியீடு - 12.

உ
சிவமயம்

சேக்கிழார் சுவாமிகள் என்னும் அருண்மொழித்தேவர்
அருளிய

# பெரிய புராணம் என்னும்
# திருத்தொண்டர் புராணம்

[படங்களுடன்] 1410

(முதற் பகுதி)

திருமலைச் சருக்கம் - தில்லைவாழந்தணர் சருக்கம்

கோவை - வழக்கறிஞர்
திரு. C. K. சுப்பிரமணிய முதலியார், B. A. அவர்கள்
தொகுத்தியற்றிய
உரையுடன்

[சென்னைச் சர்வகலாசாலையார் ஆதரவு பெற்றது]

சாது அச்சுக்கூடம்,
இராயப்பேட்டை, சென்னை

கோவைத் தமிழ்ச் சங்கம்
கோயமுத்தூர்

15—9—1937



விலை ரூ. 6-0-0.

கோவைத் தமிழ்ச்சங்க வெளியீடு - 12

சிவமயம்

சேக்கிழார் சுவாமிகள் என்னும் அருண்மொழித்தேவர்

அருளிய

# பெரிய புராணம் என்னும்

# திருத்தொண்டர் புராணம்

[படங்களுடன்] **1410**

(முதற் பகுதி)

திருமலைச் சருக்கம் - தில்லைவாழந்தணர் சருக்கம்

கோவை - வழக்கறிஞர்

திரு. C. K. சுப்பிரமணிய முதலியார், B. A. அவர்கள்

தொகுத்தியற்றிய

உரையுடன்

[சென்னைச் சர்வகலாசாலையார் ஆதரவு பெற்றது]

சாது அச்சுக்கூடம்,

இராயப்பேட்டை, சென்னை

கோவைத் தமிழ்ச் சங்கம்

கோயமுத்தூர்

15—9—1937



விலை ரூ. 6-0-0.



விசேடக்குறிப்பு :—மேற்கண்ட [illegible] பொருள் [illegible] தற்கும், உரைக்கும், பெருந் துணைசெய்து [illegible] திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்களது விசேட ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன் கூடிய பதிப்பாகும்—பதிப்பாசிரியன்.

உ

சிவமயம்

# ம தி ப் பு ரை க ள்.

---

## திருவாவடுதுறை யாதீனம். ஸ்ரீமத் - நமசிவாயத் தம்பிரான் சுவாமிகள்.

*மகாபுருஷ செல்வச் சிரஞ்சீவி நமது சுப்ரமண்ய முதலியாரவர்களுக்கு சுவாமி அம்பலவாண சுவாமி கிருபையால் சகல சம்பத்தும் மென்மேலும் பெருக உண்டாக ஆசீர்வாதம்.*

*திருவருளால் இவண் சுபம். தங்கள் க்ஷேமத்தையறியப் பேராவலுடையேம். தாங்களனுப்பிய பெரியபுராணவுரை வந்து சேர்ந்தது. சொற்சுவை பொருட்சுவைகளை ஆய அருந்தி இன்புறுகின்றோம். தமிழ் உலகிற்கு ஓர் பெரும் விருந்தே.*

---

சூரியனார் கோயிலாதீனம்

## ஸ்ரீமத் - முத்துக்குமாரத் தம்பிரான் சுவாமிகள் அருளிய

## ஆ சி யு ரை

*பொன்னல ரிதழி யணிசடைக் கூத்தர் புனிதவாய் மலர்ந்தருள் செய்த*
*மன்னரு "உலகெ லா"மெனு முதலே மருவிட முதலிடை கடையும்*
*அன்னக விருடீர்ந் துயிரெலாம் வாழத் தூயசெந் தமிழ்க்குறை நீங்கப்*
*பண்ணருந் தெய்வச் சேக்கிழார் பெருமான் பாடிய திருத்தொண்டர் புராணம்,* 1

*வாழிமா மறையின் மெய்ப்பய னாகி வளர்பெருஞ் சைவசித் தாந்தக்*
*கேழிலா நெறியி னநுபவப் பேறு கிடைத்துய ராவிலாப் பெரியார்*
*பாழிமால் விடையோ னருள்வழிப் படர்ந்த பண்பொடு சரிதமும் விரித்தே*
*ஆழியா ரமுதின் மிகுசுவை யுடைத்தா யருந்தவர் விருந்துமா யினதே.* 2

*உரைதரு நூலின பெருமையா ருணர்வா ரோங்குமா பதியுமா பதியாய்த்*
*தரைதரு முடைய தம்பிரானோர் தெரிதரு கருவ லாறுபெற் றிலமேல் ;*
*திரைத்தரு கடலிற் கலசமார் முனிவராம் தேர்ந்தயா நுரைகண்முன் பல்லோர்*
*உரைத்தன ரிந்நாண் மாக்களு மற்றுங் குறைதய அனைத்துள அரைத்தார்.* 3

*திருத்தகு தெய்வச் சேக்கிழார் பெருமான் றிருவுளச் சம்பிர தாயக்*
*கருத்திது வென்று காட்டிமேற் கோளும் கவின்பெறு சொற்பொரு ணயமும்*
*தெரிந்துமெய்ச் சைவ நெறிமுறை விளக்கிச் சிலர்சிறு நெறியுரை மறுத்தே*
*அருத்திய னறிஞ ரேற்குநல் லுரையீ தன்பினு லளித்தன னம்மா.* 4

*அப்பெருந் தகைதா னொளிற் கோவைக் கவின்மணி விளக்கென வோங்கும்*
*சுப்பிர மணிய முதலியார், பீ. ஏ., எனும்பெயர்த தூயவன் சைவ*
*முப்பெருந் தீக்கை பெற்றரு ணூலின் மொழிசிவ பூசனை புரிவோன் ;*
*இப்புரி சன்பர் பிறரையும் புரிவித் திறையருட் குரியராக் கிடுவோன் ;* 5

வேறு

*செந்த மிழ்ப்பு லஞ்சி றந்த செய்ய சொற்க ளாற்பிர*
*பந்த மாலை கட்டி யெங்கள் பட்டி காய கர்க்கணி*

கந்த சாமி முதலி யார்செய் கணிப்பின் மாத வத்தினால்
மைந்த னாகி வந்து சைவம் வாழ வாழு மாண்பினோன் ; 6

ஆண்டு தோறு மாறி ரண்ட தாயி லங்கு திருமுறை
பூண்ட நேச நியம மாக வோது கின்ற புண்ணியன ;
தாண்ட வஞ்செய் யீச னன்பர் தங்களுக் குகந்ததொண்
டூண்டு மன்பி னோடு செய்தி றைஞ்சு கின்ற வியல்பினோன் ; 7

வேறு

தேவாரம் பண்ணினொடு சிறுவர்களும் பயின்றோதச் செய்து சைவர்க
கோவாத நியதியெனுஞ் சிவதீக்கை முறைபுரிவித் தொழுகச் செய்தோனாம் ;
மாவாழுங் கோவைநகர்த் தமிழ்ச்சங்கம் வளர்த்தவரும் வண்மை யாளன் ;
பாவாணர் மகிழ்பிள்ளைக் கவிகருணை யம்பிகைதாள் பரவிச் செய்தோனாம் , 8

வேறு

இன்ன வாகிய பண்புகள் பிறவுநன் கேய்ந்தோனை ;
தன்ன வாகிய யாவையுஞ் சேக்கிழார் தமதா
முன்னி வாழுமெய் யறிவினோன் முயன்றுசெய் புராண
மன்னி வாழியிவ் வண்ணலு மாகில மிசையே. 9

---

திருக்கோவலூராதீனம் ஸ்ரீமத் ஞானியார் மடாலயம்

ஸ்ரீலஸ்ரீ சிவஷண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்.

சந்நிதி வீதி, திருப்பாதிரிப்புலியூர். யுவ ஆண்டு கன்னி மாதம் 22.

சிவபெருமானது அருட்டிறத்தினையும், அவனடியார் திறத்தினைப் போற்றும் இன்ப முற்ற அடியார் வரலாற்றினையும் அறிவிக்கும் தமிழ்ச் செல்வம் பெரிய புராணமாகிய திருத்தொண்டர் புராணம்.

இந்நூற்குப் பல அறிஞர்கள் முன்னர் உரை கண்டனர்.

உரை காணும் வகை பலதிறத்தது. நம் அன்பர் திருவாளர் C. K. சுப்பிரமணிய முதலியார், பி. ஏ., அவர்கள் கண்டிருக்கும் உரையமைதி சாலச் சிறந்ததொன்றாம். இவ்வுரை பண்டையோர் கொள்கையை ஆராய்ந்து இக்காலத்தினர் போற்றுவன ஏற்பன கொண்டு மிளிர்கின்றது. சொன்னயங்களும் பொருணயங்களும் ஆங்காங்கு நன்கு எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. நூலுள் அடங்கிய உண்மைச் சாத்திரக் கருத்துக்கள் வெளிப்படுத்தப்பட் டிருக்கின்றன.

கற்பார்க்கு வரும் ஐயங்களைத் தன்னுரை கொண்டு பிறர் உரைகளையும் மறுத்து ஒழிக்கின்றது. திருமுறைகளினின்றும் வேறு பழைய நூல்களினின்றும் காட்டப் படும் பகுதிகள் அசைக்க ஒண்ணா நிலையில் அமர்ந்திருக்கின்றன. வேண்டும் இடங் களில் பொழிப்புரையும் பதவுரையும் கருத்துரையும் குறிப்புரையுமாக விளங்குகின்றது இவ்வுரை.

இவ்வுரை கண்ட இவர்களும் இவர்கள் முன்னோர்களும் தமிழ்ப் புலமையிலும் சிறந்து, சிவபூசை செய்வதிலும் சிறந்து, அடியார் பத்தி முதலியவற்றிலும் சிறந்து மேன்மை அடைந்தவர்கள்.

இவ்வுரை நூலுள் காணப்படும் படங்களோ இயற்கைக்கு மாறுபடா அழகை உடையன. இவ்வுரை நூல் வடிவம் காண்பார் கண்களைக் கவரும் கவினைப் பெற்று ஒளிர்வது.

அச்சினிலே இறும்பூது பயக்கும் இயல்பினது.

இன்ப நலம் பல செறிந்த இவ்வுரை நூல் இறவா இன்பந்தரும் சிவபதத்தார்களே யன்றி இன்சுவை ததும்பும் தமிழிலார்வமுடையார் பலரும் கற்று இன்புறத் தகுதி யது. இவ்வுரை நூலைக் கண்டு நாம் பெரிதும் இன்புற்றோம். சிவனருள் சிறக்க; சிவபத்தி வளர்க; இந்நூல் செழிக்க; உலகம் இன்பம் பெறுக.

---

" சித்தாந்தம் "

பெரிய புராணம் என்னும் திருத்தொண்டர் புராணம்

திரு. C. K. சுப்பிரமணிய முதலியார், பி. ஏ. அவர்கள் உரை - முதற் சஞ்சிகை.

இச்சஞ்சிகையைத் திரு. முதலியாரவர்கள் நமது பார்வைக்கு அனுப்பி வைத்த மைக்காக அவர்கட்கு நன்றி கூறுகிறோம். திரு. முதலியாரவர்கள் பெரியபுராணத்தைத் தமது ஆயுள் முழுமையும் பயின்று ஆராயும் சிறந்த நூலாகக் கொண்டுள்ளாரென்பது சைவ உலகம் அறிந்ததொன்று. சில ஆண்டுகட்கு முன் இப்பெரியார் சென்னைப் பல் கலைக் கழகத்தின் ஆதரவில் பெரிய புராணத்தையும் சேக்கிழாரையும் பற்றிய சொற் பொழிவுகள் சிலவற்றை நிகழ்த்தியதும் அன்பர் பலர் நினைவிலிருக்கும். இவ்வுரை வெளியீட்டில் தமக்குத் தேவார முதலிய திருமுறைகளிலுள்ள சிறந்த பயிற்சி, நுண் ணிய ஆராய்ச்சி முதலியவைகட்கேற்ப இவ்வுரையாசிரியர் பற்பல நுட்பமான பொருள் களை மிகத் திறம்படத் திருமுறை மேற்கோள்களோடு விளக்கியுள்ளது பெரிதும் பாராட்டத்தக்கது. கல்வெட்டு முதலிய சரித்திரச் சான்றுகளும், தில்லை, திருக்கைலா யம் முதலிய தலங்களின் படங்களும் இந்நூற்றாண்டுக் கேற்ற முறையில் இவ்வெளி யீட்டில் சேர்க்கப் பெற்றுள்ளன. திருமுறை யாராய்ச்சியில் தலைசிறந்து விளங்கிய காலஞ்சென்ற கயப்பாக்கம்-சதாசிவ செட்டியார், பி. ஏ. அவர்களது குறிப்புரைகளும் இடையிடையே தரப்பெற்றுள்ளன.

பெரிய புராணத்தை ஒரு சமய நூலாகமட்டும் கொள்ளாது ஒரு சிறந்த தமிழ்க் காவிய நூலாகக் கொண்டு காவியச் சுவை நிரம்பிய பகுதிகளை இவ்வுரையாசிரியர் செம்மையாக விளக்கியுள்ளது மிகவும் விரும்பத்தக்க முறையேயாம். இந்நூலிற் பொதிந்து கிடக்கும் சாத்திரக் கருத்துக்கள் பல, உந்தி களிறு உயர்போதம் சித்தி முதலிய சிறந்த சாத்திர மேற்கோள்களோடு விளக்கப் பெற்றுள்ளன.

தமிழிலும் சைவத்திலும் பற்றுடைய ஒவ்வொருவரும் இவ்வுரை வெளியீட்டை வாங்கிப் பயன் பெறுக. இப்பெரும் பணி முட்டின்றி முடிதற்குரிய எல்லா நலங்களை யும் திரு. முதலியாரவர்கட்கு முழுமுதற் கடவுள் அளிப்பாராக.

---

" ஞானசித்தி "

இலங்கை—யுவ௵ புரட்டாசி௴ 15௳ - 1935௵ அக்டோபர்௴ 1௳

**பெரியபுராண மூலமும் உரையும் - முதற் சஞ்சிகை:**—கோவைத் தமிழ்ச் சங்கத்தா ரிடமிருந்து உரையுடன் கூடிய பெரிய புராண முதற் சஞ்சிகை யொன்று மதிப்பு ரைக்காக நமது பார்வைக்கு வந்திருக்கிறது. அதனை நாம் ஆங்காங்குப் பன்முறை படித்துப் பார்த்தோம். அது நமக்கு மிகவும் மகிழ்ச்சியை விளைவித்தது.

சைவ சமயத்திற்குப் பெரிய புராணம், கந்தபுராணம், திருவிளையாடற் புராணம் என்னும் மூன்றும் மூன்று கண்களென்று கூறுப. அத்தகைய மூன்றனுள் ஒன்றாகிய பெரிய புராணத்திற்கு உரை காணும் தகுதி எல்லாருக்கும் இயைவதன்று.

சைவ சமய நூல்களுள் தலைசிறந்து விளங்கும் பெரிய புராணமென்னும் அருட் காவியத்திற்குப் பல்வகை நயமும் ஒருங்கமைந்த உரையொன்று வைதிக சைவ நன் மக்களுக்கு வேண்டற்பாலதேயாம்.

சென்னைப் பல்கலைக் கழக உறுப்பினரும், வழக்கறிஞரும் ஆகிய திரு. C.K. சுப்பிரமணிய முதலியார், பி. ஏ., அவர்களால் மூலபாடத்தை எடுத்து முதலிறுதிகளை அனுவதித்துக் கொண்டு பொழிப்புத் திரட்டியும், பின்னர்ப் பதசாரத்தை விளக்கியும், எழுத்திலக்கணமும் சொல்லிலக்கணமும் கூறியும், தேவார திருவாசகங்களிலும் பதினான்கு சைவ சித்தாந்த சாத்திரங்களிலும் திருக்குறள் கம்ப ராமாயண முதலிய நூல்களிலும் மேற்கோள் எடுத்துக் காட்டிப் பொருள் நிச்சயஞ் செய்தும் எழுதப்பட்டிருக்கும் இவ்வரிய பெரிய ஆராய்ச்சியுரை கற்போர்க்குப் பெரிதும் பயன் தருமென்று கூறுவது சிறிதும் மிகையாகாது.

மேற்றிசைக் கல்விமான்கள் வரம்பு கடந்து பழைய வைதிக சைவக் கொள்கைக்கு மாறாக இந்நாளில் எழுதிவரும் வியாசங்களைப் படித்து மனநிலை தடுமாறி வரும் இக்கால மக்களுக்கு இவ்வுரை பெரிதும் பயன்படுமென்று நினைக்கின்றோம்

---

## "செந்தமிழ்ச் செல்வி"

(யுவ௵ வைகாசி௴)

சென்னைப் பல்கலைக்கழக உறுப்பினரும், கோவைத் தமிழ்ச்சங்கத் அவைத் தலைவரும், வழக்கறிஞருமாகிய சைவத் திருவாளர் - C. K. சுப்பிரமணிய முதலியார், B. A. அவர்கள் தாம் நெடுங்கால முயன்று அரிதிற் சேர்த்த ஆராய்ச்சிக் குறிப்புக்களுடனும், தலக் குறிப்புக்களுடனும், வரலாற்றுக் குறிப்புக்களுடனும், பல படங்களுடனும் கண்ணைக் கவரும் வகையில் ஒரு விரிவாராய்ச்சியுரை எழுதிச் சஞ்சிகை சஞ்சிகையாக வெளியிட முன்வந்ததைக் கண்டு கழிபேருவகை யெய்துகின்றோம். முதற்சஞ்சிகை எதிர்பார்த்த அளவிற்கு மேலாகப் பல அரிய பெரிய உண்மைக் குறிப்புக்களையுட்கொண்டிருத்தலினாலே இவ்வுரை மற்றிதுகாறும் வெளிவந்துள்ள உரைகள் பலவற்றினும் மேம்பட்டதாய் விளங்கும் எனத் துணிந்து கூறலாம்......................சிறந்த இவ்வுரை வெளிவருவதற்குப் பலவாற்றானும் துணைபுரியும் கோவைத் தமிழ்ச் சங்கத்தார் திருப்பணி பெரிதும் பாராட்டற் குரித்தாம்.

---

## "இந்துசாதனம்"

(இலங்கை—யுவ௵ புரட்டாசி௴ 16௳)

**பெரிய புராணமென்னுந் திருத்தொண்டர் புராணம்:**—சென்னைச் சர்வகலா சங்க அங்கத்தினரும், அதன் கலைக்குழு உறுப்பினரும், கோவைத் தமிழ்ச்சங்க உபதலைவருமாய சைவத்திரு. C. K. சுப்பிரமணிய முதலியார் B.A., அவர்கள் சைவ சமயத்திற் கொண்டுள்ள அபிமானங் காரணமாக, மேற்படி புராணத்தை ஆங்காங்கு வேண்டிய ஆராய்ச்சிக் குறிப்புக்களுடனும், தலக்குறிப்புக்களுடனும், இன்னும் பல அரிய விஷயங்களுடனும் வெளியிட்டுள்ளார். ஆரிருள் வாய்ப்பட்டு அவஸ்தைப்படும் சைவசமயிகட்கு ஒரு விளக்கொளி கிடைத்தன்னவாய் முதலியாரவர்கள் செய்துவரும் திருத்தொண்டு பெரிதும் பாராட்டப்படத்தக்கதொன்றாம். சைவ சித்தாந்த உண்மைகளையும், கருத்துக்களையும் எடுத்துக்காட்டிச் செல்லும் ஒழுங்கு படிக்கப்படிக்கத் தெவிட்டா இன்பந் தருகின்றது. சைவசமயச் சரிதைகளை எம்மனோர்க்கு எடுத்துக்காட்டுவது பெரியபுராணமொன்றே. இத்தகைய புராணத்தைத் தக்கமுறையில் படிப்போர் மனதிற் பதியும் வண்ணம் உரையெழுதிய இவ்வாசிரியர்க்குச் சைவமக்களாகிய நாமெல்லாரும் பெரிதுங் கடப்பாடுடையேமாவேம். பொற்பூவுக்கு நாற்றமுடைத்தன்னவாய் நல்ல காகிதத்தில் அழகாகக் கண்ணைக் கவரும் பான்மையதாய் அச்சிடப்பெற்றிருக்கிறது.

---

சிவப்பிரம்மஸ்ரீ. G. சிவசுப்ரமண்யக் குருக்கள் அவர்கள்.
காரியதரிசி, சொர்ணாம்பிகா சைவ சித்தாந்த சபை, சேலம்.

## ஆ சி யு ரை

கோவையம் பதியிற் பேரூர்க் கோநட ராசன் கோயிற்
சேவைசெய் தடிப ணிநத செந்தமிழ்க் கந்த சாமிப்
பூவையின் வயிற்று தித்த புதல்வனற் சுப்ர மண்யன்
சேவையர் சேக்கி ழாரின் திருமுறைக் குரைசொற் றுனல்.

உரைநடைப் பொருட்க ருத்தின் உண்மையை விளக்கு மிந்நூல்
திரைகடல் சூழ வெங்குஞ் சிறப்புற விளங்கப் பெம்மான்
நரைபிணி மயக்க றுத்து நன்மனம் பொலிய வன்னோன்
கரையிலாப் புவியி னென்றுங் கனிவுரை நிகழ்த்தி வாழ்க.

நம் சிவனநாதன் ஆதிரைத் திருநடங் கண்டபோழ்து மலர் சிலம்படி வாழ்த்தி - வணங்கிப் - பெற்ற திருவருட்டிருநீறு இத்துடன் அனுப்பப் பெற்றுளது. அணிந்து அமலன் அருளால் விரைவிற் "பெரியபுராண உரை வெளியீட்டுப் பணி" நிறை வேற்றிப் பேரானந்தப் பெருவாழ்வு அருளி அனபின்வழி நிற்பீர் ஆகுக.

உரைச் சிறப்பு—வரிசை 149-வது சுந்தரமூர்த்தி சுவாமியின் திருஅவதாரச் செய்யுளுக்கு உரை கண்டருளும்போது ஆதிசைவ மரபின் பெருமையையும் நிலைமை யையும் குறிப்பிட்டு எங்கள் சமூகத்திற்கே ஊக்கததையும், அன்பர்கள் பலர்க்கும் ஆதி சைவரிடத்துப் பற்றும் கருணையும் நிரம்பும் ஏதுவையும் உதவியதுபோல அனேக நல்லறிவுச் சுடரொளிகள் இவ்வுரையில் வீசுகின்றன. வரிசை 407-வது செய்யுளில் இயற்பகைக்கு அருள் புரிந்தவிடத்து 'அம்மையார் திரோத சத்தியாய் நின்று அருட் சத்தியின் தொழிலியற்றினர்' எனும் சிவாகமக் கருத்து நமது பேருரையில் மிளிர் வது கண்டு மகிழ்ந்தனன். பற்பல விசேட உரைகளும் இதில் இலங்குகின்றன. காலத் திற்கேற்ப மக்களின் ஐயம் நீக்கி நல்லுணர்வு தரும் பொன்மொழிகள் நிறைந்து திகழ் கின்றன.

ஆசி—இவ்வரிய உரை நூலை உலகிற்கு உதவிவரும் பெருந்தகைமைக்கு எம்மா லாய உதவி இறைவன் எங்குருநாதன் ஞானஸ்கந்தன் திருவடியிணைபற்றித் தங்கட்கு நிறையாயுளும், நோயற்ற வாழ்வும், தளரா நன்மனமும், மறவா அன்பும் நிறைந்து தாங்கள் நீடூழி வாழ நல்லாசி பகர்நதனம்.

வேண்டுகோள்—நமது ஆதிசைவ மரபினர் அனைவரும் இவ்வுரைநூலைப் பெற்று வாசிப்பதால் தமிழ் - திருமுறை - சித்தாந்தம் - வேதாகம நுண்பொருள் முதலியவை களைச் சுலபமாக அறிந்துகொள்ள இவவுரை ஓர் திறவுகோலாக உதவும். ஆதலின் ஒவ்வொருவரும் இவ்வுரைநூலைப் பெற்றுக் கற்றுணர்ந்து ஆர்வமிகு மன்பினராய் முப்போதும் அர்ச்சிதது ஆலாலசுந்தரர், நம்பியாண்டார் நம்பி, அருணநதிசிவம், முதலிய நமது பரமாசாரியர்களின் அருளைக் கடைப்பிடிதது உய்ய வேண்டுகின்றேன். சிவாலய தருமபரிபாலகர்கள் தஙகள் பார்வையில் வாங்கிவைத்தும், பாராயணம் செய் விதநும், பூசித்தும், ஆலய தத்துவங்களை அன்பர்களுக்கு உணர்த்தி வைக்க முன்வரு வார்களென்றும் கோருகிறேன். பல வழிகளிலும் இவ்வுரை நூலைப் பரவச் செய்வது சைவர்களது கடமை.

---

மகாமகோபாத்யாய, தாட்சிணாத்ய கலாநிதி
பிரம்மஸ்ரீ டாக்டர். உ. வே. சாமிநாதய்யர் அவர்கள்.

சொற்பொருட் சுவை மலிந்த நூலாகிய பெரிய புராணத்தைப் பலர் பல வருஷங்களாக ஆராய்ந்து குறிப்புரையும் விரிவுரையும் எழுதிப் பகுதிகளாகவும், முழுப் புத்தகமாகவும் வெளியிட்டிருக்கின்றனர். கோயம்புத்தூர் வழக்கறிஞராகவுள்ள ம-ா-ா-ஸ்ரீ வி. சே. சுப்பிரமணிய முதலியாரவர்கள், விரிவான உரையுடன் வெளியிட்டு வரும் பெரியபுராணச் சஞ்சிகைகள் சிலவற்றைப் படித்துப் பார்த்தேன். இவ்வுரை முதலியார் அவர்களுடைய ஆராய்ச்சித் திறனையும், கல்வி யாற்றலையும் நன்கு விளக்குகின்றது.

தல சம்பந்தமான செய்திகளும், வேறு நூற் கருத்துக்களும், மேற்கோள்களும், சாஸனப் பகுதிகளும், படங்களும் இவ்வுரையில் உரிய இடங்களில் மிகநன்கு அமைந்துள்ளன. இவ்வளவு உழைத்து எழுதப்பட்ட உரை இந்நூலுக்கு இதுகாறும் இல்லை. இவ்வுரையைப் படிப்பவர்களுக்குப் பல அருமையான செய்திகள் விளங்கும்.

முதலியாரவர்களுடைய நன்முயற்சி அவர்களுக்குப் புகழ் புண்ணியங்களை யளிக்குமென்பதில் ஐயமில்லை.

---

திருவாளர் - பண்டிதமணி - மு. கதிரேசன் செட்டியார் அவர்கள்,
அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர், அண்ணாமலைநகர்.

தாங்கள் அரிதின் ஆராய்ந்து இயற்றிய பெரியபுராண உரைப் பகுதிகளை ஆங்காங்குப் படித்துப் பார்த்தேன். என உள்ளத்தை மிகவும் இன்புறுத்தின. இதுவரை வெளிப்பட்ட உரைகளுள் இது சிறந்ததாகும் என்பதற்குப் பல சான்றுகளுள்ளன. முதலிற் பொழிப்பாகத் திரட்டியும், பின்னர்ச் சொற்பொருணயங்களைத் தனித்தனியே எடுத்து விளக்கியும், சைவ சித்தாந்தக் கருத்துக்களை உரிய இடங்களில் இயைத்துக் காட்டியும் செல்லும் உரைநடை ஒழுங்கு பயில்வார்களுக்குப் பெரிதும் உபகாரமாகும். சைவசமய சரித்த தலைநூல் பெரியபுராணமாகும். அதற்கு உரைகாணும் தகுதி பல வகையிலும் தங்களுக்கு உள்ளதென்பதை இத்தமிழ்நாடு நன்கு அறியும். ஒவ்வொரு சஞ்சிகையின் பதிப்பு அழகு கண்ணைக் கவர்கின்றது. இங்ஙனம் உள்ளுறைப் பொருளும் புற அமைப்பும் ஒருங்கு சிறந்து விளங்கும் தங்கள் உரை வெளியீடு தமிழ் நிலத்தார்க்கு இவ்வமயம் இன்றியமையாததாகும்.

---

திருவாளர் - T. B. கிருஷ்ணசாமி முதலியார் அவர்கள், M.A., B.L.,
ஜில்லாக்கல்வி அதிபர், தென்னாற்காடு.

" ......It is a most meritorious work "

---

திருவாளர் - பண்டிதர். ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள்
தமிழ்ப் பேராசிரியர், பல்கலைக்கழகம், அண்ணாமலைநகர்.

தாங்கள் அரிதின் ஆராய்ந்தறிந்து திரட்டி வெளியிடும் அரும்பொருள்களைச் சுவைத்துப் பயனுறுதற்கு இன்னும் பருவம் வரப் பெறுதேனாயுள்ளேன் என்பதனை நாணத்துடன் தெரிவிக்கவேண்டியிருக்கிறது. எனினும் சின்னாளில் அவற்றைப் பெரிதும் துய்த்து மகிழுவேன் என நம்பியுள்ளேன். இங்ஙனம் பொருள் நுட்பங்களை இன்னுஞ் சுவைத்திலேனாயினும் வெளியீட்டிற் காணப்படும் பலவகைச் சிறப்புக்களையும் அவற்றிற்கான தங்கள் அருமுயற்சிகளையும் அறிந்து மகிழ்ந்துகொண்டிருக்கின்றேன். வெளியீட்டில் வந்துகொண்டிருக்கும் படங்கள் சரித்திரங்களின் உண்மைத் தன்மையை விளக்கி யாவர்க்கும் புதிய உணர்ச்சியை எழுப்புவனவாமென்று துணிகின்றேன்.

## திருவாளர். ச. சச்சிதாநந்தம் பிள்ளை அவர்கள், B. A., L. T.,

*சென்னை நகராண்மைக் கழகம், கல்வி இலாக்காத் தலைவர்.*

உலகெலாமுணர்ந் தோதற்கரிய ஒருத்தனது திருத்தொண்டரியல்பை உள்ள வாறு உணர்ந்து இனி தெடுத்தோதல் தெய்வச் சேக்கிழார்க் கல்லது தேவர்க்கும் அரிது என்ப. அங்ஙனம் அவர் விரித்தோதிய திருத்தொண்டர் புராணத்திற் செம் பாகமாய்ப் பலர்க்கும் புலப்படும் பொருள்கள்தாமே அளவிலாத பெருமையும், மக்களை ஒளி நெறியிற் செலுத்தும் ஆற்றலும் உடையன. மற்றும் அத்தனிப் பெருநூலிற் செறிந்து கிடக்கும் விழுமிய சொற்பொருள்களின் திட்ப நுட்பங்கள் பல. ஆன்றோர் எடுத்துக் காட்டி உபகரித்தாலன்றி, அவை பெரும்பாலார் அறிவிற்கு எட்டக் கூடியன வல்ல. ஆதலின் எளிமையும் அருமையும் ஒருங்கு படைத்த இப்பெரிய புராணத்திற்கு அறிஞர்கள் உரை அவசியமாகும்.

இவ்வாறு இந்நூற்கு இதுவரையிற் பலவகை உரைகண்டுதவினோர் சுமார் எண்ம ராவர். அவருரைகளுள் ஒரு சிலவே அகலவுரையா யமைந்தவை; பிறவெல்லாம் குறிப் புரைகளாகும். இதுபோழ்து, சைவத் திருவாளர் C. K. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் வெளியிட்டு வரும் பரந்த உரையானது, முன்னே வெளிவந்துள்ள உரை களின் நலங்களனைத்தையும் தன்பாற் கொண்டிலங்குகின்றது. அதனோடு, அவற்றிற் காணப்பெறாத வேறு பல நயங்களையும், சரித்திரக் குறிப்புக்கள், புராண வரலாற்றுத் தொடர்புள்ள படங்கள், தலவிசேடங்கள், தேவாராதி அருட்பாக்களின் நுணுக்கங்கள், சைவ சம்பிரதாய மேன்மைகள் முதலிய அரிய பொருள்களையும் வழங்கும் அருள்சேர் அறிவுக் களஞ்சியமாய் உள்ளது. அன்றியும், இவ்வுரையாசிரியர், பெரிய புராணங் காட்டும் பெருங் குறிக்கோளையும், அதனை அடைதற் கமைந்த அறத்தாற்றின் உயர் வையும் ஒரு புறமும், தற்கால வாழ்விற் காணும் சிறு குறிக்கோளையும் அதை நோக்கிச் செல்லும் மறத்தாற்றின இழிவையும் மற்றொரு புறமுமாக ஆங்காங்கு எடுத்துக் காட் டிச் செல்கின்றார். இதனால், "புலனொடு தியங்கும் பொய்யுளங் கடந்த"வன் முதல்வன் என்பதும், மக்கள் "ஊன் நோக்கும் இன்பம் வேண்டி உழலாதே, வான் நோக்கும் வழி" யிற்றலே மாண்பாம் என்பதும் மனத்தில் நன்றாய்ப் பதிகின்றன.

செந்தமிழறிவிலும், சிவபத்தியிலும் சிறந்து விளங்கும் திருவாளர் முதலியாரவர் கள் பெரிய புராணத்தைப் பல ஆண்டுகளாகச் சமயக் கண்ணுஞ் சாத்திரக் கண்ணுங் கொண்டு பேரன்புடனும் பயபத்தியுடனும் தாமே பன்முறை ஆராய்ந்து வந்துள்ளார் கள். அதனோடு சைவத் திருவாளர் - க. சதாசிவ செட்டியாரவர்கள் போன்ற திருமுறை யாராய்ச்சி வல்ல பெருமக்களோடு அளவளாவிப் பெற்ற அரிய நுட்பங்களைக் கேட்டுச் சேமித்து வைத்துள்ளார்கள். இவற்றின் பயனாகக் கிடைத்த நுண்பொருள்களை யெல் லாம் "நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" எனனும் சைவ நன்னெறி கடைப் பிடித்து நம்மனோர்க்கு இப்பதிப்பின் வாயிலாக வழங்கி வருகின்றார்கள்.

தமிழ்ப் பெருநூலாகிய இதன் வெளியீட்டிற்குச் சென்னைப் பல்கலைக் கழகத் தார் ஆதரவளித்திருப்பது அவர்கட்கு அழகு செய்வ தொன்றாம். பெறுதற்கரிய பெருநிதியாய் விளங்கும் இப்பெரியபுராணப் பதிப்பைப் பொதுவாகத் தமிழன்பர் அனைவரும், சிறப்பாகச் சைவ நல்லோரும் விரும்பிப் பெற்றுப் பயனடைதல் அவர் கட்குரிய கடமையாகும்.

## திருவாளர். ச. சச்சிதாநந்தம் பிள்ளை அவர்கள், B. A., L. T.,

*சென்னை நகராண்மைக் கழகம், கல்வி இலாக்காத் தலைவர்.*

உலகெலாமுணர்ந் தோதற்கரிய ஒருத்தனது திருத்தொண்டரியல்பை உள்ள வாறு உணர்ந்து இனி தெடுத்தோதல் தெய்வச் சேக்கிழார்க் கல்லது தேவர்க்கும் அரிது என்ப. அங்ஙனம் அவர் விரித்தோதிய திருத்தொண்டர் புராணத்திற் செம்பாகமாய்ப் பலர்க்கும் புலப்படும் பொருள்கள்தாமே அளவிலாத பெருமையும், மக்களை ஒளி நெறியிற் செலுத்தும் ஆற்றலும் உடையன. மற்றும் அத்தனிப் பெருநூலிற் செறிந்து கிடக்கும் விழுமிய சொற்பொருள்களின் திட்ப நுட்பங்கள் பல. ஆனரேர் எடுத்துக் காட்டி உபகரித்தாலன்றி, அவை பெரும்பாலார் அறிவிற்கு எட்டக் கூடியன வல்ல. ஆதலின் எளிமையும் அருமையும் ஒருங்கு படைத்த இப்பெரிய புராணத்திற்கு அறிஞர்கள் உரை அவசியமாகும்.

இவ்வாறு இந்நூற்கு இதுவரையிற் பலவகை உரைகண்டுதவினோர் சுமார் எண்மராவர். அவருரைகளுள் ஒரு சிலவே அகலவுரையா யமைந்தவை; பிறவெல்லாம் குறிப்புரைகளாகும். இதுபோழ்து, சைவத் திருவாளர் C. K. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் வெளியிட்டு வரும் பரந்த உரையானது, முன்னே வெளிவந்துள்ள உரைகளின் நலங்களனைத்தையும் தன்பாற் கொண்டிலங்குகின்றது. அதனோடு, அவற்றிற் காணப்பெறாத வேறு பல நயங்களையும், சரித்திரக் குறிப்புக்கள், புராண வரலாற்றுத் தொடர்புள்ள படங்கள், தலவிசேடங்கள், தேவாராதி அருட்பாக்களின் நுணுக்கங்கள், சைவ சம்பிரதாய மேன்மைகள் முதலிய அரிய பொருள்களையும் வழங்கும் அருள்சேர் அறிவுக் களஞ்சியமாய் உள்ளது. அன்றியும், இவ்வுரையாசிரியர், பெரிய புராணங் காட்டும் பெருங் குறிக்கோளையும், அதனை அடைதற் கமைந்த அறத்தாற்றின உயர்வையும் ஒரு புறமும், தற்கால வாழ்விற் காணும் சிறு குறிக்கோளையும் அதை நோக்கிச் செல்லும் மறத்தாற்றின இழிவையும் மற்றொரு புறமுமாக ஆங்காங்கு எடுத்துக் காட்டிச் செல்கின்றார். இதனால், "புலனொடு தியங்கும் பொய்யுளங் கடந்த"வன் முதல்வன் என்பதும், மக்கள் "ஊன நோக்கும் இன்பம் வேண்டி உழலாதே, வான் நோக்கும் வழி" நிற்றலே மாண்பாம் என்பதும் மனத்தில் நன்றாய்ப் பதிகின்றன.

செந்தமிழறிவிலும், சிவபத்தியிலும் சிறந்து விளங்கும் திருவாளர் முதலியாரவர்கள் பெரிய புராணத்தைப் பல ஆண்டுகளாகச் சமயக் கண்ணுஞ் சாத்திரக் கண்ணுங் கொண்டு பேரன்புடனும் பயபத்தியுடனும் தாமே பன்முறை ஆராய்ந்து வந்துள்ளார்கள். அதனோடு சைவத் திருவாளர் - க. சதாசிவ செட்டியாரவர்கள் போன்ற திருமுறையாராய்ச்சி வல்ல பெருமக்களோடு அளவளாவிப் பெற்ற அரிய நுட்பங்களைக் கேட்டுச் சேமித்து வைத்துள்ளார்கள். இவற்றின் பயனாகக் கிடைத்த நுண்பொருள்களை யெல்லாம் "நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்னும் சைவ நன்னெறி கடைப்பிடித்து நம்மனோர்க்கு இப்பதிப்பின் வாயிலாக வழங்கி வருகின்றார்கள்.

தமிழ்ப் பெருநூலாகிய இதனை வெளியீட்டிற்குச் சென்னைப் பல்கலைக் கழகத்தார் ஆதரவளித்திருப்பது அவர்கட்கு அழகு செய்வ தொன்றாம். பெறுதற்கரிய பெருநிதியாய் விளங்கும் இப்பெரியபுராணப் பதிப்பைப் பொதுவாகத் தமிழன்பர் அனைவரும், சிறப்பாகச் சைவ செல்வோரும் விரும்பிப் பெற்றுப் பயனடைதல் அவர்கட்குரிய கடமையாகும்.

உ

சிவமயம்

# சிறப்புப்பாயிரம்

---

சென்னை. திரு. ரா. சண்முகசுந்தரஞ் செட்டியார் அவர்கள் இயற்றியது.

மணிநீர் வரைப்பின் மன்னிய மக்கள்
மணிமுடி யிந்திரன் மாலயன் முதலாந்
தேவரு மறியாத திருவுரு வுடையோன்
ஏவருந் தெளிய வெழிலுருக் கொள்வோன்
கறையணி கண்டமுங் கவின்பெறு மேனியும்
நிறையணி பொடியும் நேர்மையாக் கொண்டோன்
அவன்றனைச் சிவனென வரனென வன்பொடு
பவமறு புண்ணியர் பாடும் பான்மையர்
"கேடு மாக்கமுங் கெட்ட திருவினர்
ஓடுஞ் செம்பொனு மொக்கவே நோக்குவார்
கூடு மன்பினிற் கும்பிடலே யன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கி"ய
பல்வகை யடியார் பரந்த புகழ்தனைச்
சில்வகைச் செய்யுளிற் செவ்விதி னுரைப்பது
நன்று டனைப்படுந் தொண்டை நாட்டினிற்
குன்றைப் பதிவாழ் கோதிலாச் செம்மல்
சேவுகைத் தேறிடுஞ் செல்வனை நினைவோன்
சேக்கிழா னென்னுஞ் சிறந்த புகழோன்
அவநெறி புகாம லநபாய வேந்தலைச்
சிவநெறி படரச் செந்நெறிப் புகுத்திய
பெருமை சான்ற பெரிய புராணமென்
றரும்பொருள் திரட்டி யடியவர்க் கருளுந்
தன்னே ரில்லாப் பொற்கிழி தனக்குத்
தொன்னூற் றுறைபோஞ் செந்நாப் புலவர்
விரிவுரை குறிப்புரை வகுத்தனர் பலரே ;
விரிவுரை தம்முள் விளங்கிய பொருளொடு
பின்னோர் வேண்டும் விகற்ப மனைத்தும்
தொன்முறை வழாது தொகுத்தும் விரித்தும்
ஆய்ந்துற நோக்கி யழகுற வமைத்து
ஏய்ந்துள பொருளெலா மெளிதிற் றெளியத்
தருகென வருதனன் தாவில்சீர்ப் பயனைத்
தருவென வளிக்குந் தன்மை வளமிகு
கொண்மூ வுறங்குங் கோவை தன்னுள்
வண்டமிழ் வளர்த்த வேளாண் டலைவன்
கந்த னீன்ற காதற் றனயன் ;
பந்த நீக்கு பனுவல்கள் பன்முறை
திருச்சிற் றம்பலத் திருத்தகு குரவன்

திருவடிச் சார்ந்து திருந்த வோதினோன் ;
சைவம் மிகுத்த சதாசிவத் தோன்றல்
பௌவப் பிறவிப் பரிபவம் போக்க
மொழிந்த பொருளை முறையோ டுணர்ந்தோன் ;
ஏனைய கலைகளோ டாங்கில முணர்ந்தோன் ;
வழக்கு நெறியை வளமொடு பயின்று
ஒழுக்க நெறியினி லுறைப்புட னிற்போன் ;
கனிந்த மனமுடன் கண்கணீர் மல்கத்
தொனிப்பொருள் பலவொடு தொண்டர்தங் காதை
காதலிற் கசிந்து கழறிடுங் கருத்தன் ;
வேத நான்கினும் மெய்ப்பொரு ளாகிய
நாத னாம நயப்புற நவில்வோன் ;
ஓது மறையினு மொளிதிகழ் திருமுறை
நாளு மோதிடும் நற்றவ ; னன்பினால்
மெய்த்த ளைந்து விதிர்ப்புறு சிந்தையார்,
கைத்திருத் தொண்டு செய்கடப் பாட்டினார்,
இத்திறத் தவரா னியும்மே தக்க
சீலமு நோன்புஞ் செறிவு மோங்கிடும்
முத்துக் கற்பக முனிவ ருணர்த்திய
வித்தகப் பூசை விறலுடன் புரிவோன் ;
பேரு ருறைவான் பட்டிப் பெருமான்
தேரூர் சிறப்பிற் சிறப்புகள் செய்வோன் ;
பத்தர்சீர் பரவும் பண்பன்
மெய்த்தவன் சுப்பிர மணியன் மூனே.



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# முகவுரைக்கு முன்னுரை

முகவுரை யென்பது நூலுக்கு முன்னே இருக்கும் பகுதியாம். ஆனால் அதைப் பெரும்பாலும் நூல் முடிந்தபின் கடைசியில்தான் எழுதுவார்கள். கடைசியில் எழுதி முன்னே வைப்பார்கள். அது போலவே நானும் இவ்வுரைக்கு ஒரு முகவுரை எழுத எண்ணியுள்ளேன். எனது உரைப்பதிப்பு இப்போதுதான் தொடங்குகிறது. இஃது இறைவனருளால் நிறைவேறுமானால் அதற்கு ஒன்றிரண்டு ஆண்டுகள் செல்லும். அதன் பிறகு தானே முகவுரை நான் எழுதவேண்டி வரும். ஆனால் இது வெளியிடத் தொடங்கும் இப்போது ஒரு முகவுரையு மில்லாமல் வெளியிட நான் விரும்பவில்லை. ஆதலின் பின்னே எழுதும் முகவுரை எப்படியோ இறைவன் அருள்வழி வருவது வருக. இப்போதைக்கு இதனை அந்த முகவுரைக்கு முன்னுரையாக வைத்துக் கொள்ளுமாறு அன்பர்களை வேண்டுவன்.

பெரிய புராணம் என்னும் திருத்தொண்டர் புராணத்துக்குக் குறிப்புக்களுடன் ஒரு பதிப்பு வெளியிடலாம் என்ற எண்ணம் மூன்று நான்கு ஆண்டுகளாக என்னுள் எழுந்து நின்றது. உரிய படங்களும் தேவாரக் குறிப்புக்களும் பழய ஏட்டுப் பிரதிகளிற் கண்ட பாடபேதங்களும் அதில் வெளிவர வேண்டுமென்றும் விரும்பினேன். ஆனால் இப்போது என் செயல் எனக்கே நகையினை மிறுத்துகின்றது புராணத்தின் அளவு கடந்த பெருமைக்கும், எனது அளவு கடந்த சிறுமைக்கும் எத்தனை தூரம் என்று. ஆயினும் அந்த ஆசை என்னைவிட வில்லை. ஆசை அச்சத்தை விழுங்கி மேலெழுந்தது.

பெரிய புராணத்திலே எனது இளமை முதல் எனையறியாமல் ஒரு விருப்பம் உண்டாகி வளர்ந்து வந்தது. 1894-ம் ஆண்டில் எனது ஆசிரியராகிய பண்டிதர் ஸ்ரீமத் ச. திருச்சிற்றம்பலம் பிள்ளையவர்களை அடுத்து நான தமிழ் பயிலத் தொடங்கினேன். அவர் எனக்குத தாயினு மினியர். தமிழ் அமுதினை எனது கீழ்த்தரமறிந்து அதற்குத் தக்கபடி செவ்விதி னூட்டுவர். அவர் இவ்வுலகை நீதது இறைவன் திருவடி யடைந்த 1906-ம் ஆண்டுவரை அவரது பாதசேவையும் நல்லுபதேசப் பயனும் பெற்றேன். பெரிய புராணத்திலும் சிற்சில பாட்டுக்கள் மட்டும் எனக்கு அவர்கள் பாடஞ் சொன்னதுண்டு. பள்ளிச் சிறுவனும் பக்குவமுடையே னாதலின் முறையாகவோ முழுதுமோ பாடங் கேட்கப் பெற்றேனில்லை. நானும் கேட்கவில்லை. அவரும் சொல்லவில்லை. ஆனால் அப்போதே பெரிய புராணத்திலே பெரிய விருப்பத்தை மட்டும் அவர்கள் என் மனத்திலே புகுதவிட்டார்கள். "பெரிய புராணத்தை மற்ற தமிழ் இலக்கியங்கள் புராணங்கள் முதலியவற்றோடு ஒன்றாக நீ நினையாதே. அதன் பெருமை மிகப் பெரிது. உலக நிலையில் அறியத்தக்க சிறிய பொருள்கள்முதல் முத்தி நிலையிற் காணும் பெரிய பொருள்கள்வரை எல்லாப் பொருள்களும் இதில் உண்டு. சாப்பிட இலைபோடும் மரபுகூட இதிற் சொல்லியிருப்பது பார் (ஈர்வாய் வலம்பெற மாபின் வைததார் - அப்பூதி - 39) எனறெல்லாம் அவர் அவ்வப்போது எனக்கு அங்கங்கே எடுத்துக்காட்டும் சொற்கள் இப்போதும் என் காதிற்குள் ஒலிக்கின்றன. அவர் செய்த சிற்சில அரிய பெரியபுராணப் பிரசங்கங்களையும் நான் உடனிருந்து கேட்கும் பேறும் பெற்றேன. இராமாயணத்தில் வல்ல பிரசங்கியாராகிய சேலம் வித்வான் திரு. சரவணபிள்ளை என்பவர் அவரது நண்பர். அவர் ஒருநாள் எனது ஆசிரியர் வீட்டில் கம்பராமாயணம் - குகப்படலம் - பிரசங்கம் செய்தார். அதில் "வந்தெதிரே

தொழுதானை", "கங்கை யிருகரை யுடையான்" என்ற பாட்டுக்களுக்கு அனேகம் உரைகள் எடுத்துப் பொருந்தச் சொல்லி அழகாக உபந்நியசித்தார். அது என் மனதைக் கவர்ந்தது. அதுபற்றி நான் எனது ஆசிரியரிடம் கூறினேன். அதற்கு அவர் "இதைவிட மிக அதிகமாகப் பெரியபுராணப் பாடல்களிலே எங்கும் சிறந்த அழகான பொருள்கள் பல கிடைக்கும். நான் சொல்கிறேன் பார்" என்று ஒருநாள் நண்பர் ஒருவர் வீட்டில் இயற்பகை நாயனர் புராணம் பிரசங்கம் செய்யும்போது 15-ம் பாட்டில் "பழிவிட நீபோ" என்ற இடத்தில் அனேகம் பொருள்களைப் பொருந்த எடுத்துச் சொல்லி அருமையாகப் பிரசங்கித்தார். அதில் நாயனருக்கும், அவர் குடிக்கும், மனைவியாருக்கும், மனைவியார் குடிக்கும், சுற்றத்தார்க்கும், அவர் குடிமரபினுக்கும், அந்நாட்டுக்கும், அவர் செய்துவந்த அறத்திற்குமாகப் பலவகையானும் வந்து ஏறக்கூடிய பழிகளையெல்லாம் எடுத்துப் பொருத்திக்காட்டி ஒவ்வொன்றாய்ப்பேசினர். அதுமுதல் பின்னும் எனக்கு இப்புராணத்தில் மேலும் மேலும் ஆசை அதிகரித்து வந்தது. இவ்வாறு அவர் ஏதோ நான் பாடங் கேட்டுக்கொண்ட காலத்திலேயே காட்டிப்போந்த இடங்கள் பலவுண்டு. அவர் திருவாரூர்ச்சிறப்பு, இளையான்குடிமாற நாயனர் புராணம், மெய்ப்பொருள் நாயனர் புராணம் முதலிய சில சரிதங்களை முறையாகப் பேசிச் சொற்பொழிவாற்றின காலத்துக் கூடஇருந்து கேட்கப்பெற்ற புண்ணியத்தால் இப்புராணத்திலே எனது ஆசை மேலும் வளர்வதாயிற்று. அவ்வாறு கேட்ட அருமைப்பாடுகளை முறைப்பட எழுதிச் சேமித்து வைத்தேனில்லையே யென்று பலகாலும் வருந்தியது முண்டு. சற்றேறக்குறைய 1894-ம் ஆண்டுமுதல் அதாவது இற்றைக்கு நாற்பதிரண்டு ஆண்டுகளாக இப்புராணத்தை இடையிடையேயும், அதிலும் சென்ற இருபதாண்டுகளாய் முறையாய் ஆண்டிற் கொருமுறையும் வாசிக்கும் நல்லூழ்பெற்றேன். 1894 ம் ஆண்டு முதல் 1906 வரை ஒரு பனிரண்டாண்டுகள் எனது ஆசிரியரின்கீழ் நின்று இப்புராணத்தினுள் மேற்கண்டவாறு அநேகங்குப் போதனை பெற்றகாலமென்பேன.

எனது ஆசிரியர் இறைவனது திருவடிநீழலை யடைந்தபின்னர் எனக்கு இப்புராணத்தைப் போதிக்கவல்ல பெரியார் அனேகமாகக் கிடைக்காமலே ஒரு பன்னிரண்டு ஆண்டுகள் கழிந்தன. அக்காலத்தும் இதனைப் பயில்வதை நான விடவில்லை. எனக்கும் ஏதோ தெரியுமென்று நினைத்துப் பல நண்பர்கள் பல சபைகளுக்கு என்னைக் கூப்பிடும்போதெல்லாம் இப்புராணத்துப் பொருள்களையே சென்ற சென்ற இடங்களிலெல்லாம் பேசுவேன். பிறரையும் அவற்றையே பேசும்படியும் வேண்டுவன். இவ்வாறு மேலும் பன்னிரண்டு வருடங்கள் கழிந்தன. கழியவே எனது அதிர்ஷ்டவசத்தால் எங்கள் நாட்டில சைவப் பயிர்வளர்க்கும் ஒரு வெண்முகிலை இறைவன் கொடுத்து அருளினர். அந்தமுகில் சைவத் திருவாளர். கயப்பாக்கம். சதாசிவச் செட்டியார், பி. ஏ. அவர்களே யாவர். அவர்கள் 1918 ம் வருடத்தில் பேரூர் ஸ்ரீ சாந்தலிங்க சுவாமிகள் சத்வித்யா சன்மார்க்க சங்கத்தின் இரண்டாவது ஆண்டு நிறைவு விழாவிற்குத் தலைவராய் வந்தார்கள். அவரது பிரசங்க மழையினல், எங்கள் நாட்டிலே முன்னா வாடியிருந்த சைவப் பயிர் சிறிது சிறிதாய்த் தழைத்தது. அவர்களைப் பெரியபுராணத்தைத் தினந்தோறும் முறையாய்ச் சொல்லிப் பிரசங்கிக்கும்படி பல பெரியார்கள் வேண்டிக்கொண்டனர். அதற்கிணங்கி அவர்கள் 1919 முதல் (சிற்சில இடையீடுகளிடையே) நாடோறும் பிரசங்கித்துவந்தார்கள். 1922ஆ அக்டோபர்மீ 11வ புராணப் பிரசங்கம் இனிது நிறைவேறிற்று. நிறைவேற்று விழாவன்று பெரியபுராண ஏட்டையும் மற்ற 11 சைவத் தெய்வத் திருமுறைகளையும் யானையின்மேல் வைத்து நகர்வலம் செய்வித்துப் பல பெரியார்கள் பெருவிழாக் கொண்டாடிச் சிறப்புச் செய்தார்கள். அந்த நன்முயற்சியில் புராணப் பிரசங்கநாட்களிலெல்லாம எனக்கு ஒரு பெரிய திருப்பணி கிடைத்தது. அஃதாவது அவர்கள பிரசங்கத்திற்கு தினமும் நானே கையேடு வாசிப்பதாம். அப்போது அவர்களது அருமையான பிரசங்கங்களில் எனக்கு அரு

மைப்பாடாய்த் தோன்றிய சில குறிப்புக்களைக் குறித்துவைக்கவேண்டுமென்று ஒரு விருப்பம் யாதுகாரணம்பற்றியோ எனக்கு உண்டாகியது. பிரசங்கம் நிகழும்போதே காகிதத் துண்டுகள் வைத்துக்கொண்டு அவர் சொல்லும் அரிய பெரிய குறிப்புக்களை என் சிறிய மனங்கொண்டவளவு குறித்துவந்தேன். அவர்கள் அவ்வப்போது புராணத்திலிருந்து எடுத்து எடுத்து எங்களுக்கு இடித்திடித்துச் சொன்ன புத்திமதிகள் என்னுள்ளே இன்னும் தொனித்துக்கொண்டிருக்கின்றன. எனவே, இங்குக் கூறியவற்றால் சேக்கிழார் சுவாமிகளிடத்தே எனக்கு உளதாகிய ஆசையும் நேசமும் வளர்ந்த வகைகளைக் கூறினேனன்றி வேறில்லை. "உன்பழவடியார் கூட்டம், அடியேன் காண ஆசைப் பட்டேன் கண்டா யம்மானே" என்றபடி எழுந்த இவ்வாசையினையே பற்றுக்கோடாகக் கொண்டு அதிலே பத்தியும் வளர்வதாயிற்று. ஆனால் எனது சிற்றறிவாகிய கொள்கலனானது அந்த அரிய பெரியபுராணமாகிய பேரமுதப் பெருங்கடலிலே தன் சிறிய அளவிலே அமைந்தமட்டும் கொள்வதன்றி வேறென் செய்யவல்லது? பெரியபுராணத்தின் பெருமைகளை ஒன்றும் அறிந்தேனில்லை என்று சொல்ல மட்டும் எனது மனம் துணிகின்றதே யன்றி எதையாவது அறிந்தேன் என்ற துணிபு உண்டாகின்றதில்லை. ஏன்? "அறிதோ றறியாமை கண்டற்று" என்றபடி படிக்குந்தோறுங் கேட்குந்தோறும் புதிது புதிதாய்த் தோன்றும் கருத்துக்களின பெருமையாலே இவை முன் நாம் அறியவில்லையே யென்ற தோற்றமே உண்டாகின்றதாகலின். அப்போதும் இவ்வாறு ஓர் உரை எழுதவேண்டுமென்னும எண்ணம் எனக்குத் தோன்றவேயில்லை. ஆனால் அந்தக் குறிப்புக்களை மட்டும் சேமித்து வைத்திருந்தேன். அதன்பின் மற்றோர் பன்னிரண்டாண்டுகள் கழிந்தன. ஆனால் எனது ஆருயிரனைய திரு. செட்டியாரவர்கள் பேருதவியினால் பின்னரும் அதிவிருப்பத்துடன் புராணத்தைப் படித்துவந்தேன். அதைப் பிறர் கேட்க நான் சொல்வதைவிடப் பெரியார் வாயிலாகக் கேட்பதிலேயே அதிக விருப்பமிருந்தது. திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீலஸ்ரீ சிவ சண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் முதலிய பெரியார்களும், பண்டிதமணி திரு. மு. கதிரேசன் செட்டியாரவர்கள், வித்வான் திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் முதலிய நுணுகிய ஆராய்ச்சியாளர்களும் இதைப் பேசும்போதெல்லாம் நான் மிக விரும்பிக் கேட்டுப் பயன்பெற்று வந்தேன் என்பதை அப்பெரியார்கள் அறிவார்களோ அறியார்களோ அதை நான் அறியேன். 1930-ம் வருஷத்தில் சென்னைச் சர்வகலா சங்கத்தார் ஆதரவில் சில பிரசங்கங்கள் செய்யுமாறு என்னை அழைத்தனர். அதற்கிணங்கி அவர்களாதரவில் நான் 1930 ஜனவரி 31, பிப்ரவரி 1-3 நாட்களில் சென்னைப் பச்சையப்ப முதலியார் கல்லூரி மண்டபத்தில் "சேக்கிழார்" என்ற தலைப்பில் செய்த 3 நாட் பிரசங்கங்களும் இப்புராணத்தையும் அதன் ஆசிரியரையும் பற்றியனவே. அந்தப் பிரசங்கங்களை அவர்களது உத்தரவு பெற்றுப் புத்தகமாக வெளியிட்ட பின்னரே புராணத்துக்கு ஒரு விளக்க உரை காணவேண்டும் என்னும் எண்ணம் தோன்றிற்று. இலௌகிகத்திலுங்கூட எந்தத் துறையில் மக்கள் நல்வாழ்க்கை வாழவேண்டுமாயினும் அதற்குப் பெரிய புராணமே நன்கு துணை செய்வதாகும் என்ற எண்ணம் எனக்குள் வேரூன்றி வளர்ந்து வருகின்றது. இதனைப் பல துறைகளிலும் எனது 'சேக்கிழார்' என்ற நூலிற் காட்டியுள்ளேன். சில ஆண்டுகளின் முன் சிதம்பரத்தில் ஆனியுத்திரத் திருவிழாவின்போது ஸ்ரீ ஆறுமுக நாவலரவர்கள் சைவப்பிரகாச வித்யாசாலையில் சேக்கிழாரைப் பற்றிப் பேசியபோது உடனிருந்து கேட்டுக்கொண்டிருந்த யாழ்ப்பாணம் தெல்லிப்பழை 'புரோக்டர்', திரு. கனகராயர் அவர்கள் நமது நாட்டுக்குச் சுயராச்சியம் வேண்டுமானால் பெரியபுராணத்தை நன்கு படிக்கவேண்டுமென்று சொல்லி என்னுடன் அளவளாவிக் கொண்டிருந்து, அது முதல் என் நண்பராயினர்.

உரை காணும் எண்ணம் தோன்றியது முதற் பல பழைய ஏடுகளைத் தேடிப் பெற்றேன். சிதம்பரத்தில் எனது தீட்சா குருமூர்த்திகளாய் எழுந்தருளிய உலக மூர்த்தி தேசிகர் மடம் ஸ்ரீலஸ்ரீ கணபதி முத்துக் கற்பகக் குருக்களையா அவர்கள் தமது திருமடத்தில் பரம்பரையாயிருந்ததொரு மிகப் பழைய ஏட்டுப்பிரதியை மிக அன்புடன் உதவி ஆசி கூறியருளினார்கள். திருவாவடுதுறையில் எனது நண்பரொருவர் இரண்டு பிரதிகள் உதவினர். தருமபுர ஆதீனம் ஸ்ரீமத சுப்பிரமணியத் தம்பிரான் சுவாமிகள் மிக அன்புடன் ஆசீர்வதித்து ஒரு பழைய பிரதி உபகரித்தார்கள். எனது நண்பர்கள் சாத்தூர் திரு. T. S. கந்தசாமி முதலியார், B. A. அவர்களும், திரு. T. K. சிதம்பரநாத முதலியார், B.A., B.L. அவர்களும், திரு. வையாபுரிப் பிள்ளை, B.A., B.L. அவர்களும் தனித்தனிப் பிரதிகள் உதவினார்கள். இன்னும் வேறிடங்களி லிருந்தும் பல பழைய ஏட்டுப் பிரதிகள் கிடைத்தன. இவற்றோடு அச்சிடப்பட்ட மூலப் பாடப் பதிப்புக்களும் உரைப்பாடப் பதிப்புக்களும் இவ்வுரைக்குப் பெருந்துணை செய்தன. இவற்றுள் சிதம்பரம், திருவாவடுதுறைப் பிரதிகள் சுத்தமாயும் நல்லாதரவு தருவனவாயு முள்ளன. திருநெல்வேலிப் பிரதிகளில் சில துணிகரமான இடைச் செருகல்கள் காணப்பெற்றன. அகத்திய முனிவரும் பயந்து சென்று பின் அதினின் றும் மீளாது ஆங்கே வதிகின்ற தமிழ்ப் பெருமை தென்பாண்டிநாட்டுக் குரிமையான தன்றோ? நாட்டுக்கோட்டை நகரச் செட்டியார்களது மரபில் வந்த தமிழ் வல்லுந ராகிய ஒரு பெரியார் திரு. இராமநாத செட்டியார் என்பார் ஏறக்குறைய 60 ஆண்டு களின் முன் சிதம்பரத்தில் வாழ்ந்தனர். ஸ்ரீ ஆறுமுக நாவலரவர்கள் மாணாக்கராகிய ஸ்ரீ பொன்னம்பலம் பிள்ளையவர்களிடம் பெரியபுராணத்தை முறையாய்க் கற்றுப் பாடங்கேட்பதற்கென்றே இவர் யாழ்ப்பாணஞ் சென்று தங்கிப் பாடங்கேட்டனர் என் பர். இப்புராணம் அவர்கள்பால் பாடங்கேட்ட பல பெரியார்களுள் மேற்குறித்த எனது தீட்சா குருவும், சிதம்பரம் ஸ்ரீ நடராச ஓதுவாரவர்களும் தாங்கள் பாடங்கேட்டபோது குறித்துவைத்த கையெழுத்துக் குறிப்புப் புத்தகம் ஒன்றை இப்போது சிதம்பரத்தில் திருக்கழிப்பாலை ஸ்ரீ பழனியப்ப முதலியார் தேவாரப் பாடசாலை உபாத்தியாயர் ஸ்ரீ இராமலிங்க ஓதுவார்மூர்த்திகள் பலகாட் சேமித்துப் போற்றிவைத்திருந்து அன் போடு உதவினார்கள். இவ்வாறு கிடைத்த ஏட்டுப் பிரதிகள் பன்னிரண்டினையும் அன் புடன் மிகுந்த சிரமப்பட்டு ஆராய்ந்து பாடபேத முதலியவற்றைக் குறித்து உதவிய பெரியார் சூரியனார்கோயிலாதீனத்தில் திருவாணை தீட்சை பெற்றவரும் பேரன்பருமா கிய பவானித் தமிழ்ப்பண்டிதர் திரு. க. குமாரசாமிப் பிள்ளையவர்கள். இவ்வாராய்ச்சி யால் பல அரும்பொருள்கள்கிடைத்தன. இடைச்செருகலான பாட்டுக்களை ஒருவாறு நிச்சயிக்க இவை பேருதவியாயின. "துலையெனும் கலந்தால்—கலத்தால்—நெச்சழக்கி னின் றேற்றுவார்" (அமர்நீதி நாயனார் புராணம் 41), "இனியமொழி விளம்பி விடை - கொடுத்தார் - கொண்டார்" (நரசி. முனை. புரா. 7), வெங்தொழில்வன் கூற்றுண்ண— விடந் தீண்ட—(திருமூல. புரா. 11) என்பனபோன்ற பாடபேதங்கள்எவ்வளவு பொரு ளாழமான உண்மைகளை விளக்கி நிற்கின்றன என்று பாருங்கள்!

பத்தராய்ப் பணிவார் சருக்கத்திலே துதிக்கப் பெற்ற தொகையடியார் பண்புகளை ஒவ்வோர் தொகையடியார்க்கு ஒவ்வோர் பாட்டினாலே புராணம் செய்தமைத்தனர் ஆசிரியர் என்றும் இப்போது அவற்றிற் காணும் மற்றும் பற்பல பாட்டுக்களும் பிறராற் பிற்காலத்திற் சேர்க்கப்பட்டன என்றும் ஊகிக்க இடமிருக்கின்றது. ஆயின இப்பதிப் பிலே நல்லபொருட்பேதமுள்ள சில பாடபேதங்களைமட்டும்குறித்துள்ளேன். பெரிய புராணத்தை நியதியாய்ப் பாராயணஞ் செய்வோர் முறையாகப் படித்து வரும்போது நிறுத்தவும் தொடங்கவும் உள்ள உரிய இடங்களைத் தெரிந்த அளவில் அவ்வப்பாட்டுக் களின் முன் போட்ட * நட்சத்திரக் குறியீடு கொண்டு காட்ட முயன்றுள்ளேன்.

தேவாரப் பாடல் பெற்ற தலங்களைப் பற்றிப் பல பெரியார்கள் பல வரலாறுகள் வெளியிட்டுள்ளார்கள். நாயன்மார்களது அவதார தலங்களில் அவற்றுள் அடங்காதவற்றிற்கு அதுபோல வரலாறு, சென்றடையும் வழி முதலிய விவரங்கள் இதுவரை ஒருவரும் தொகுத்து வெளியிடாதது ஒரு பெருங் குறையேயாம். இதனால் பல தலங்கள் இருக்குமிடமும் தெரியக்கூடவில்லை. சில தலங்கள் ஒன்றோடொன்று மயங்கி யறியப் படுகின்றன. ஒரே பேரால் பல தலங்கள் காணப்படுகின்றன. அங்கங்கு நேரிற் சென்று கண்டும், அறிந்தோரைக் கேட்டும, தலவழக்குக்கள், தலசரிதங்கள், கல்வெட்டுக்கள் முதலிய பலவும் ஆராய்ந்தும் இத்தலங்களை நிச்சயிக்கவேண்டி யிருக்கின்றது. திருக்குறிப்புத்தொண்ட நாயனார் மரபினரும், நாயன்மார் தலங்களுக்குச் சென்று சென்று தரிசித்தவரும், நாயன்மார்களிடத்துப் பேரன்பு கொண்டு கலித்துறையந்தாதி முதலியவற்றை அனுபவித்துப் பாராயணஞ் செய்வோருமாகிய தஞ்சாவூர் முத்து என்பவர் தந்த தலக்குறிப்புக்கள் எனக்குப் பெருந்துணை செய்தன. மாற நாயனாரது இளையான்குடி சோழநாட்டுத (தஞ்சை ஜில்லா) திருநள்ளாற்றினை யடுத்துள்ள தலமா? அல்லது பாண்டி நாட்டு (இராமநாதபுரம் ஜில்லாப்) பரமக்குடியை அடுத்துள்ள தலமா? என்பது இன்னும் ஐயப்பாடேயாய் நின்றது. நாயன்மார் தலகுறிப்புக்கள் பலவற்றையும், பலவாறு முயன்று சேகரித்த மற்றும் பல பொருள்களையும அங்கங்குக் குறித்துள்ளேன். ஆங்காங்குப் பொருந்திய தேவாரக் குறிப்புக்களும் அறிந்தவரை தந்துள்ளேன். மேற்கோள்களைப் பெரும்பாலும் சைவத தெய்வப் பன்னிரு திருமுறைகள்-பதினான்கு சாத்திரங்கள் - திருக்குறள் - கந்தபுராணம் - திருவிளையாடற் புராணமாதி சைவபுராணங்கள் முதலிய சைவப் பெருநூல்களிலிருந்தே தந்துள்ளேன். வேதத்திற்கு வேதமே பிரமாணம். இந்நூற் கருததைப் பொருந்த விளக்குவன தமிழ் வேதமே என்பது எனது துணிபு. வேறு நூற்களின் மேற்கோள்கள சிறுபான்மையேயாம். இதுபற்றி அறிவோர் குறைகூறார் என்று நம்புகின்றேன்.

**கற்பனை** என்ற தலைப்பின்கீழ் அவ்வப் புராணங்களினின்றும் நாம் அறிந்து கொள்ளக்கூடிய உண்மைகளாக என் சிறிய அறிவுட்பட்ட குறிப்புக்களைக் குறிததுள்ளேன். அவை அவ்வப்புராணங்களில் ஆராய்ச்சியைத் தூண்டி மக்களை நல் வழிப்படுததுமென்று நம்புகின்றேன். உரைக்குறிப்புக்களில் எனக்குக் கிடைத்துள்ள அச்சிட்ட உரைப்பகுதிகளிற் கண்ட பொருள்களை சில அரிய இடங்களிற் பேர் குறித்தும், சில இடங்களிற் பேர் குறியாமலும் பயன்படுத்திக்கொண்டேன். அவைபற்றி அவ்வவ்வுரைகளின் உரிமையுடையோர்பால் மன்னிப்புக் கேட்கின்றேன். அவர்கள் தமது பெருமையினால் என்மீது சினங்கொள்ளார்கள் என்பது எனது துணிபு. அச்சில் வாராத பல பெரியார்களது உரைக்குறிப்புகளும் எனக்குப் பேருதவி புரிந்தன. அவற்றுட் சிறந்த திரு. இராமநாத செட்டியாரது உரைக்குறிப்புக்களைப்பற்றி முன்னரே குறித்தேன். அதனினும் மிகச் சிறந்தனவாய, நான் உடனிருந்து கேட்டுக் குறித்தனவாய் எனக்கு ஊன்றுகோல்போல மிக உதவி வருவது சைவப் பெரியார் ஸ்ரீ. க. சதாசிவ செட்டியாரவர்களது உரைக்குறிப்புக்களேயாம். இவற்றின் வரலாறும் முன்னரே குறித்துள்ளேன். இவ்வாறு பலவிடத்துக் கண்டவையும் கேட்டவையுமாயுள்ள குறிப்புக்களே இப்பதிப்பிற் காண்பனவாம். ஆதலின் இதனை அடியேன் **தொகுத்தியற்றிய** உரையென்றே முகப்புத்தாளிற் பொறித்துள்ளேன்.

"இதில் உனது சொந்தம் ஏதேனும் உண்டோ ? என வினவுவீராயின், உண்டு - என்பேன். ஆனால் அவற்றைப் பிரித்துக் காண்பது மிக எளிது. பெரியோர் கண்டு கொள்வர். இவ்வெளியீட்டிற் காணும் குறையும், மிகையும், பிழையும், எனறிவைகளெல்லாம் என்னுடைய சொந்தப் பொருள்களேயாம். உரைத்தொகுப்பிலே பாட்டுக் கடினமாய்க் கொண்டு கூட்டி உரைக்கற்பாலதாய்க் காணுமிடத்துப் பதவுரையாகவும் ஏனை எல்லா இடத்தும் பொழிப்புரையாகவும் பொருள் அமைததுள்ளேன். விசேடவுரை

யிற் சொல்லாக்கம் - சொற்குறிப்பு - தொடர்களின் அமைப்பு - இலக்கணக் குறிப்பு - சாத்திரக் குறிப்பு - முன்பின் தொடர்பு - மேற்கோள் முதலிய பலவும் இயன்ற வரை குறித்துள்ளேன். பாடபேதங்கள் அவ்வப்பாட்டினுரை யிறுதியிற் காணப்படும். அரிய பாடபேதங்களை உரையினுள்ளேயே அமைத்து உரைக்குறிப்பும் தந்துள்ளேன்.

நாயன்மார்கள் தலங்கள்-அவர்கள் வழிபட்டுப் பேறுபெற்ற ஆலயங்கள்-அங்கங்குக் காணப்படும் அவர்களது பழந்திருவுருவப் படிமங்கள் முதலியவற்றை இயன்றவரையிற் படம் பிடித்துப் பதித்துள்ளதும் இவ்வெளியீட்டிற்காணும் ஒரு புதுமையாம். பல அன்பர்களும் இதனை விரும்பினார்கள்; விரும்புவார்கள். பலரும் பலவகையானும் துணை செய்துதவி வருகின்றனர். அவர்கள் யாவர்க்கும் எனது நன்றி உரியது.

இவ்வெளியீட்டினை அச்சிடுங்கால் பெருந்துணையா யுதவுகின்றோர் பல பெரியார் கள். அவர்களுட் டலைசிறந்து விளங்குவோர் சூரியனார் கோயிலாதீனத்து ஸ்ரீமத் முத்துக்குமாரத் தம்பிரான் சுவாமிகளாவார். அவர்கள் தமது உடல் நிலையையும், மற் றும் வசதிக் குறைகளையும் ஒரு சிறிதும் பாராட்டாது இதன் அச்சுப் புருப்புக்களைப் பிழைதிருத்தியும், பல அரிய சாத்திரக் கருத்துக்களை உதவியும் வருகின்றார்கள். அவர்கள் புருப் மட்டும் திருத்துகின்றார்களா? அன்று! என்னையே திருத்துகின்றார் கள். அவர்கட்கு என்னான்றும் எனது கடப்பாடான நன்றி உரியது. மற்றும் அச் சிடுங்காற் பெருதவி புரிந்து வரும் என தீட்சா குருபுத்திரராகிய சிதம்பரம் வித்வான் ந. சிவப்பிரகாசதேசிகரும், பறங்கிப்பேட்டை வித்வான் திரு. பெரியசாமிப் பிள்ளை, சென்னைக் கயப்பாக்கம் சோமசுந்தர செட்டியார் முதலிய பல பெரியார்களும் பல திருத்தங்கள் செய்து உதவி வருகின்றார்கள். இப்புராண உரை வெளியீட்டில் எல்லா வகையாலும் சிறிதும் சலிப்பின்றிப் பேருதவி புரிந்துவரும் எனது ஆப்த நண்பரும், திரு. கயப்பாக்கம் சதாசிவஞ் செட்டியாரவர்கள் உறவினரும், சீடருமாகிய திருவாளர் R. ஷண்முகசுந்தரஞ் செட்டியாரவர்கட்கு எனது கடப்பாடும், நன்றியும், ஆசியும், உரியன.

கோவைத் தமிழ்ச் சங்கத்தார் இவ்வெளியீட்டைத் தங்கள் சங்க வெளியீடாக ஏற்றுப் பன்னிரண்டாவது வெளியீடாகப் பிரசுரித்துள்ளார்கள். மற்றும் இதற்காவன வாகிய பல உதவிகளையும் செய்து வருகின்றார்கள். அவர்களுக்கு எனது நன்றி உரியது.

சாது அச்சுக்கூடத் தலைவரவர்கள் இவ்வெளியீட்டில் செய்த - செய்கின்ற - பேருபகாரம் போற்றத்தகுவதாம். எனது தாமதங்களையும், மற்றும் அவர்கள்பால் நான் செய்யும் பற்பல இன்னல்களையும் ஒரு சிறிதும் பாராட்டாது, அவர்கள் எந் நாளும் இவ்வெளியீட்டைச் சோர்வுறாது அசசேற்றி வரும் உதவியை நான் என்றும் மறவேன். சென்னை போட்டோ எம்போரியம் காரியஸ்தர் பற்பல புகைப்படங்கள் எடுத்து உதவினார்கள். அவர்களுக்கும் எனது நன்றி உரியது.

எனது இச்சிறு முயற்சியினையும் பாராட்டி ஊக்கமளித்து மதிப்புரை தந்துதவின பற்பல பெரியார்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள் கின்றேன்.

நம்பியாரூரது முதல் யாத்திரைக்குத் தலப்படம் (Map) வரைந்தும் - நாயன்மார் களைப்பற்றிய கல்வெட்டுகளைத் தந்தும் உபகரித்தவர் எனது ஆப்த நண்பரும், கோவைத் தமிழ்ச்சங்க அமைச்சரும் ஆகிய இராவசாகிப் திருவாளர் கோவை C. M. இராமச் சந்திரன் செட்டியார், B. A., B. L., F. R. G. S., அவர்கள். இதுமட்டுமா? இவ்வுரை யிற் சரித ஆராய்ச்சிப் பகுதியில் அங்கங்கே காணும் பொருள்களிற் பற்பலவும் அவர்க ளுடன் நான் அளவளாவியதன் பயனாற் போந்தன என்றே சொல்வேன். இது போலவே இனியும் இவ்வுரை முற்றும்வரை அவர் தமதரிய சரித ஆராய்ச்சியிற் கண்ட உண்மைகளை உதவிவருவதாக என்று கொண்டார்கள். எதிர்காலத்துச் செய்யும் அவ் வுதவிபற்றியும் இப்போதே அவர்கட்கு எனது நன்றி செலுத்துகின்றேன்.

யாவர் யாது செய்யினும் பொருள் தருவாரையின்றி இவ்வுலகில் யாதும் இல்லை என்பது துணிபேயன்றோ ? பொருளிலார்க் கிவ்வுலகமில்லை யென்று முடித்தனர் நாயனார். இவ்வெளியீடு மிக்க பொருட் செலவில் இயல்வதொன்றென்பது வெளிப்படை. இதனைப் பெறுதலும் - பெற்றுக் கற்று அறிந்துகொள்ளுதலும் இலகுவாயிருக்கும்படி உயர்ந்த கடிதத்தில் ராயல் 8 பக்கம் கொண்ட 20 பாரங்கள் (160 பக்கம்) கொண்ட சஞ்சிகைகளாகக் குறைந்த விலைக்கு வெளியிடப்பெறுகின்றது. இதனைத் தமிழுலகம் ஏற்றுஆதரித்து வருதல் அடியேன் செய்த பாக்கியமே. இவ்வெளியீட்டிற்கு **சென்னைச் சர்வகலாசாலைச் சங்கத்தார்** மிக அன்புடன் ரூ. **1000/-**இதற்கு நன்கொடை தருவதாகத் தீர்மானித்து அதிற் பகுதியை இப்போதே உதவியுள்ளார்கள். மற்றைப் பகுதியை வெளியீட்டு இறுதியில் தருவதாக வைத்துள்ள கருத்து இதன் நிறைவைக் காணும் அவர்களது ஆவல் மிகுதியைக் குறிக்கின்றது. முன்னர்க் குறித்தபடி இவ்வுரையில் எண்ணத்தைத் தூண்டியும், உரை வெளியீட்டிற்கு நன்கொடை அளித்தும் உதவிய சர்வகலாசாலையாருக்கு என் மனமார்ந்த நன்றி உரியது. இளம் பிராயத்தில் என்னோடு ஒருசாலை மாணவரானவரும் சென்னை அரசாங்க விவசாயக் கல்லூரித் தலைவராயிருந்து விடுதி பெற்றவரும் ஆகிய என் அரிய நண்பர் **இராவ்பகதூர் திரு.C. தாதுலிங்க முதலியாரின்** நன்கொடை ரூ. 500/-ம் கோயமுத்தூர் சில்லாதேவஸ்தான சபையார்களின் நன்கொடை ரூ. 250/-ம் மிக நன்றியோடு பாராட்டற்குரியன. இன்னும் இதுபோலவே பல்லாற்றானும் இதற்குப் பொருளுதவி புரிந்தூக்கிவரும் எல்லா அன்பர்கட்கும் மனமார்ந்த நன்றி செலுத்துகின்றேன். இவவெளியீடு முற்றுப்பெறும்வரை இவ்வாறே தமிழுலகமும் சைவ உலகமும் இதனை ஆதரிக்கவேண்டுகிறேன். தமிழ்நாடுகளுள்ளே இலங்கையிலுள்ள அன்பர்கள் பலர் இதனை மிக ஆதரித்து ஊக்கமளித்துவருதல் எனது பாக்கியமே. அதுபோலவே தென்னிந்தியாவில் உள்ள தமிழ் அன்பர்களும் சைவப் பெரியார்களும் ஆதரிப்பார்களாயின் என முயற்சி மிக எளிதின் நிறைவேறும்.

நாயன்மார்களது திருவுருவப் படிமங்களையும் ஆலயங்களையும் படம் பிடித்து வெளியிடுவது மிகுந்த கடினமான காரியம் என்பது யாவருமறிவர். இதுவரை ஆங்காங்குப் படங்களை எடுத்து அனுப்பிப் பேருபகாரம் புரிந்த பெருமக்களாகிய திரு. **T. B. கிருஷ்ணசாமி முதலியார் M. A., B. L.,** துடிசைக்கிழார் **திரு. அ. சிதம்பரனார், திரு. T. S. மீனாட்சிசுந்தர முதலியார், B. A.,** எனது அருமை நண்பர் வித்வான் **திரு. A. கந்தசாமி பிள்ளை,** கடலூர் - **திரு தங்கவேல் பிள்ளை** முதலிய பல அன்பர்களுக்கும் எனது நன்றி உரியது.

பல்வகைப் பிறவியினும் தவஞ்செய்து பெற்றது மனிதப் பிறவி. இதன் அருமையை அறியாது "வாளா பொழுது கழிக்கின்றார் மானுடவர்." அதுமட்டோ? " பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின்றார் !"

" நந்தவனத்திலோ ராண்டி—அவன்
நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டிக்,
கொண்டு வந்தானொரு தோண்டி—யதைக்
கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத் தாண்டி "

என்ற வேடிக்கைபோனற வினயப்பாட்டு இந்நாள் உலகர்க்கு முற்றும் பொருந்துவதாயிற்று. மனிதன் எனறாலே நினைப்பவன - அறிவுடையவன் - என்பது பொருள். அறிவுபெற்ற பயனாவது அறியவேண்டியதை அறிவதுதானே. தான் வந்ததையும் போவதையும் அறிந்து நீடித்த ஊதியத்தைத் தேடுவதைத் தவிர வேறு என்ன பயன் அறிவினால் உண்டு ? அறிவினாற் பெறும் உறுதிப் பயன்களில் நீடித்த உறுதி வீடு என்பதே என அறிவோர் துணிந்தனர். இஃது எல்லாநாட்டு எல்லாக்காலத்து எல்லாப் பேரறிஞர்க்கும் ஒக்கும். இதனை அடைய இறைவன் வகுத்தது அறிவு

நெறியே. அதுவே உயர்ந்த ஞானிகளாலே ஞானநெறி - ஒளிநெறி - நன்னெறி - குருநெறி - சிவநெறியெனப் பலவகையாலும் பேசப்பெறும். இதனை அடையும் வழி காட்ட வேதங்களை இறைவர், தாமே அருளினர் ; தன்னிற்பிறிதில்லாது தானேயாகிய பெருமக்கள் வாக்கினின்றும் அருளினர் ; இவற்றை அறியும் அறிவையும் மக்களுக்கு அருளினர். அறிவினாலே மறையாதி சாத்திர ஞானங்களை உணர்ந்தும், அவவழிநின்றோரைப் பின்பற்றியும், அவை காட்டும் சமயவழி நின்றும், உலகர் உய்யுமாறு செய்தலே இறைவன் அருட்செயல். “ நல்லறிவையும் வகுத்து மறையாதி நூலையும் வகுத்துச் சைவ முதலாம் அளவில் சமயமும் வகுத்துமேற் சமயங் கடந்த மோன சமரசம் வகுத்த நீ ” என்றார் தாயுமானார். இவ்வாறு அருளப்பட்ட நூல்களிலே பெரிய புராணம் தலைசிறந்து விளங்குவதாம். அஃது இறைவன் தானே அருளியதும், ஆசிரியர் சேக்கிழார் வாக்கினின்று அருளியதுமாகிய அருள்வாக்காம். இஃதுண்மை ஞானநூல். ஞானிகளைப்பற்றிய நூல். தமிழ்ச்சுவை வேண்டுவோர்க்குப் பேரிலக்கியமும் பெருங் காவியமுமாம். கதை வேண்டுவோர்க்குக் கதையுமாம். உலகநூல் பயில்வோர்க் கஃதே யாம். வேறு பல சொல்லுவதென் ? யார் யார் எதனை வேண்டுமானாலும் இதன்பாற் பெறலாம். “ வேண்டுவார் வேண்டுவதே ஈவான்கண்டாய் ” என்ற இறைவனிலக்கணமே அவனருள் வாககாகிய இதனிலக்கணமுமாம்.

உலகப் பொருளும் உறுதிப் பொருளும் ஒருங்கே பெறும் அரும் பெரும் பண்டாரமாகிய இதனைத் தமிழ் மக்களும் சைவ மககளும் பயின்று பயின்று உணர்ந்துணர்ந்து பயன்பெற்று உய்யவேண்டு மென்பதே எனது பேராசையாகும். இவ்வெளியீடு அதற்கு ஒரு சிறிதேனும் உதவுமானால் நான் பெரும்பேறு பெற்றவனாக எண்ணி மகிழ்வேன். ஆணவ உருவமாகிய புதிய ஆராய்ச்சி முறையிற் றலைப்பட்டு இவவருள் நூலுள்ளும் புகுந்து வினைதேடி யுழன்று கெடுவோரும் கெடுப்போரும் பலர். இப் புராணத்தினுள்ளே இடைச்செருகலாக 33 பாட்டுக்கள் பிற்காலததிலே புகுததப் பட்டன என்பது பலர் துணிபு. இவைபற்றிய அடியேனது சில கருததுக்களை எனது ‘சேக்கிழார்’ எனனும் நூலில் 206-224 பக்கங்களிற குறிததுள்ளேன். அவவாராய்ச்சியினுள் நான் மிகவும் அஞ்சியே உட்புகுந்தேன். உமாபதி சிவாசாரியார் காட்டிய பாடற்றொகையின்மேற் பல பாட்டுககள காணப்பட்டமையும், சிற்சில இடங்கள் சேக்கிழார் பெருமானுக்கே உரிய முததிரையின அமைவில்லாத பாடல்கள் காணப்பட்டமையுமே நான் அக்கருத்துக்களை மிக அசசததுடன வெளியிட நேர்ந்தது. இவ்வாறன்றிப் பற்பல நவீனக் கிளர்ச்சிகளிற் பட்டுத, தததம புதிய கருததுக்களுக்கிசையாதன என்று கொண்டு, இப்புராணத்தின பல பகுதிகளைச் சேக்கிழார் வாக்கல்ல என்று தத்தம் மனம்போனவாறு ஒதுக்குவாருமுளர். திருமலைச் சிறப்பில் திருக்கைலாயத்தில் ஆலாலசுந்தரர் அனிந்திதை கமலினியார் நிகழ்ச்சி, திருநாளைப்போவார் தில்லையில் அந்தணர்கள் முன் தீமூழ்கி முனியாகிய நிகழ்ச்சி, சமணர் கழுவேறிய நிகழ்ச்சி முதலிய பகுதிகளைத் தததம் நவீன ஆணவ ஆராய்ச்சியிற் பட்டு ஒதுக்குவாரையும் சைவவுலகம் இற்றைநாட் காண்கின்றது. எனனே விதியின் கதி ! இவவாறு அவ்வவர் மனத்துக் கேலாதனவற்றைத் தள்ளிக்கொண்டே போனால் புராணத்தில் ஒன்று மெஞ்சாதென்பது ஒருதலை. ஆராய்வார் ஒவவோர் நிலையினின்றமைந்து முறைப்பட்டொழுகலே சால்புடைததன்றி மனம்போன போக்கெல்லாம் போய் வீழ்தல் ஆராய்ச்சியாகாது. இததகைய ஆராய்ச்சிகளால் உண்மை காண வியலாது அபசாரமே விளையும். இவற்றைக் காண்பதும் கேட்பதும் சிவநிந்தையாகிய பெரும் பாவம் பயக்கும் எனபது தூற்றுணிபு.

பதிபுண்ணியப் பெருமக்களாகிய உண்மை நாயன்மார்களது உண்மைச் சரிதமாகிய இந்த ஞானநூலுக்கும், ஒன்றுக்கும் பற்றாத புழுதத நாயினுங் கடையேனாகிய எனக்கும் எத்தனை தூரம் ? உயா மலையுச்சியும் ஆழ்கடலாழமும் ஒப்பினும் ஒவ்வாதே.

ஆயினும் ஆசையும், எனது முன்னோர் செய்த நல்வினைப் பயனும் சேர்ந்து இந்நல்வினை முயற்சியில் என்னையும் கூட்டிற்று. அதில் தினமும் உபகரித்தது நாடோறும் முன்னிற்பன தமிழ்க்கருணைத் தெய்வமாய் - எனது ஆன்மநாயகனும் - உள்ள குமாரக் கடவுளது சேவடிகள்.

> " புன்னெறி யதனிற் செல்லும் போக்கினை விலக்கி மேலாம்
> நன்னெறி யொழுகச் செய்து நவையறு காட்சி நல்கி
> என்னையும் அடிய னாக்கி இருவினை நீக்கி யாண்ட
> பன்னிரு தடந்தோள் வள்ளல் பாதபங் கயங்கள் போற்றி "

என்று கச்சியப்ப சிவாசாரியார் அருளிய தோத்திரத்தில் என்னையும் என்ற இழிவு சிறப்பு எனக்கே முற்றிலும் பொருந்தப் பாடி யுபகரித்தனர் என நான் பலகாலும் எண்ணிய துண்மை.

இவ்வெளியீடு முதற்சஞ்சிகையின் முதற்பகுதி திருத்தில்லையிலே ஆயிரக்கால் மண்டபத்திலே வைத்துச் சேக்கிழார் சுவாமிகள் திருநக்ஷத்திரத் தினமாகிய யுவ வருடம் வைகாசி மாதம் 23-ந் தேதிக்கு (5—6—1935) புதன்கிழமை யன்று வெளியிடப் பெற்றது. அன்று ஸ்ரீ நடேசப் பெருமானுக்குத் திருப்பாவாடை நிவேதனத்துடன் விசேட பூசை செய்யப் பெற்றது. சேக்கிழார் நாயனார்க்குக் கோயிலிலும், ஸ்ரீ பழனியப்ப முதலியார் பாடசாலையிலும் விசேட பூசையும் குருபூசையும் நிகழ்ந்தன. மாலையில் ஆயிரக்கான் மண்டபத்தில் ஒரு பெருங் கூட்டம் கூடிற்று. அது காலை இவ்வுரை முயற்சியைப் பற்றிப் பல தமிழ்ப் பெரியார்கள் பாராட்டி ஊக்க மளித்தனர். தில்லைவாழந்தணர்கள் இதனை ஆதரித்து ஆசீர்வதித்தனர். ஸ்ரீ கல்யாணசுந்தர தீட்சிதர் அதுபோழ்து சபைத் தலைமை பூண்டருளினர். திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் பரிவட்டம் அனுப்பி ஆசீர்வதித்தருளிற்று. பெருங் கருணைத் தடங்கடலாகிய ஸ்ரீ நடேசப் பெருமான் திருவருளே உருவமாக இவை நிகழ்ந்தன என்று போற்றுவதன்றி வேறுரைக்குமா றறியேன்!

இவ்வெளியீட்டிற் காணும் குறை, மிகை, பிழைகளைப் பொறுத்துத் திருத்தி ஏற்றுக் கொள்வது என்னையுடையவர்களாகிய பெரியோர் கடமை. இப்பகுதியிற் செய்தக்க திருத்தங்களைக் காட்டி உபகரிப்பது அறிந்தோர் கடமை. அவர்களது திருத்தங்களை மனமார ஏற்றுக்கொண்டு செய்வதனை அடியேன் கடனாகமேற் கொள்வேன என்பதற்கு இப்பகுதியினிறுதியிற் காணும் திருத்தங்கள் உறுதி கூறும். ஏனையோர் இகழ்வரேல் அதனால் எனக்காவதொன றுமில்லை.

> தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்
> எம்மை யுடைமை எமையிகழார்—எம்மை
> யுணரா ருணரா ருடங்கியைந்து தம்மிற்
> புணராமை கேளாம் புறன்.

எனற எனது பரமாசாரியார் வாக்கு எனது தலைமேல் நிற்பதாம்.

இனிவர நிற்கும் இவவெளியீட்டின் எஞ்சிய பெரும் பகுதிகளும் இவவாறே இனிது நிறைவேற இறைவனது திருவருளும், பெரியோர் ஆசியும், தமிழ்ச் சைவ வுலகத்தின் ஆதரவும் இனிது துணைசெய்து மங்கலமாக்குவிப்பனவாக.

'சேக்கிழார் நிலையம்'
கோவை, 5—3—37.

அடியேன்,
C. K. சுப்பிரமணியன்.

# இவ்வெளியீட்டிற்குத் துணை நின்ற பிரதிகள்

உரைக் கையெழுத்துக் குறிப்புக்கள்

1. கயப்பாக்கம். திரு. சதாசிவஞ் செட்டியாரவர்கள், B.A.
2. திரு. இராமநாதஞ் செட்டியார் அவர்கள்.

உரைப்பிரதிகள்

1. ஸ்ரீமத் மகாலிங்கையர் அவர்கள் பொழிப்புரை (திருக்குறிப்புத் தொண்ட நாயனார் புராணம் வரை)
2. ,, ஆறுமுகத்தம்பிரான் சுவாமிகள் அவர்கள் (முழுமையும்)
3. ,, சுப்பராயுலு நாயகர் அவர்கள் (முழுமையும்)
4. ,, காஞ்சி ஆலாலசுந்தரம் பிள்ளை அவர்கள் (முதல் மூன்று சருக்கங்கள்.)

மூலப்பிரதிகள்

1. வித்வான் காஞ்சி சபாபதி முதலியாரவர்கள் முதற் பதிப்பு. சித்தார்த்தி (1859)
2. ஷெயார் இரண்டாம் பதிப்பு. (1870)
3. சிதம்பரம் இராமலிங்கம் பிள்ளை பதிப்பு. (1879)
4. ஸ்ரீ ஆறுமுக நாவலரவர்கள் பதிப்பு முதற்காண்டம். (1884)

பழைய ஏட்டுப் பிரதிகள்

| | | |
|---|---|---|
| 1. | திருவாவடுதுறை பிரதிகள் | 2 |
| 2. | திருத்தருமபுர ஆதீனப் பிரதி | 1 |
| 3. | சிதம்பரம் உலகமூர்த்தி தேசிகர் மடத்துப் பிரதி | 1 |
| 4. | T. K. சிதம்பரநாத முதலியார் தந்த நெல்லைப் பிரதி | 1 |
| 5. | சாத்தூர் திரு. T. S. கந்தசாமி முதலியார் தந்த பிரதி | 1 |
| 6. | எனது வீட்டில் இருந்த மிகச் சிதைந்த தனி ஏடுகள் | 1 |
| 7. | மற்றும் பிரதிகள் | 5 |
| | ஆக. | 12 |

திருமுறைகண்ட புராணம்

உ

திருச்சிற்றம்பலம்

# அறுபான்மும்மை நாயன்மார்

# திருநட்சத்திரங்கள்

ஒன்றகல வெட்டெட்டா மோதுமடி யாரான்பாற்
றுன்றுமதி நாளினிது சொல்லவே—வென்றிதரும்
பொன்னிதிவி நாயகனார் பூமுடிமே லாடுதிருச்
சன்னிதிவி நாயகனார் தாள்.

## நிலைமண்டிலவாசிரியப்பா

தில்லைவா ழந்தணர் திருவரு ளாலவர்
மல்குசீர்ப் பதத்தை மகிழ்வொடு வணங்கிக்
கடிதிரு நீல கண்டர்தை விசாகம்
வடிவியற் பகையார் மார்கழி யுத்திரம்
வருமிளை யான்குடி மாறரா வணிமகங்
கருதுமெய்ப் பொருளார் கார்த்திகை யுத்திரம
விறன்மிண்ட கண்டர் மேடமா திரைநா
ளறனமர் நீதி யாணிப் பூரம்
மாணெறி பத்தர் மாசியி லத்தங்
காணுமே னாதியார் கன்னியுத் திராட
மலர்கண் ணப்பர் மகரமான் றலையிற்
குலவுகுங் குலியர் கோளரி மூலந்
தருமா னக்கஞ் சாறர்விற் சுவாதி
யரிவாட் டாயர்தை யாதிரை நாளி
லானாயர் கார்த்திகை யத்த நாளிற்
கான மூர்த்தியார் கடகத் தாரன்
முருக ரிடப மூல மதனி
லுருத்திர பசுபதி யுயர்கன்னி மூன்றேள்
பொருந்திரு நாளைப் போவார்கன் னியிறபார
திருக்குறிப் படியார் சித்திரைச் சுவாதி
சண்டேச ராமவர் தையுத்தி ரத்திற்
றண்டமி ழப்பர் தகரிற் சதயங்
குலச்சிறை நாயனார் கோளரி யனுட
மலகில் குறும்ப ராடியிற் சித்திரை
யருள்கா ரைக்கா லம்மைமீன் விளக்கா
மருகிலப் பூதிதை யதிற்சத யத்திற்
கமைநீல நக்கர் காளை மூலத்தி
னமிநந்தி யடிக ளான்விடைப் பூச
ஞான சம்பந்தர் நாள்விடை மூல
மான கலிக்காம ரானி ரேவதியி

லருட்டிரு மூல ரைப்பசி முன்னாள்
வருதண்டி யடிகள் வளர்மீன் சதயஞ்
சேமமா மூர்க்கர் தேன்மதி மூலஞ்
சோமாசி மாறர் தொழுவிடை யாவிற்
சாக்கிய நாயனார் தனுப்பூ ராடந்
தேக்கிய சிறப்புலி தேட்பூ ராடஞ்
சேர்சிறுத் தொண்டர் சித்திரைப் பரணி
சேரமான் கடகஞ் சேர்ந்தசோ தியினிற்
கணநாதர் மீனங் கலந்தவா திரையிற்
குணமாங் கூற்றுவர் குளிர்மதி யாதிரை
பொய்யடிமை யில்லாப் புலவர்தான் போற்றி
மெய்ப்புகழ்ச் சோழர் மிளிர்குளி ரார
னரசிங்க முனையார் நற்கன்னி சதயந
திரவதி பத்தர் சிங்கவா யிலியங்
கலிக்கம்பர் மகரக் கடைநா ளதனிற்
கலியரா டியினிற் கலந்தவிந் திரனு
டேயசிற் சத்தியார் துலாப்பூ சத்தி
ஐயர்கா டவர்கோ னைப்பசி மூலங்
கணம்புல்ல நாயனார் கார்த்திகை யங்கி
கணஞ்சேர் காரியார் கடம்பூ ராடந்
தூய்நெடு மாறர் துலாமதிப் பரணியில்
வாயிலார் நாயனார் மார்கழி யிரேவதி
வெம்முனை யடுவார் மீனப் பூசஞ்
செம்மையா நகழற் சிங்கர்சேப் பரணி
மருவிடங் கழியார் மதிதுலா வாரல்
செருத்துணை நாயனார் சிங்கப் பூசஞ்
சேட்புகழ்த் துணையார் சிங்கவா யிலியங
கோட்புலி நாயனார் குளிர்மதி கேட்டை
பத்தராய்த் தாழ்வார் பரமனைப் பாடுவார்
சித்தத் தைச்சிவன் பாலே சேர்ததுளா
ரப்புறு செய்த்திரு வாரூர்ப் பிறந்தார்
முப்பொழு துந்திரு மேனி தீண்டுவார்
முப்புவி தொழுமுழு நீறு பூசுவா
ரப்பாலு மடிச்சார்ந் தாரை வணங்கிப்
பூசலா ரைப்பசி புகுமனு டத்தின
மாசிலா மானியார் மைம்மதி யுரோகிணி
மிகுசிவ நேசர் மீனரோ கிணியிற்
றெருகுபுகழ்ச் செங்கட் சோழர் குடக்குன்
றடுநீல கண்டயாழ்ப் பாணர்சே மூலஞ்
சடையனார் மார்கழி சார்ந்தவா திரையி
லிசைஞானி மேடத் திசைந்த சித்திரையில்
வசையிலா விம்மதி மருவுமிந் நாளிற்
பரகதி யடைந்த பத்தரைப் பாடிக்
கருதுவன் றொண்டர் கடகச் சுவாதி

75 குருபூசை நாளிற் குறைவிலா திவர்க்கு
வருபூசை தந்தோர் மாநிலத் தோங்கித்
தவப்பய னெய்திச் சதுமறைக் கிரியிற்
சிவகதி யடைத லிண்ண முண்மையதே.

திருநட்சத்திரம் முற்றிற்று.

---

## சைவசமய குரவர் முதலியோர் குருபூசைத் தினங்கள்

சித்திரைச் சதய மப்பர் சிறந்தவை காசி மூல
மத்தரைப் பணிசம் பந்த ரானிமா மகததி லந்த
முத்தமிழ் வாத வூரர் முதியநல் லாடி தன்னிற்
சுத்தமாஞ் சோதி நாளிற் சுநதரர் கயிலை சேர்ந்தார்.

பாடிய சம்பந்தர் வைகாசி மூலம் பயிலுமப்பர்
நீடிய சித்திரை மாதச் சதய நிறைவன்றொண்ட
ராடியிற் சோதி திருவாத வூரர்நல் லானிமகந்
தேடிய சேக்கிழார் வைகாசிப் பூசஞ் சிறந்தனரே.

## சந்தான குரவர் குருபூசைத் தினங்கள்

சித்திரை யத்த முமாபதி யாவணித் திங்கடனி
லுத்திரஞ் சீர்கொண் மறைஞான சம்பந்த ரோதுகன்னிச்
சுத்தமெய்ப் பூர மருணந்தி யைப்பசிச் சோதிதனில்
வித்தக மெய்கண்ட தேவர் சிவகதி மேவினரே.

## சைவசமய குரவர் நால்வர் வயது

அப்பருக்கெண் பத்தொன் றருள்வாத வூரருக்குச்
செப்பியநா லெட்டினிற் றெய்வீக—மிப்புவியிற்
சுந்தரர்க்கு மூவாறு தொன்ஞான சம்பந்தர்க்
கந்தம் பதினா றறி.

“பெருமகிழ்ச்சி தானிறைந்த சித்திரையிற் சதயமாந் திருநாளில்” என்று (திருநா - புரா - 428) அப்பர் சுவாமிகளது திருநட்சத்திரத்தையும், “புண்ணியப் பதினாறாண்டு பேர்பெறும் புகலி வேந்தர்” என்று (திருஞான - புரா - 1109) திருஞானசம்பந்த சுவாமிகளது வயதையும் சேக்கிழார் சுவாமிகள் பெரியபுராணத்துக் குறித்தருளினர்.



---

குறிப்பு :—மேடம் - தகர் - மை = சித்திரை. இடபம் - காளை - விடை - சே = வைகாசி. கடகம் - குளிர் = ஆடி. கோளரி - சிங்கம் = ஆவணி. கன்னி = புரட்டாசி. துலாம் = ஐப்பசி. தேள் = கார்த்திகை. வில் - தனு = மார்கழி. மகரம் = தை. மீன் = பங்குனி. முன்னாள் = அசுவினி. ஆரல் - அங்கி = கார்த்திகை. பார் = உரோகிணி. மான்றலை = மிருகசீரிடம். அரவு = ஆயிலியம். விளக்கு = சுவாதி. இந்திரனாள் = கேட்டை. குன்று = சதயம்.

உ

திருச்சிற்றம்பலம்

# திருத்தொண்டத்தொகையிற் போற்றப்பட்டுள்ள
# தனித்திருத்தொண்டர்கள் திருநட்சத்திரங்கள்

## சருக்க வரிசை.

### 2. தில்லைவாழந்தணர் சருக்கம்

| எண் | திருத்தொண்டர் | திங்கள் | திருநட்சத்திரம் |
|---|---|---|---|
| 1. | திருநீலகண்ட நாயனார் | தை | விசாகம் |
| 2. | இயற்பகை நாயனார் | மார்கழி | உத்திரம் |
| 3. | இளையான்குடி மாறநாயனார் | ஆவணி | மகம் |
| 4. | மெய்ப்பொருள் நாயனார் | கார்த்திகை | உத்திரம் |
| 5. | விறன்மிண்ட நாயனார் | சித்திரை | திருவாதிரை |
| 6. | அமர்நீதி நாயனார் | ஆனி | பூரம் |

### 3. இலைமலிந்த சருக்கம்

| | | | |
|---|---|---|---|
| 7. | எறிபத்த நாயனார் | மாசி | அத்தம் |
| 8. | ஏனாதிநாத நாயனார் | புரட்டாசி | உத்திராடம் |
| 9. | கண்ணப்ப நாயனார் | தை | மிருகசீரிடம் |
| 10. | குங்குலியக்கலய நாயனார் | ஆவணி | மூலம் |
| 11. | மானக்கஞ்சாற நாயனார் | மார்கழி | சுவாதி |
| 12. | அரிவாட்டாய நாயனார் | தை | திருவாதிரை |
| 13. | ஆனாய நாயனார் | கார்த்திகை | அத்தம் |

### 4. மும்மையாலுலகாண்ட சருக்கம்

| | | | |
|---|---|---|---|
| 14. | மூர்த்தி நாயனார் | ஆடி | கார்த்திகை |
| 15. | முருக நாயனார் | வைகாசி | மூலம் |
| 16. | உருத்திர பசுபதி நாயனார் | புரட்டாசி | அசுவினி |
| 17. | திருநாளைப்போவார் நாயனார் | புரட்டாசி | ரோகணி |
| 18. | திருக்குறிப்புத்தொண்ட நாயனார் | சித்திரை | சுவாதி |
| 19. | சண்டேசுர நாயனார் | தை | உத்திரம் |

### 5. திருநின்ற சருக்கம்

| | | | |
|---|---|---|---|
| 20. | திருநாவுக்கரசு நாயனார் | சித்திரை | சதயம் |
| 21. | குலச்சிறை நாயனார் | ஆவணி | அனுடம் |
| 22. | பெருமிழலைக்குறும்ப நாயனார் | ஆடி | சித்திரை |
| 23. | காரைக்காலம்மையார் | பங்குனி | சுவாதி |
| 24. | அப்பூதியடிகள் நாயனார் | தை | சதயம் |
| 25. | திருநீலநக்க நாயனார் | வைகாசி | மூலம் |
| 26. | நமிநந்தியடிகள் நாயனார் | வைகாசி | பூசம் |

### 6. வம்பறுவரிவண்டுச் சருக்கம்

| | | | |
|---|---|---|---|
| 27. | திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் | வைகாசி | மூலம் |
| 28. | ஏயர்கோன்கலிக்காம நாயனார் | ஆனி | ரேவதி |

| | | | |
|---|---|---|---|
| 29. | திருமூல நாயனார் | ஐப்பசி | அசுவனி |
| 30. | தண்டியடிகணாயனார் | பங்குனி | சதயம் |
| 31. | மூர்க்க நாயனார் | கார்த்திகை | மூலம் |
| 32. | சோமாசிமாற நாயனார் | வைகாசி | ஆயிலியம் |

## 7. வார்கொண்ட வனமுலையாள் சருக்கம்

| | | | |
|---|---|---|---|
| 33. | சாக்கிய நாயனார் | மார்கழி | பூராடம் |
| 34. | சிறப்புலி நாயனார் | கார்த்திகை | பூராடம் |
| 35. | சிறுத்தொண்ட நாயனார் | சித்திரை | பரணி |
| 36. | சேரமான்பெருமாணாயனார் | ஆடி | சுவாதி |
| 37. | கணநாத நாயனார் | பங்குனி | திருவாதிரை |
| 38. | கூற்றுவ நாயனார் | ஆடி | திருவாதிரை |

## 8. பொய்யடிமையில்லாத புலவர் சருக்கம்

| | | | |
|---|---|---|---|
| 39. | புகழ்ச்சோழ நாயனார் | ஆடி | கார்த்திகை |
| 40. | நரசிங்க முனையரைய நாயனார் | புரட்டாசி | சதயம் |
| 41. | அதிபத்த நாயனார் | ஆவணி | ஆயிலியம் |
| 42. | கலிக்கம்ப நாயனார் | தை | இரேவதி |
| 43. | கலிய நாயனார் | ஆடி | கேட்டை |
| 44. | சத்தி நாயனார் | ஐப்பசி | பூசம் |
| 45. | ஐயடிகள் காடவர்கோனாயனார் | ஐப்பசி | மூலம் |

## 9. கறைக்கண்டன் சருக்கம்

| | | | |
|---|---|---|---|
| 46. | கணம்புல்ல நாயனார் | கார்த்திகை | கார்த்திகை |
| 47. | காரி நாயனார் | மாசி | பூராடம் |
| 48. | நெடுமாற நாயனார் | ஐப்பசி | பரணி |
| 49. | வாயிலார் நாயனார் | மார்கழி | இரேவதி |
| 50. | முனையடுவார் நாயனார் | பங்குனி | பூசம் |

## 10. கடல்சூழ்ந்த சருக்கம்

| | | | |
|---|---|---|---|
| 51. | கழற்சிங்க நாயனார் | வைகாசி | பரணி |
| 52. | இடங்கழி நாயனார் | ஐப்பசி | கார்த்திகை |
| 53. | செருத்துணை நாயனார் | ஆவணி | பூசம் |
| 54. | புகழ்த்துணை நாயனார் | ஆவணி | ஆயிலியம் |
| 55. | கோட்புலி நாயனார் | ஆடி | கேட்டை |

## 12. மன்னியசீர்ச் சருக்கம்

| | | | |
|---|---|---|---|
| 56. | பூசலார் நாயனார் | ஐப்பசி | அனுடம் |
| 57. | மங்கையர்க்கரசியார் | சித்திரை | உரோகணி |
| 58. | நேச நாயனார் | பங்குனி | உரோகணி |
| 59. | கோச்செங்கட்சோழ நாயனார் | மாசி | சதயம் |
| 60. | திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார் | வைகாசி | மூலம் |
| 61. | சடைய நாயனார் | மார்கழி | திருவாதிரை |
| 62. | இசைஞானியார் | சித்திரை | சித்திரை |

## 13. வெள்ளானைச் சருக்கம்

| | | | |
|---|---|---|---|
| 63. | சுந்தரமூர்த்தி நாயனார் | ஆடி | சுவாதி |

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# அறுபத்துமூன்று நாயன்மார்களின்

# திருநட்சத்திரங்கள்

## மாத வரிசை

குறிப்பு :— தொகையடியார்களில், தில்லைவாழந்தணர்களுக்குச் சித்திரை முதல் நாளிலும், ஏனையோர்க்குப் பங்குனி இறுதி நாளிலும் குருபூசை செய்வது வழக்கு.

### சித்திரை

சிறுத்தொண்டர்—பரணி.
மங்கையர்க்கரசியார்—உரோகிணி.
விறன்மிண்டர்—திருவாதிரை.
இசைஞானியார்—சித்திரை.
திருக்குறிப்புத்தொண்டர்—சுவாதி.
திருநாவுக்கரசர்—சதயம்.

### வைகாசி

கழற்சிங்கர்—பரணி.
நமிநந்தியடிகள்—பூசம்.
சோமாசிமாறர்—ஆயிலியம்.
திருஞானசம்பந்தர், முருகர், திருநீலநக்கர், திருநீலகண்ட யாழ்ப்பாணர் — மூலம்.

### ஆனி

அமர்நீதியார்—பூரம்.
கலிக்காமர்—இரேவதி.

### ஆடி

மூர்த்தியார், புகழ்ச்சோழர் — கார்த்திகை
கூற்றுவர்—திருவாதிரை.
பெருமிழலைக்குறும்பர்—சித்திரை.
சுந்தரர், கழறிற்றறிவார் என்னும் சேரமான்பெருமாள் — சுவாதி
கலியர், கோட்புலியார் — கேட்டை

### ஆவணி

செருத்துணையார்—பூசம்.
புகழ்த்துணையார்—ஆயிலியம்.
அதிபத்தர், இளையான்குடிமாறர் — மகம்.
குலச்சிறையார்—அனுடம்.
குங்குலியக்கலயர்—மூலம்.

### புரட்டாசி

உருத்திரபசுபதியார்—அசுவினி.
திருநாளைப்போவார்—உரோகிணி.
ஏனாதிநாதர்—உத்திராடம்.
நரசிங்கமுனையரையர்—சதயம்.

### ஐப்பசி

திருமூலர்—அசுவினி.
நெடுமாறர்—பரணி.
இடங்கழியார்—கார்த்திகை.
சத்தியார்—பூசம்.
பூசலார்—அனுடம்.
ஐயடிகள்காடவர்கோன்—மூலம்.

### கார்த்திகை

கணம்புல்லர்—கார்த்திகை.
மெய்ப்பொருளார்—உத்திரம்.
ஆனாயர்—அத்தம்.
மூர்க்கர்—மூலம்.
சிறப்புலியார்—பூராடம்.

### மார்கழி

சடையனார்—திருவாதிரை.
இயற்பகையார்—உத்திரம்.
மானக்கஞ்சாறர்—சுவாதி.
சாக்கியர்—பூராடம்.
வாயிலார்—இரேவதி.

### தை

கலிக்கம்பர்—இரேவதி.
கண்ணப்பர்—மிருகசீரிடம்.
அரிவாட்டாயர்—திருவாதிரை.
சண்டேசுவரர்—உத்திரம்.
திருநீலகண்டர்—விசாகம்.
அப்பூதியார்—சதயம்.

### மாசி

எறிபத்தர்—அத்தம்.
காரியார்—பூராடம்.
கோச்செங்கட்சோழர்—சதயம்.

### பங்குனி

நேசர்—உரோகிணி.
கணநாதர்—திருவாதிரை.
முனையடுவார்—பூசம்.
காரைக்காலம்மையார்—சுவாதி.
தண்டியடிகள்—சதயம்.

உ

திருச்சிற்றம்பலம்

## அறுபத்துமூன்று நாயன்மார்களின்

# திருநட்சத்திரங்கள்

---

## அகர வரிசை

**திருத்தொண்டர்—மாதம்—நட்சத்திரம்**

அதிபத்தர்—ஆவணி—ஆயிலியம்.
அப்பூதியார்—தை—சதயம்.
அமர்நீதியார்—ஆனி—பூரம்.
அரிவாட்டாயர்—தை—திருவாதிரை.
ஆனாயர்—கார்த்திகை—அத்தம்.
இசைஞானியார்—சித்திரை—சித்திரை.
இடங்கழியார்—ஐப்பசி—கார்த்திகை.
இயற்பகையார்—மார்கழி—உத்திரம்.
இளையான்குடிமாறர்—ஆவணி—மகம்.
உருத்திரபசுபதி—புரட்டாசி—அசுவினி.
எறிபத்தர்—மாசி—அத்தம்.
ஏயர்கோன்கலிக்காமர்—ஆனி—இரேவதி
ஏனாதிநாதர்—புரட்டாசி—உத்திரம்.
ஐயடிகள்—ஐப்பசி—மூலம்.
கணநாதர்—பங்குனி—திருவாதிரை.
கணம்புல்லர்—கார்த்திகை—கார்த்திகை.
கண்ணப்பர்—தை—மிருகசீரிடம்.
கழற்சிங்கர்—வைகாசி—பரணி.
கலிக்கம்பர்—தை—இரேவதி.
கலியர்—ஆடி—கேட்டை.
காரியார்—மாசி—பூராடம்.
காரைக்காலம்மையார்—பங்குனி—சுவாதி
குங்கிலியக்கலயர்—ஆவணி—மூலம்.
குலச்சிறையார்—ஆவணி—அனுடம்.
கூற்றுவர்—ஆடி—திருவாதிரை.
கோச்செங்கட்சோழர்—மாசி—சதயம்.
கோட்புலியார்—ஆடி—கேட்டை.
சடையனார்—மார்கழி—திருவாதிரை.
சண்டேசர்—தை—உத்திரம்.
சத்தியார்—ஐப்பசி—பூசம்.
சாக்கியர்—மார்கழி—பூராடம்.
சிறப்புலியார்—கார்த்திகை—பூராடம்.

**திருத்தொண்டர்—மாதம்—நட்சத்திரம்**

சிறுத்தொண்டர்—சித்திரை—பரணி.
சுந்தரர்—ஆடி—சுவாதி.
செருத்துணையார்—ஆவணி—பூசம்.
சேரமான்பெருமாள்—ஆடி—சுவாதி.
சோமாசிமாறர்—வைகாசி—ஆயிலியம்.
தண்டியடிகள்—பங்குனி—சதயம்.
திருக்குறிப்பு—சித்திரை—சுவாதி.
திருஞானசம்பந்தர்—வைகாசி—மூலம்.
திருநாவுக்கரசர்—சித்திரை—சதயம்.
திருநாளைப்போவார்—புரட்டாசி—உரோகிணி.
திருநீலகண்டக்குயவர்—தை—விசாகம்.
திருநீலகண்டப்பாணர்—வைகாசி—மூலம்
திருநீலநக்கர்—வைகாசி—மூலம்.
திருமூலர்—ஐப்பசி—அசுவனி
நரசிங்கமுனையர்—புரட்டாசி—சதயம்.
நமிநந்தியார்—வைகாசி—பூசம்.
நெடுமாறர்—ஐப்பசி—பரணி.
நேசர்—பங்குனி—உரோகிணி.
புகழ்ச்சோழர்—ஆடி—கார்த்திகை.
புகழ்த்துணையார்—ஆவணி—ஆயிலியம்.
பூசலார்—ஐப்பசி—அனுடம்.
பெருமிழலைக்குறும்பர்—ஆடி—சித்திரை.
மங்கையர்க்கரசியார்—சித்திரை—உரோகிணி.
மானக்கஞ்சாறர்—மார்கழி—சுவாதி.
முருகர்—வைகாசி—மூலம்.
முனையடுவார்—பங்குனி—பூசம்.
மூர்க்கர்—கார்த்திகை—மூலம்.
மூர்த்தியார்—ஆடி—கார்த்திகை.
மெய்ப்பொருள்—கார்த்திகை—உத்திரம்.
வாயிலார்—மார்கழி—இரேவதி.
விறன்மிண்டர்—சித்திரை—திருவாதிரை.

உ

திருச்சிற்றம்பலம்

மேலே குறிக்கப்படாத

# திருத்தொண்டர்களின் திருநட்சத்திரங்கள்



| திருத்தொண்டர் | திங்கள் | திருநட்சத்திரம் |
|---|---|---|
| **மாணிக்கவாசக சுவாமிகள்** | **ஆனி** | மகம் |
| *திலகவதியம்மையார்* | *தை* | *உத்திரம்* |
| *பட்டினத்தடிகள்* | *ஆடி* | *உத்திராடம்* |
| **நம்பியாண்டார் நம்பிகள்** | **வைகாசி** | **பூசம்** |
| **சேக்கிழார் சுவாமிகள்** | **வைகாசி** | **பூசம்** |
| **மெய்கண்ட சிவாசாரியார்** | **ஐப்பசி** | **சுவாதி** |
| *அருணந்தி சிவாசாரியார்* | *புரட்டாசி* | *பூரம்* |
| *மறைஞானசம்பந்த சிவாசாரியார்* | *ஆவணி* | *உத்திரம்* |
| *உமாபதி சிவாசாரியார்* | *சித்திரை* | *அத்தம்* |
| ***திருவள்ளுவர்** | மாசி | **உத்திரம்** |
| **மாதவச் சிவஞான முனிவர்** | **சித்திரை** | ஆயிலியம் |

*இவரது நாள் வைகாசித் திங்கள் அனுடம் என்றுங் கூறுவர்.



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

உமாபதி சிவாசாரியர் அருளிச்செய்த

# திருப்பதிக் கோவை

கோயிறிரு வேட்களநெல் வாயில்கழிப் பாலை குலவுபெரு மணமயேந் திரப்பள்ளி முல்லை, வாயில்கலிக் காமூர்சாய்க் காடுதிருப் பல்ல வனீச்சரம்வெண் காடுவளர் திருக்காட்டுப் பள்ளி, தாயிலான் குருகாவூர் காழிகோ லக்கா தருக்கிளர்புள் ளிருக்குவே ளூர்கண்ணார் கோயின், ஞாயிலியற் கடைமுடியே நின்றியூர் புன்கூர் நாடியநீ ரோன்னி யூர்வேள்விக் குடியே, ௧

கருதெதிர்கொள் பாடிமணஞ் சேரிதிருக குறுக்கை கருப்பறிய லூர்கதியே காட்டுகுரக் குக்கா, மருவும்வாழ் கொளிபுத்தூர் மண்ணிப்படிக் கரையே வளருமோ மாம்புலியூர் கானாட்டு முள்ளூர், திருநாரை யூர்கடம்பூர் பநதணைநல் லூர்பொன் றிகழ்கஞ்சனூர்கோடி காமங்கலக் குடியே, திருப்பனந்தா ளாப்பாடி சேய்ஞலூர் திருந்து தேவன்குடி திருவியலூர் திருக்கொட்டை யூரே, ௨

இன்னம்பர் திருப்புறம் பயம்விசய மங்கை யியல்வைகா வூர்நல்வட குரங்காடுதுறையே, பின்னமறு பழனமை யாறுநெய்த தானம் பெருமபுலியூர் மழபாடி திருப்பழுவூர் கானூ, ரன்னவன்பி லாலந்துறை மாந்துறைபாற் றுறையே யானைக்கா பைஞ்ஞீலி பாச்சிலாச் சிராம, மன்னுமீங் கோய்மலையி னோடறுபான் மூன்றே வடகரையிற் பதி;தென்பால் வாட்போக்கி யாமே, ௩

கடம்பந்துறை திருப்பராய்த்துறை கறகுடிமூக் கீச்சரங் கருதுதிருச் சிராப்பள்ளி திருவெறும்பி யூரே, நெடுங்களமே லைக்காட்டுப் பள்ளியாலம் பொழில்சீர் நிகழ்திருப்பூந் துருததிகண்டி யூர்சோற்றுத துறைமா, லடும்வேதி குடிதென்குடித் திட்டைபுள்ளமங்கை யணியார்சக கரப்பள்ளி யருங்கருகா வூரே, படர்பாலைத் துறைநல்லூர் திருவாவூ ரதனிற் பசுபதீச் சாஞ்சத்தி முற்றம்பட்டீச் சரமே, ௪

ஆறைவட தளிதிருவ லஞ்சுழியே குடமூக் கதனிற்கீழ்க் கோட்டங்கா ரோணநா கேச்சரங், கூறுமிடை மருதுகுரங் காடுதுறை நீலக் குடிவைகன மாடக்கோயி னல்லங்கோ ழம்பஞ், சாறமரா வடுதுறைதண் டுருததிதிரு வழுந்தூர் சகம்புகழ்மா யூரம்விளநகர்பறிய லூரோ, வீறுசெம்பொன் பள்ளிநனி பள்ளிவலம் புரமே வியன்றலைச்சங் காடாககூர் விளங்குகட வூரே, ௫

திருக்கடவூர் மயானமொடு திருவேட்டக் குடியே தெளிச்சேரி தருமபுர நள்ளாறு கோட்டா, றுரைக்குமம்பர்ப் பெருந்திருக் கோயின்மா காள முயர்மீயச் சூரிளங் கோ யிற்றிலதைப் பதிபூ, மருக்கமழ்பாம் புரநற்சிறு குடிவீழி மிழலை வன்னியூர் கருவிலிமன் பேணுபெருந் துறையென், கருத்துடைக்கு நறையூர்ச்சித தீச்சரததோ டரிசிற்கரைப்புத்தூர் சிவபுரமுங் கலையநல்லூர் காணே, ௬

கருக்குடிவாஞ் சியந்திருநன் னிலத்துப்பெருங் கோயில் கவின்கொண்டீச் சரம்பனையூர் விற்குடிதென் புகலூ, ரிருக்கும்வர்த்த மானேச்சர மிராமனதீச் சரமே யியல்பயற்றூர் செங்காட்டங் குடிமருக விருளே, முருக்குதிருச் சாத்தமங்கை நாகைக்கா

ரோண முன்றிருச்சிக் கற்றிருக்கீழ் வேளூர்தே வூரே, யரிக்கரியான் பள்ளியின்முக் கூட றிருவாரூ ரரனெறிமூ லட்டானம் பரவையுண்மண் டளியே, எ

மேலாகும் விளமர்கா வீரம்பெரு வேளூர் மிளிர்தலையா லங்காடு குடவாயில் சேறை, நாலூர்ம யானங்கடு வாய்க்கரைப் புதனூர் நவிலுமிரும் பூளைதிரு வரதைப் பெரும் பாழி, மாலூரு மவளிவணல் லூர்பரிதி நியமம் வாழ்வெண்ணி பூவனூர் பாதாளீச் சரமீர்ச், சேலூருந் திருக்களர்சிற் றேமமுசாத் தானந் திருவிடும்பா வனத்தோடு சேர்ந்தகடிக் குளமே, அ

தண்டலைநீ ணெறிகோட்டூர் வெண்டுறையோ டமுகே தருகொள்ளம் பூதூர்பே ரெயில்கொள்ளிக் காடு, கண்டருதெங் கூர்நெல்லிக்கா நாட்டியத்தான் குடியே காறாயில் கன்றாப்பூர் வலிவலங்கைச் சினதனோ, டண்டர்பிரான் கோளிலிதென் றிருவாய்மூர் மறைக்கா டகத்தியான் பள்ளிகோடிக் குழகருக்கேன் கரையி, லெண்டருநூற் றிரு பத்தே ; ழிப்பா லீழத்தி லிசைகோண மாமலைகே தீச்சரமென் றிரண்டே ; க

ஆலவா யாப்பனூர் பரங்குன்றே டகத்தோ டருங்கொடுங்குன் றந்திருப்புத் தூர் புனவா யிலிறே, டேலுமிரா மேச்சர மாடானைகா னப்பே ரெழிற்றிருப்பூ வணஞ் சுழிய லின்புறுகுற் றாலம், பாலலோ சனன்றிருநெல் வேலியொடு பாண்டி பதினான்கு ; மலைநாட்டி லஞ்சைக்கள மொன்றே ; சீலமிகு மவிநாசி திருமுருகன் பூண்டி திருநணு கொடிமாடச் செங்குன்றூர் தானே, க0

வெஞ்சமாக் கூடல்கொடு முடிகருவூர் கொங்கின் மேவுமே; ழாத்துறைவண் டேங் கானை மாட, மெஞ்சலில்கூ டலையாற்றூ ரெருக்கததம் புலியூ ரிணையகலுந இனைநகர் சோ புரமதிகை புகழே, விஞ்சுதிரு நாவலூர் முதுகுனறந திருநெல் வெண்ணெய்திருக் கோவலூ ரறையணிநல் லூரே, மஞ்சுதிக ழிடையாறு வெண்ணெய்நல்லூர் துறையூர் வடுகூர்வீ டேயருளுந் திருமாணி குழியே, கக

தண்ணார்தண் டலைப்பாதி ரிப்புலியூர் முண்டீச சரமபுறவார் பனங்காட்டூர் திருவா மாத் தூரே, யெண்ணரண் ணுமலையு நடுநாட்டி லிருபத் திரண்டாகு ; மிப்பாலே கம்ப மேற் றளிவிண், கண்ணோங்கு மதிலோண காந்தன் றளி யனேக தங்காவ தங்கச்சி நெறிக் காரைக் காடே, புண்ணாடு குரங்கணின்முட் டநதிருமா கறலோத தூர்வன்பார்த தான் பனங்காட் டூர்வல்லமாற் பேறே, கஉ

ஊறலிலம் பையங்கோட்டூர் விற்கோலமா லங்கா டியர்பாசூர் வெண்பாக்கங் கள்ளில்கா ளத்தி, மாறிதிரு வொற்றியூர் வலிதாயம் பாலி வடமுல்லை வாயில்வேற் காடு திரு மயிலை, யீறிதிரு வான்மியூர்கச் சூராலக் கோயி லிடைச்சுரங் கழுக்குன்ற மச்சிறு பாக் கம்மே, மாறிதிரு வக்கரையே யரசிலிதொல் லிரும்பை மாகாளந தொண்டைநன் னாட் டெண்ணின்முப்பா னிரண்டே ; கங

கோகரணந் துளுவதே யத்திலொன்றே; யிப்பாற் குலவுபருப் பதநீல பருப்பதமம் பிகைதன், பாகருறை யனேகதங்கா வதநதிருக்கே தாரம் பகர்கொடிததான் மலைவடக் கிற் பதியைந்தே ; யிவற்றோ, டாகவிரு நூற்றேழுபா னென்கேன்பர் மூவ ரருட்பதிக மிருக்குமூ ரதிகமாம் வைப்புத்;, தாகமுட னினைப்போர்க்குந் துதிப்போர்க்கும் வினை கள் சாராவாம் ; பிறப்பகலுஞ் ; சத்தியமுத் தியுமே. கச

திருப்பதிக் கோவை முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்

## உமாபதி சிவாசாரியார் அருளிச் செய்த

# திருப்பதிகக் கோவை

ஒன்றாகி யோரெழுபத் தொன்றிரூய் மூவர்தமிழ்
சென்றார் சிவதலங்கள் செப்புதற்கு—நின்று
கடக்குஞ் சாமுகனோர் காய்விழியா னீன்ற
கடக்குஞ் சாமுகனே காப்பு.

பன்னுசிவ தலமொருநூற் றைம்பதிற்று மூன்று பதிக மொன்று; நாற்பத்தொன் பதுபதிக மிரண்டா; முன்னுமிரு பதிற்றெட்டு நகர்பதிக மூன்று; மொரு பதின்ஞேர் தலம்பதிக மொருநான்கேன் றுணர்க; மன்னுமிரு நான்குதல மோரைந்தே பதிக; மற்றுமைந்து தலங்களுக்கு வருபதிக மாறும்; பினனுமைந்து வளநகர்க்குப் பெறும் பதிக மேழாம்; பேசுமொரு நான்குதலம் பெறும்பதிக மேட்டே. க

பரவுமொரு நான்குதலம் பதினொன்றம் பதிகம்; பன்னுமிரு தலம்பதிகம் பன்னி ரண்டாப் பகரு; முறைசெயிரு தலம்பதிகம் பதினேட்டா மிப்பா; லொருமூன்று தலங் களுக்கிங் குறுபதிக முரைக்கி, னிரவிவரு மறுநான்கு - முப்பத்திற்று நான்கு - நீடேழு பத்தொன்றுமென நிரனிரையா மாகக் கருதுசிவ தலமிருநூற் றெழுபதிற்று நான்கு கடைகாப்போ ரெழுநூற்று நாற்பதிற்ருன் பானே. உ

திருப்பழுவூர் சேய்ஞலூர் திருமுல்லை வாயி றிருவைகா கொடிமாடச் செங்குன்றூர் வியலூர், கருக்குடிதெங் கூர்பனந்தாள் கலிக்காமூர் தலைச்சங் காடுமயேந் திரப்பள்ளி கைச்சினங்கன் ரூப்பூர், குரக்குக்கா பெரும்புலியூர் திருக்காட்டுப் பள்ளி குடந்தைக்கீழ்க் கோட்டமொடு குடந்தைக்கா ரோண, மெருக்கத்தம் புலியூர்வெண் டுறைகண்ணூர் கோயி லிலம்பையங்கோட் டூர்சிக்க லிராமனதீச் சரமே, ங

பள்ளியின்முக கூடறிரு விரும்பூளை யாலூர்ப் பசுபதீச் சரம்பாலைத் துறைபருதி நியமம், கள்ளில்குரங் கணின்முட்டம் திருமுருகன் பூண்டி கஞ்சனூர் கச்சிநெறிக் காரைக்கா டோத்தூர், புள்ளமங்கை காட்டியத்தான் குடிகலைய நல்லூர் புக்கொளியூ ரவிநாசி பூவனூர் துறையூர், கொள்ளிக்கா டிடைச்சுரமச் சிறுபாக்கம் விளமர் கொட் டையூர் கொடுங்குன்றங் கூடலையாற் றூரே, ச

நெல்வேலி திருவழுந்தூர் தருமபுரம் பயற்றூர் நெடுங்களம்வக் கரையிருப்பை மாகாளம் வடுகூர், நெல்வெண்ணெய் வடகரைமாந் துறைதிருவிற் கோலநீரேச்சுரப் பள்ளி யகத்தியான் பள்ளி, நெல்வாயில் பேணுபெருந் துறைநாலூர் மயான நெல்லிக்கா விற்குடிவீ ரட்டமதி முத்தம், வல்லமறை யணிநல்லூர் தலையாலங் காடு வாட்போக்கி திருநாவ லூர்மயிலாப் பூரே, டு

திருவாரூர்ப் பரவையுண்மண் டளிசாத்த மங்கை சிற்றேமந் தெளிச்சேரி திருவு சாத் தானங், காவீரந் திருவாலம் பொழில்வெண்ணெய் நல்லூர் கச்சியனே கதங்காவ தங்கோடிக் குழக, ராசிலிதென் குடித்திட்டை வடமுல்லை வாயி லம்பர்ப்பெருந் திருக் கோயில் வெண்பாக்கஞ் சுழியல், பெருமணமிந் திரநீல பருப்பதம்வேற் காடு பேரெயில் பாற் றுறைமூக்கீச் சரமுண்டீச் சரமே, சு

பறியலூர் வீரட்டங் கானாட்டு முள்ளூர் பாதாளீச் சரமெதிர்கொள் பாடிவலி தாயஞ், சிறுகுடிகச் சூராலக் கோயில்கொள்ளம் பூதூர் திருப்புறவார் பனங்காட்டூர் விளநகர்தண் டலைநீ, ணெறியரதைப் பெரும்பாழி யூறல்கரு வூரா னிலையிடும்பா வனங்கடுவாய்க் கரைப்புத்தூர் கடம்பந், துறைதிருவே டகந்திருவஞ் சைக்களமா டானை சோபுரங்கற் குடிவடகு ரங்காடு துறையே, ௭

திருமாணி குழிவேட்டக் குடிதிருவாப் பாடி திருந்துதே வன்குடிமா கறல்சத்தி முற்றந், திருவாப்ப னூர்மீயச் சூரவ்வூர் தன்னிற் றிகழ்ந்ததிரு விளங்கோயில் வெஞ் சமாக் கூடல், பெருநீலக் குடிமண்ணிப் படிக்கரைநன் னிலதநுப் பெருங்கோயி றிருநணா திருப்பட்டீச் சரமே, திருவீங்கோய் மலைவன்பார்த் தான்பனங்காட் டூரே திருப்புகலூர் வர்த்தமா னேச்சரம்பாம் புரமே. ௮

கடைமுடியே யோணகாந் தன்றளிகோட் டூர்வை கன்மாடக் கோயிலிடை யாறு பழை யாறை, வடதளிநற் றினைநகரங் கோணமா மலைசீர் வன்னியூர் கருவிலிய னேக தங்கா வதநல், விடமேவு கடிக்குளநற் றிருக்களரோன் றிவைகட் கிரும்பதிக மோவ் வோன்றேன் றிசைத்திடுக; விப்பாற், குடவாயில் புனவாயி றாங்கானை மாடங் கோழம்ப மவளிவணல் லூர்கோலக் காவே, ௯

குருகாவூர் திருவேள்விக் குடிவிசய மங்கை குற்றாலங் குடமூக்குக் கோட்டாறு பனையூர், கருகாவூர் குரங்காடு துறையோமாம் புலியூர் கண்டியூர் வேதிகுடி கானூர் கோ காணந், திருவாரூ ரரனெறிபந் தணைநல்லூர் நல்லந் திருக்கண்டீச் சரந்தேவூர் திருச்சிராப் பள்ளி, பெருவேளூர் கீழ்வேளூ ரெறும்பியூர் கானப் பேர்திருமங் கலக் குடியாக் கூர்கோவ லூரே. ௧௦

திருப்பரங்குன் றந்திருப்பா திரிப்புலியூர் குறுக்கை திருப்புத்தூர் மணஞ்சேரி பாச்சிலாச் சிராமந், கருப்பறிய லூர்கேதீச் சரந்திருக்கே தாரங் கச்சிமேற் றளிமேலைத திருக்காட்டுப் பள்ளி, யருத்தியுறு பட்டினத்துப் பல்லவனீச் சரம்பே ரனபிலா லந் துறைப ராய்த்துறைவேட் களமிவ, குரைததசீ ரனனியூ ரிவ்விரண்டாம் பதிகமுள்ள தலங்; கடவூர்ம யானம்வாஞ் சியமே. ௧௧

துருத்திதிரு நனிபள்ளி திருமருக றிருப்பூந் துருத்திபுறம் பயங்கடவூர் புள்ளி ருக்கு வேளூ, ரரததுறைவாழ் கொளிபுத்தூர் வான்மியூர் பாசூ ரம்பர்மா காள மயிலாடு துறை வாய்மூர், திருக்கழுக்குன் றம்பாண்டிக் கொடுமுடிரா மேச்சரஞ் செங்காட்டங் குடிவெண்ணி திருச்செம்பொன் பள்ளி, பருப்பதம்புன் கூரரிசிற் கரைப்புத்தூர் சேறை பைஞ்ஞீலி கற்குடிமா மலைபதிக மூன்றே. ௧௨

வலம்புரமா லங்காடு சிவபுரங்கா ளத்தி வலிவலஞ்சாய்க் காடுதிருக் கோடிகா நகரம், நலந்திகழும் பூவணங்கோ ளிலிமின்றி யூரு நறையூர்ச்சித தீச்சரமு நான்கா தும் பதிகம்; வலஞ்சுழிநல் லூர்பழன மாமாத்து ரண்ணா மலைகடம்பூ ரின்னம்பர் நாரையூ ரைந்தா; நிலந்திகழ்நா கேச்சரமாற் பேறுமழ பாடி நெய்த்தானம் வெண் காடு நீள்பதிக மாறே; ௧௩

கயிலாய மானைக்கா நள்ளாறு நாகைக காரோணந் திருச்சோற்றுத துறையேழு; புகலூர், வயலாருங் கழிப்பாலை யொற்றியூர் திருவா வடுதுறையேட் டாந்;தில்லை மறைக் காடு மதுரை, யியலாரு முதுகுன்றம் பதினொன்று; கச்சி யேகம்ப மிடைமருதீ ரா;றையா றதிகை, யயலீரோன்பான்; வீழி-யாரூர்-சீகாழி யறுநான்கு - முப்பானென் - கெழுபத்தோன் றமே. ௧௪

திருப்பதிகக்கோவை முற்றிற்று.

— ~~~ —

திருச்சிற்றம்பலம்

## கொற்றவன்குடி - உமாபதி சிவாசாரியார்

அருளிச் செய்த

# திருமுறைகண்ட புராணம்

கருமுறை விண்டடி யவருயு மாறருள் கவுணியர் குலதீபந்
தருமுறை நாவுக் கரசா ரூரர் தாஞ்சே மித்திடுமத்
திருமுறை கண்ட புராண முரைக்கச் சிந்துர முகனற்றுன்
ஒருமுறை யிருமுறை மும்முறை வாழ்த்தி யுவந்தன் பொடுபணிவாம்.

**வேறு**

உலகமகிழ் தருசைய மீது தோன்றி யோவாது வருபொன்னி சூழ்சோ ணாட்டின்
றிலகமென விளங்குமணி மாட வாரூர்த் தியாகேசர் பதம்பணிந்து செங்கோ லோச்சி
யலகில்புகழ் பெறுராச ராச மன்ன னபயகுல சேகரன்பா லெய்து மன்ப
ரிலகுமொரு மூவருள் பதிக மொன்றொன் றேயினிதி னுரைசெய்ய வன்பாற் கேட்டு,

கையிரண்டு முச்சிமே லேறக் கண்ணீர் கரைந்தோட மெய்ம்முழுதும் புளகம் போர்ப்ப
வையன்மலர்ப் பதமுளத்தே கொண்டு போற்றி யரியமுறை தேடவெங்கு மிலாமை யா
னையுமனத் தினனுகி யிருக்குங் காலை, நாரையூ ரினிலாதி சைவமறை யோன்பால்[லே
வையமெலா மீடேறச் சைவம் வாழ மாமணிபோ லொருசிறுவன் வந்து தோன்றி, உ

வளமொடுப நயனவிதிச் சடங்கும் பூண்டு மறைமுதலாங் கலைபயின்று வருகா
லீன்ற, கிளர்மறையோ னூர்க்குச் செல்ல, மைந்தன் கேடில்பிதா வுரைத்தமொழிப்
படியே யந்தி, யிளமதிச்செஞ் சடைப்பொல்லாப் பிள்ளை யாரை யேத்தியா ராதிப்பா
னினிதி னேகி, யுளமலியன பொடுதிருமஞ் சனமுன் னுகு முரியவெலாஞ் செய்து
நிவே தனமுன் வைத்து, ௩

எம்பெருமா னமுதுசெய வேண்டு மென்ன விறைஞ்சிடவு மமுதுசெயா திருப்பக்
கண்டு, வெம்பியுள "மேதேனுந் தவறிங் குண்டோ? வேழமுக னே!யடியே னிவேதித்
திட்ட, பம்பமுத முண்ணுத தென்னை?" யென்னப் பரிந்து,தலை தனைமோதப் புகுங்கா,
லெம்மா "னம்பி!பொறு" வெனத்தடுத்,தவ் வமுத மெல்லா நன்கருந்த, வுவந்துநம்பி
நவில்வதானுன்; ௪

"எந்தையே! யினியடியேன் பள்ளிக் கேகி லெங்கடே சிகனடிப்பா னுத லாலே
சந்தமறை முதற்கலைக ணீயே யோதித் தரல்வேண்டு" மென,வேழ முகத்தோன் ருனு
மந்தமற வோதுவிக்க, வோதி நம்பி மகிழ்ந்தனனன்; றதுபோல மற்றை நாளும்
விந்தையொடு நிகழ,நம்பி யாண்டார் நம்பி மேவியருந் திடுஞ்செய்தி வேந்தன் கேளா,

"செல்வமிகு திருநாரை யூரின் மேவுஞ் சிவனளித்த மதகரிக்குச் சிந்தை கூர்ந்து
நல்லபுக ழுடையநம்பி யாண்டார் நம்பி நண்பினொடு நிவேதிப்பான் மதுர மிக்க [ன்றே,
வெல்லையில்வா ழைக்கனிதே னவலோ டப்ப மெள்ளுண்டை யிவ்வுலகோ ரெடுக்க" வெ
மல்லன்மிகு சேனையுட னிராச ராச மன்னவனு மந்நகரில் வந்து சேர்ந்தான். ௫

ஆங்கதனுக் கந்நகரி லிடம்போதாம லயல்சூழப் பதின்காத வகல வெல்லை, மாங்
கனிவா ழைக்கனிகள் வருக்கை யாவும் வந்தனவவ் வெல்லையெல்லா மருவ வைத்துப்

பாங்கினுட னம்பிதாள் பணிந்து மன்னன் பலகனிகள் கொணர்ந்தவெலாம் பகர்ந்து
போற்றி, "யீங்கிதனைப் பொல்லாத பிள்ளையாருக் கிப்பொழுதே நிவேதிக்க" வென்று
சொன்னான். எ

நம்பியா சன்சொன்ன வார்த்தை கேளா "நன்றுனது பணி" யென்ன வருளா
லுன்னித், தும்பிமுக னடிபணிந்து "மன்னனிங்குத் தொகுத்தனநீ யமுதுசெய
வேண்டு"மென்னக், கம்பமதக் களிற்றுமுகத் தானு மங்குக் கருதநினுட னம்பியுரைக்
கிசைந்து காட்ட, விம்பரினில் வந்தனநாற் சுத்தி செய்தே யிருந்தவெலாம் படைக்க,வவ
னேற்றல் செய்தான். அ

புகர்முகக்கை புறப்படவே படைத்த வெல்லாம் புகுந்தவிட மறியாமற் போன
பின்னை, யகநெகிழ மெய்யரும்பிக் கண்ணீர் வார நம்பிகழ லன்பினு லாசன் போற்றி,
"மிகவுமொரு விண்ணப்ப மடியேற் குண்டு ; வேதியனே! கே"ளென்று விளம்பு வான்
"மெய்ப், புகழுதுசேர் மூவர்தமிழ் தொண்டர் செய்தி பூதலத்தில் விளங்க"வெனப்
போற்றி னின்றான். கூ

அந்தவுரை கேட்டலுமங் கரசன் றன்னை நம்பிமகிழ்ந தருள்புரிவா "னருள்சேர்
மூவர், செந்தமிழ்க ளிருந்தவிட, மன்ப ருள்ளோர் செய்திக்கவ் விநாயகன்றான் சிந்தித
தெந்தா, யந்தவகை யேதென்று கேட்டா லெந்தை மகிழ்ந்தருளு மந்நெறியை வழாது
னக்குத், தநதிடுவென் மன்ன!பொறு" வென்று சொல்லித் தந்திமுகன் சந்நிதியிற்
றாழ்ந்து சென்றான். க0

ஓசென்றுபணிந் திபமுகத்தோன் பாதப் போதைச் சென்னியில்வைத் தவனருளிற்
றிளைதநுச் சிந்தை, யொன்றுமற வுருகி,விழி தாரைகொள்ள, வுண்மையினால் வந்தித
தங் குவாவோன் றன்னை, "யின்றமிழ்சேர் மூவர்தமி ழிருநத வெல்லை, யெல்லையில்சீர்த்
திருத்தொண்ட ரியல்பு மூர்த்தி!, நன்றுமருள் செய்தருள வேண்டு" மென்ன, நாகமுக
னம்பிக்கு நவில லுற்றான். கக

வார்ந்தருட்க ணீர்சொரிய நம்பி கேட்ப "வண்டமிழ்க ளிருநதவிட மன்று ளாடுங்
கூர்ந்தவிருட் கண்டர்புறக் கடையின் பாஙகர்க் கோலமலர்க் கைகளடை யாள மாகச்[சார
சார்ந்தன"வென் றருள்செய்து,தொண்டர் பேறுஞ் சாற்றுதலாற்,சகதலத்தோ ரருளைச்
வார்ந்ததமி ழிருந்தவிட, மன்பர் செய்தி, யததனையு நம்பிமனத் தருளிற் கொண்டார்.

கொண்டுகுல சேகரனுங் கோன்பால் வந்து,குஞ்சரதேதா னருள்செய்த கொள்கை
யெல்லா, மண்டுபெருங் காதலுடன சொல்லி, யந்த வண்டமிழின் பெருமைதனை வகுத்
துச் சொல்வார், "கண்டபெரு மந்திரமே மூவர்பாடல் கைகாணு மந்திரங் கண்ணுறுத
லோன் கூற, லெண்டிசையுஞ் சிவனருளைப் பெறுதற்காக விம்மொழியின் பெருமை
யையா னியம்பக் கேணீ!. கங

"சேடர்மலி காழிநகர் வேந்தர்தாமுந தேவர்பகழ் திருந்தோணிச் சிவனார் பங்கிற்
பீடுடைய வுமைமுலைப்பா னருளா லுண்டு பிஞ்ஞகனைச் சினவிடைமேற் பெருகக் கண்டு
தோடுடைய செவியன்முதற் கல்லூ ரென்னுந தொடைமுடிவாப் பரசமயத் தொகை
பாடினார் பதிகங்கள பாவி லொன்றும் பதினாறயிர முளதாப் பகரு மன்றே.[கண் மாளப்

திருநாவுக் கரையரெனுஞ் செம்மை யாளர் தீயமணர் சிறைநீங்க வதிகை மேவுங்
குருநாமப் பரஞ்சுடரைப் பரவிச் சூலை கொடுங்கூற்று யினவென்ன வெடுததுக் கோதி
லொருமானைத் தரிக்குமோரு வரையுங் காறு மொருநாற்பத் தோன்பதினு யிரம தாகப்
பெருநாமப் புகலூரிற் பதிகங் கூறிப் பிஞ்ஞகனு ரடியிணைகள் பெற்று ளாரே. கரு

பின்புசில நாளின்க ணுநூர் நம்பி பிறங்குதிரு வெண்ணெய்நல்லூர்ப் பித்தா
வென்னு, மின்பமுதற் றிருப்பதிக முழி தோறு மீறுய்மூப் பத்தெண்ணு யிரம தாக

முன்புபுகன் றவர்நொடித்தான் மலையிற் சேர்ந்தார் ; முறைகளெல்லாந் திருத்தில்லை மூதூர் தன்னி, லன்றவர்கை யிலச்சினையால் வைத்தார் : மன்ன! வாராய்ந்து தருக" வென வருளிச் செய்தார். கசு

"அருமறையைச் சிச்சிலிபண் டருநதத தேடு மதுபோலன்;றி துவென்று முளதா; முண்மைப், பரபதமுந் தற்பரமும் பரனே யன்றிப் பலரில்லை யென்றெழுதும் பனுவல்; பாரி, னெரியினிடை வேவா;தாற் றெதிரே யோடு; மென்புக்கு முயிர்கொடுக்கு; மிடுநஞ் சாற்றும்; கரியைவளை விக்கும்;கன் மிதக்கப் பண்ணும்; கராமதலை கரையி லுறக் காற்றுங் காணே." கஎ

என்றெனறு நம்பிக்குப் பரிவா லுணமை யின்றமிழின் பெருமைதனை யியம்பக் கேட்டுக், குன்றொன்று பேருருவங் கொண்டாற் போலுங் குஞ்சரத்தோ னருளினை யுட் கொண்டு மன்னன், மன்றினிடஞ் சென்று,மறை யோர்க டொண்டர் வார்சடை யோர் காவலுடை மரபோர்க் கெல்லா, நன்றெங்கள் கணபதிதன் சொல்லி தென்று நன்மையுடன் மன்னவனா நவிலுங் காலை, கஅ

அத்தகையோர் "தமிழ்வைதத மூவர் வந்தா லறைதிறக்கு"மெனவுரைக்க,வாசன் றானு
மெய்ததகுசீ ரம்பலவர்க் குற்ற செல்வ விழாவெடுதது, விளம்புதமிழ் மூவர் தம்மை
யுய்த்தணிவீ தியினிலுலா வருவித தும்பர் நாயகன்றன் கோயில்வல மாக்கி, யுள்ளே[ன.
சிததமெலா முருக்குதமி ழிருக்கைசேரச் சேர்த்தி,"யவர்சேர்ந்த"தெனச் செப்பினின்றா

ஐயர்நட மாடுமம் பலத்தின் மேல்பா லருள்பெற்ற மூவர்தம தருள்சேர் செய்ய
கையதுவே யிலச்சினையா யிருந்த காப்பைக் கண்டவர்க ளதிசயிப்பக் கடைவாய் நீக்கிப்
பொய்யுடையோ ரறிவுதனைப் புலன்கண் மூடும் பொற்பதுபோற் போதமிகும் பாட றன்
னொய்யசிறு வன்மீக மூடக் கண்டு நொடிப்பளவி னிற்சிந்தை நொந்த வேந்தன், [னை

பார்த்ததனைப் புறததுய்ப்ப வுரைதது,மேலே படிந்திருந்த மண்மலையைச் சேரதன்னிச்
சீர்த்ததில தயிலமலி கும்பங் கொண்டு செல்லுநனை யச்சொரிந்து திருவே டெல்லா
மார்ததவரு ளதனாலே யெடுதது நோகக வலகிலா வேடுபழு தாகக் கண்டு [ன்.
''தீர்த்தமுடிக் கணிபரனே! பரனே!" யென்னச் சிந்தைதளர்ந் திருகணீர் சோர நின்றா

ஏந்துபுகழ் வளவனிவவா றன்பினாலே யிடர்க்கடலின கரைகாணா தினையுங் காலைச், சார்ந்தமலை மகள்கொழுந னருளால் "வேதச் சைவநெறித தலைவரெனு மூவர் பாடல், வேய்ந்தனபோன் மண்மூடச் செய்தேயீண்டு வேண்டுவன வைத்தோ"மென் றுலகி லுள்ள, மாந்தரொடு மனனவனுங கேட்கு மாற்றால் வானகததி லோரோசை யெழுந்த தன்றே. உஉ

அந்தமொழி கேட்டலுமே, மன்னன்றானு மாடினான; பாடினான்; னலக்கண் யாவுஞ், சிந்தினான்; னமுதமுண்டான் போல நெஞ்சந் தேறினான்; னம்பிதிரு வடியிற் றாழ்ந்தான்; பந்தமறு சிவனடியார் கொள்க வென்னாப் பண்டாரந் திறந்துவிட்டான்; பரிவு கூர்ந்தான் ; இந்தவகைப் பெருங்களிகொண் மன்னன் றானு மெழின்முறையை முன்போல வகுக்க வெண்ணி, உங

மன்னுதமிழ் விரகரெங்கள் காழிவேந்தர் வகுததருளா லமைத்ததிரு முறையோர் மூன்று,மன்னவகை வாகீசர் முறையோர் மூன்று,மாரூ ருரைத்ததிரு முறைய தொன்றாந், துன்னுவகை யேழாகத தொகுததுச செய்தான தூயமனு வெழுகோடி யென்ப துன்னித், தன்னிகரி றிருவருளான் மன்னன்றானுந் தாரணியோர் வீடுபெறுந் தன்மை சூழ்ந்தே. உச

**வேறு**

பண்புற்ற திருஞான சம்பந்தர் பதிகமுந்நூற்
றெண்பத்தி னான்கினா விலங்குதிரு முறைமூன்று ;
நண்புற்ற நாவரசர் முந்நூற்றேழ் மூன்றினால்
வண்பெற்ற முறை;யொன்று நூற்றினால் வன்றொண்டர் ; ௨௫

ஆகவளர் திருமுறையே ; ழருட்டிருவா சகமொன்று ;
மோகமெறி திருவிசைப்பா மாலைமுறை யொன்று;சிவ
போகமிகு மந்திரமா முறையொன்று ; புகழ்பெறவே
பாகமிகுந் திருமுறைகள் பத்தாக வைத்தார்கள். ௨௬

வைத்ததற்பி னம்பிகழன் மன்னர்பிரான் மகிழ்ந்திறைஞ்சிச்
சித்திதரு மிறைமொழிந்த திருமுகப்பா சுரமுதலா
வுய்த்தபதி கங்களையு மொருமுறையாச் செய்கவெனப்
பத்திதருந் திருமுறைகள் பதினொன்றாப் பண்ணினார். ௨௭

மந்திரங்க ளேழுகோடி யாதலினான் மன்னுமவ
ரிந்தவகை திருமுறைக ளேழாக வெடுத்தமைத்துப்,
பந்தமுறு மந்திரங்கள் பதினொன்று மாதலினா
லந்தமுறை நான்கினொடு முறைபதினொன் றாக்கினார். ௨௮

ஆக்கியபின் றிருத்தொண்டத் தொகையடைவை யருளாலே
நோக்கியபின் னாயன்மார் நூடங்கடைவுந், தொழிற்பேறும்
பாக்கியத்தா லிபமுகத்தோ னருள்செய்த பகுதியினால்
வாக்கியல்சே ரந்தாதி நம்பியடை வேவகுததார். ௨௯

சீரருள்சே ரறுபதது மூவர்தனி ; திருக்கூட்டஞ்
சாருமவ ரொன்பானும்; தண்டமிழா னுரைசெய்து
பேரிசையாம் வகையடைவு புவியினிடைப் பெருமையினாற
சீருலவு திருவெருக்கத் தம்புலியூர் சென்றடைந்தார். ௩௦

சென்னியரு ணம்பியிவ ரந்நகரைச் சேர்ந்துசிவன்
மன்னுதிருக் கோயிலினை வலங்கொண்டு பணிந்"தரனே
யின்னிசைதந் தரு"ளென்ன விரக்கமுடன் குறைந்திரப்பக்
கன்னியொரு பங்குடையோ னருள்செய்த கடனுரைப்பாம். ௩௧

"நல்லிசையாழ்ப் பாணனார் நன்மரபின் வழிவந்த
வல்லியொருத் திக்கிசைகள் வாய்ப்பவளித் தோ"மென்று
சொல்ல,வவ டனையழைத்துச் சுருதிவழிப் பண்டமுவ
நல்லிசையின் வழிகேட்டு நம்பியிறை யுண்மகிழ்ந்தார். ௩௨

"ஆங்கவளை யம்பலத்து ளாடுவார் திருமுன்பே
பாங்கினுடன் கொடுவந்து பண்ணடைவு பயில்பாட
லோங்கருளான் முறைபணிததற் கொக்கு"மென வோரோசை
நீங்கரிய வானின்க ணிகழவர சன்கேட்டான். ௩௩

மன்னனுக்கு நம்பிக்கு மறையவர்மூ வாயிரவர்
பன்னரிய திருத்தொண்டர் பலதுறையோர்க் குங்கேட்க

வின்னருண்முன் வியர்துரைத்த விவண்முதலா விசைத்தவிசை
தென்னிலமேன் மிகத்தோன்றத் திருவருளாற் றேன்றியதாம். ௩௪

சொன்னட்ட பாடைக்குத் தொகையெட்டுக் கட்டளையா ;
மின்னிசையாற் றருந்தக்க ராகத்தேழ் கட்டளையாம் ;
பன்னுபழந் தக்கரா கப்பண்ணின் மூன்றுளதா ;
முன்னரிய தக்கேசிக் கோரிரண்டு வருவித்தார். ௩௫

மேவுகுறிஞ் சிக்கஞ்சு ; வியாழக்குறிஞ் சிக்காறு
பாவுபுகழ் மேகராகக் குறிஞ்சிப்பா விரண்டு ;
தேவுவந்த விந்தளத்தின் செய்திக்கு நான்;கினிய
தாவில்புகழ்க் காமரத்தின் றன்மைதனக் கிரண்டமைததார். ௩௬

காந்தார மாகிய பியந்தையாங் கட்டளைக்கு
வாய்ந்தவகை மூன்றாக்கி, வன்னட்ட ராகத்திற்
கேய்ந்தவகை யிரண்டாக்கிச், செவ்வழியொன் றாக்கி,யிசைக
காந்தார பஞ்சமத்தின் கட்டளைமூன் றாக்கினர். ௩௭

கொல்லிக்கு நாலாக்கிக், கவுசிகத்துக் கூறும்வகை
சொல்லிரண் டாக்கி,மிகு துங்கிசைநேர் பஞ்சமததிற்
கொல்லையினி லொன்றாக்கிச், சாதாரிக் கொன்பதாப்,
புல்லுமிசைப் புறநீர்மைக் கொன்றாகப் போற்றினர். ௩௮

அந்தாளிக் கொன்றாக்கி, வாகீச ரருந்தமிழின்
முந்தாய பலதமிழுக் கொன்றொன்றா மொழிவித்து,
நந்தாத கேரிசையாங் கொல்லிக்கு நாட்டிலிரண்,
டுந்தாங் குறுந்தொகைக்கோர் கட்டளையா விரித்துரைத்தார். ௩௯

தாண்டகமாம் பாவுக்கோர் கட்டளையாத் தாபித்தங்
காண்டகையார் தடுத்தாண்ட வையாரு டிய்யமுறைக்
கீண்டிசைசே ரிந்தளத்துக் கிரண்டாக வெடுத்துரைதது,
நீண்டதக்க ராகத்துக் கிரண்டாக நிகழ்வித்தார். ௪௦

கூறரிய நட்டரா கததிரண்டு, கொல்லிக்கு
வேறுவகை மூன்றாக, மிகுந்தபழம் பஞ்சுரததுக்
கேறும்வகை யிரண்டாக்கி, யின்னிசைதேர் தக்கேசிப்
பேறிசையா றாக்கி,யதிற் காந்தாரம் பிரித்திரண்டாம். ௪௧

ஒன்றாகுங் காந்தார பஞ்சமததுக்; கோரிரண்டா
நன்றான சீர்நட்ட பாடைக்கு; நவின்றுரைக்கிற்
குன்றாத புறநீர்மைக் கிரண்டாகுங்; கூறுமிசை
யொன்றாகக் காமரத்துக் கொன்றாகப் போற்றினர். ௪௨

உற்றவிசைக் குறிஞ்சிக்கோ ரிரண்டாக வகுத்தமைததுப்,
பற்றரிய செந்துருத்திக் கொன்றாக்கிக், கவுசிகப்பாற்
றுற்றவிசை யிரண்டாக்கித், தூயவிசைப் பஞ்சமததுக்
கற்றவிசை யொன்றாக்கி, யரனருளால் விரித்தமைத்தார். ௪௩

இந்தவகை சிவன்செவிப்பா லெக்கண்ணுந் தழைத்தோங்க
வந்தமிலா வறுபத்து மூவாரு ளம்புவிமே

னநதியிட மும்மலமு நலலுலகோா நீஙகியிடச்
சிநதையருட் சிவமாகத தெளிவிததா னருடசெனனி ௪௪

சீராருந திருமுறைகள கணடதிறற பாாததிபனு
மோாரு மிறைவனையு மெழிலாரு நமபியையு
மாராத வனபினுட னடிபணிநதங் கருளவிரவச
சோராத காதனமிகுந திருத்தொண்டர் பதநதுதிப்பாம் ௪௫

**திருமுறைகண்டபுராணம் முற்றிற்று**

ஆகத திருவிருததம - ௪௬

---

திருபபதிகோவை, திருப்பதிககோவை, திருமுறைகணட புராணம எனுமிவை ஆககியோா பெயரில்லாமலே பல பதிபபுககளிற பதிககபபடடுளளன. இவை உமாபதி சிவனாா திருவாககலல எனறு கூறுவாருமுணடு. இஙகு இறுதிப பாடடிலே "திருத தொணடா பதநதுதிபபாம" (45) எனறது திருததொணடா புராணசாரததினைக குறிககுமெனத தோனறுவதால அதன ஆசிரியராகிய உமாபதி சிவாசாரியாரே திருமுறைகண்ட புராணமுஞ் செயதாராவா எனற கொளகை வலியுறுகினறது.



திருச்சிற்றம்பலம்

கொற்றவன்குடி - உமாபதிசிவாசாரியார்

அருளிச் செய்த

"திருத்தொண்டர்புராணப்பயன்" என்னும்

# திருத்தொண்டர் புராணசாரம்



மல்குபுகழ் வன்றொண்ட ரருளா லீந்த
வளமருவு திருத்தொண்டத் தொகையின் வாய்மை
நல்கும்வகை புல்கும்வகை நம்பி யாண்டார்
நம்பிதிரு வந்தாதி நவின்ற வாற்றாற்
பல்குநெறித் தொண்டர்சீர் பரவ வல்ல
பான்மையா ரெமையாளும் பரிவால் வைத்த
*செல்வமிகுந் திருத்தொண்டர் புராண மேவுந்
திருந்துபய னடியேனுஞ் செப்ப லுற்றேன். க

சுந்தரமூர்த்தி நாயனார்

தண்கயிலை யதுநீங்கி, நாவ லூர்வாழ்
சைவனார் சடையனார் தனய னாராய்,
மண்புகழ வருட்டுறையா னோலை காட்டி
மணம்விலக்க, வன்றொண்டா, யதிகை சேர்ந்து,
நண்பினுட னருள்புரிய, வாரூர் மேவி,
நலங்கிளரும் பரவைதோ ளயரா வைகித்,
திண்குலவும் விறன்மிண்டர் திறல்கண் டேத்துந
திருத்தொண்டத் தொகையருளாற் செப்பி னாரே. உ

செப்பலருங் குண்டையூர் நெல்ல ழைத்துத்,
திருப்புகலூர்ச் செங்கல்செழும் பொன்னாச் செய்து,
தப்பின்முது குன்றர்தரும் †பொருளாற் றிட்டுத்,
தடத்தெடுத்துச், சங்கிலிதோள் சார்ந்து, நாத
னொப்பிறனித் தூதுவந், தாறூடு கீறி,
யுறுமுதலை சிறுமதலை யுமிழ நல்கி,
மெய்ப்பெரிய களிறேறி, யருளாற் சேர
வேந்தருடன் வடகயிலை மேவி னாரே. ங

தில்லைவாழந்தணர்

நல்லவா னவர்போற்றுந் தில்லை மன்று
ளுடகஞ்செய் பெருமானுக் கணியார், நற்பொற்
றொல்லைவான் பணியெடுத்தற குரியார், வீடுந்
‡துறநதநெறி யார், தொண்டத் தொகைமுன் பாடத்

பாடபேதம்—*செல்வமலி. †பொன். ‡துறந்தநிலையார்.

"தில்லைவா ழந்தண"ரென் றெடுத்து நாதன் செப்புமரு
 ளுடையார், முத் தீயார், பத்திக்
கெல்லைகாண் பரியா,ரொப் புலகிற் றூமே
 யேய்ந்துளா, ரெமையாள வாய்ந்து ளாரே. ௫

### திருநீலகண்ட நாயனார்

தில்லைநகர் வேட்கோவர் துர்தத ராகித,
 "தீண்டிலெமைத் திருநீல கண்ட" மென்று
சொல்லுமனை யாடனையே யனறி மற்றுந்
 துடியிடையா ரிடையின்பந் துறந்து, மூத,தங்
கெல்லையிலோ டிறைவைத்து மாற்றி "'நாங்க
 ளெடுத்தில'மென் றியம்பு"மென, விழிந்து பொய்கை
மெல்லியலா ளுடன்மூழ்கி, யிளமை யெய்தி,
 விளங்குபுலீச் சுரத்தானை மேவி னாரே. ௬

### இயற்பகை நாயனார்

எழிலாருங் காவிரிப்பூம் பட்டி னத்து
 ளியல்வணிக, ரியற்பகையா, ரிருவர் தேட
வழலாய பிரான்றூர்தத மறையோ னாகி
 யாயிழையைத் தரவேண்டி யணைய, வையன்
கழலாரப் பணிந்து,மனைக் கற்பின் மேன்மைக்
 காதலியைக் கொடுத, தமர்செய் கருததால் வந்த
பிழையாருஞ் சுற்றமெலாந் துணித்து, மீளப்
 பிஞ்ஞகனு ரழைததருளப், பெறறு ளாரே. ௭

### இளையான்குடி மாறநாயனார்

மன்னியவே ளாண்டொன்மை யிளையை மாறர், வறுமையா லுணவுமிக மறந்து வைகி,
புன்னருநள் ளிருண்மழையி லுண்டி வேண்டி யும்பர்பிரா னணைய,வய லுழுது வித்துஞ்
செந்நெல்முளை யமுதுமனை யலக்கா லாககிச், சிறுபயிரின கறியமுது திருந்தச் செய்து,
பன்னலரு முணவருந்தற் கெழுந்த சோதிப் பரலோக முழுதாண்ட பான்மை யாரே.

### மெய்ப்பொருணாயனார்

சேதிபர்தற் கோவலூர் மலாட மன்னர்,
 திருவேட மெய்ப்பொருளாத் தெளிந்த சிநதை
நீதியினா ; ருடன்பொருது தோற்ற மாற்றா
 னெடுஞ்சினமுங் கொடும்படையு மிகழா வண்ணம்
மாதவர்போ லொருமுறைகொண் டணுகி வாளால்
 வன்மைபுரிந் திட,மருண்டு வந்த தத்தன
காதலுற, "நமர்தத்தா !" வென று நோக்கிக்,
 கடிதகல்வித, திறைவனடி கைக்கொண் டாரே. ௮

### விறன்மிண்ட நாயனார்

விளங்குதிருச் செங்குன்றூர் வேளாண் டொன்மை
 விறன்மிண்டர் திருவாரூர் மேவு நாளில்,
"வளங்குலவு தொண்டரடி வணங்கா தேகும்
 வன்றொண்டன் புறகவனை வலிய வாண்ட

துளங்குசடை முடியோனும் புற''கென் றன்பாற்
சொல்லுதலு, மவர்தொண்டத் தொகைமுன் பாட
உளங்குளிர "வுள"தென்று; ரதனு லன்ன
துவகைதர வுயர்கணத்து ளோங்கி னாரே. க

### அமர்நீதி நாயனார்

பழையாறை வணிகரமர் நீதி யார்பாற்
பாலசிறு முனிவடிவாய்ப் பயிலு நல்லூர்க்
குழைகாதர் வந்,தொருகோ வணந்தை *வைத்துக்,
கொடுத்தனை யெடுத்தொளித்துக், குளித்து வந்து,
தொழிலாரு மதுவேண்டி, வெகுண்டு, "நீரித
துலையிலிடுங் கோவணநேர் தாக்கு" மென்ன,
வெழிலாரும் பொன்மனைவி யிளஞ்சே யேற்றி,
யேறினர்,வா னுலகுதொழ வேறி னாரே. க0

### எறிபத்த நாயனார்

திருமருவு கருவூரா னிலையார் சாத்துஞ் சிவகாமி யார்மலரைச் சிந்த, யானை
யாரெனறியோ ரெறிபத்தர் பாக ரோடு மறவெறிய, வென்னுயிரு மகற்றீ ரென்று
புரவலனார் கொடுத்தபடை யன்பால் வாங்கிப்,புரிகதரிவான் புக,வெழுந்த புனிதவாக்காற்
கரியினுடன் விழுந்தாரு மெழுந்தார் ; தாமுங் கணநாத ராதுகாவல் கைக்கொண் டாரே.

### ஏனாதிநாத நாயனார்

ஈழக் குலச்சான்று, ரேயின னூர்வா ழேனாதி நாதனு, ரிறைவ னீற்றைத்
தாழத் தொழுமரபார், படைக ளாற்றுந் தனமை†பெறு வதிசூரன் சமரிற் றோற்று
வாழத் திருநீறு சாத்தக் கண்டு மருண்டார், தெருண்டார்,கை வாள்வி டா,நேர்
வீழக் களிப்பார்போ னின்றே, யாக்கை விடுவிதஅச், சிவனருளே மேவி னாரே. கஉ

### கண்ணப்ப நாயனார்

வேடர்தி பதியுடுப்பூர் வேந்த னாகன்
விளங்கியசேய், திண்ணனார், கன்னி வேட்டைக்
காடதில்வாய் மஞ்சனமுங் குஞ்சிதரு மலருங்
காய்ச்சினமென் றிடுதசையுங் காளத்தி யார்க்குத்
தேடருமன் பினிலாறு தினததளவு மளிப்பச்,
சிறுசிவ கோசரியுந் தெளிய,விழிப் புண்ணீ
ரோட,வொரு கண்ணப்பி, "யொருகண் ணப்ப !
வொழிக''வெனு மருள்கொடரு குறகின் றாரே. கங

### குங்குலியக்கலய நாயனார்

சீலமலி திருக்கடவூர்க் கலய னாரந்
திகழ்மறையோர், பணிவறுமை சிதையா முன்னே
தாலியைநெற் கொளவென்று வாங்கிக் கொண்டு,
சங்கையில்குங் குலியத்தாற் சார்ந்த செல்வர்,
ஞாலமிகழ் திருப்பனந்தா ளுதர் நேரே
நரபதியுந் தொழக்கச்சா லயர்ந்து போதப்,
பாலமுத முண்டாரு மாசு மெய்திப்
பரிந்தமுது செயவருள்சேர் பான்மை யாரே. கச

பா - ம்—*வைக்கக். †பொறுஅரிசூரன்.

## மானக்கஞ்சாற நாயனார்

கஞ்சநகர் மானக்கஞ் சாற னார்சீர்க் காதன்மகள் வதுவைமணங் காண நாதன்
வஞ்சமலி மாவிரதத் தலைவ னாகி வந்துபுகுந் தவளளக மகிழ்ந்து நோக்கிப்
"பஞ்சவடிக் கா"மென்ன, வரிந்து நீட்டும் பத்தரெதிர் மறைந்திறைவன் பணித்த வாக்கா
லெஞ்சலில்வண் குழல்பெற்ற பேதை மாதை யேயர்பிராற் குதவி,யரு ளெய்தி னாரே.

## அரிவாட்டாய நாயனார்

தாவில்கண மங்கலத்துள் வேளாண் டொன்மைத் தாயனார், நாயனார் தமக்கே செந்நெற்
றூவரிசி யென,விளைவ தவையே யாகத், துறந்துணவு வடுவரிசி துளங்கு கீரை [ன்னே,
யாவினிளைந் துடன்கொணர,வோர்கமரிற் சிந்த, வழிந்,தரிவாள் கொண்டூட்டி யரியா மு
மாவடுவி னொலியுமரன் காமுக் தோன்றி வாள்விலக்கி யமரர்தொழ வைத்த வன்றே.

## ஆனாய நாயனார்

மங்கலமா மழநாட்டு மங்கலமா நகருண்
மருவுபுக ழானாயர், வரரா மேய்ப்பார்,
கொங்கலர்பூந் திருக்கொன்றை மருங்கு சார்ந்து
குழலிசையி னைந்தெழுத்துங் குழைய வைத்து,
தங்குசரா சரங்களெல்லா முருகா நிற்பத்,
தம்பிரா னணைந்துசெவி தாழ்த்தி வாழ்ந்து
பொங்கியவான் கருணைபுரிந் "தென்று மூதப்
போதுக"வென் றருள,வுடன் போயி னாரே. கஎ

## மூர்த்தி நாயனார்

வழங்குபுகழ் மதுரைநகர் மூர்த்தியாராம் வணிகர்,திரு வாலவாய் மன்னர் சாத்தத்
தழங்குதிர முழங்கைதரத், தேய்த்த வூறுந தவிர்ந,தமணர் வஞ்சனையுந் தவிர, மன்ன
னிழந்தவுயி ரினனாக, ஞால நல்க, வெழில்வேணி முடியாக, விலங்கு வேட
முழங்குபுக ழணியாக, விரைநீ றாக மும்மையுல காண்டருளின் முன்னி னாரே. கஅ

## முருக நாயனார்

மன்னுதிருப் புகலூர்வாழ் முருக னாரா மறையவர்கோ, வர்த்தமா னீச்ச ரத்தார்
சென்னியினுக் கழகமரு மலர்கள் கொய்து *திருமாலை புகழ்மாலை திகழச் சாத்திக்,
கன்னிமதிற் கழுமலரா டுடைய நாதன காதன்மிகு மணங்காணுங் களிப்பி னாலே
யின்னல்கெட,வுடன்சேவித் தருளான் மீளா திலங்குபெரு மணத்தானை யெய்தி னாரே.

## உருத்திரபசுபதி நாயனார்

பங்கமில்வண் புகழ்நிலவு தலையூர் வாழும்
பசுபதியா ரெனுமறையோர், பணிந்து செந்தே
னங்கமல மடுவினிடை யல்லு மெல்லு
மகலாதே யாகளமா யமர்ந்து, நின்று,
திங்கள்வளர் சடைமுடியா னடிகள் போற்றித,
திருவெழுத்து முருத்திர மும்†திகழ வோதி,
மங்கையிட முடையபிரா னருளான் மேலை
வானவர்க டொழுமுலகின் மன்னி னாரே. உ0

---

பா - ம்—*திகழ்மாலை புகழ்மாலை திருந்தச் சாத்தி. †திருந்த.

### திருநாளைப்போவார் நாயனுர்

நன்மைதிகழ் மேற்காநாட் டாத னூர்வாழ்
நந்தனுர், புறத்தொண்டர், "நாளைப் போகப்
பொன்மலிதென் புலியூர்க்"கென் றுரைப்பார், புன்கூர்ப்
பொய்கையமைத் தடலேறு பிரிய நோக்கி,
வன்மதில்சூழ் தில்லையிறை யருளால் வாய்ந்த
வண்டழலி னிடைமூழ்கி, மறையோர் போற்ற
மின்மலிசெஞ் சடைமுனியா யெழுந்து, நாதன்
விளங்குநடந் தொழுமன்று ணேவி னுரே. உக

### திருக்குறிப்புத்தொண்ட நாயனுர்

கொந்தலர்பூம் பொழிற்கச்சி நகரே காலிக்
குலத்தலைவர், தவர்குறிப்புக் குறித்து ளார்பால்
வந்திறைவர் "நமக்கின்று தரீ ராகின்
வருந்துமுட" லெனவாங்கி மாசு நீத்த
கந்தைபுல ராதொழிய, மழையு மாலைக்
கடும்பொழுதும் வரக்கண்டு, கலங்கிக், கன்மேற்
சிந்தமுடி புடைப்பளவிற், றிருவே கம்பர்
திருக்கைகொடு பிடித்துயர்வான் சேர்த்தி னுரே. உஉ

### சண்டேசுர நாயனுர்

வேதமலி சேய்ஞலூ ரெச்ச தத்தன்
விளங்கியசேய், மறைபயிலும் விசார சன்மர்,
கோதனமேய்ப் பவன்கொடுமை பொறாது, தாமே
கொண்டுநிரை மண்ணியின்றென் கரையி னீழற்
றூதகியின் மணலிலிங்கத் தான்பா லாட்டத்,
தாதைபொறு தவையிடறுந் தான்கண் மாளக்
காதி,மலர்த் தாம-முயர் நாம-முண்ட
கல-மகனும் பத-மருளாற் கைக்கொண் டாரே. உந

### திருநாவுக்கரசு நாயனுர்

போற்றுதிரு வாமூரில் வேளாண் டொன்மைப்
பொருவில் *கோறுக் கையாதிபர் புகழ னுர்பால
மாற்றருமன் பினிற்றிலக வதியா மாது
வந்துதித்த பின்புமரு ணீக்கி யாருந்
தோற்றி,யமண் சமயமுறு துயர நீங்கத்
துணைவரரு டாவந்த சூலை நோயாற்
பாற்றருநீ ளிடரெய்திப், பாடலிபுத் திரத்திற்
பாழியொழித், தானதிகைப் பதியில் வந்தார். உச

வந்துதமக் கையரருளா னீறு சாத்தி,
வண்டமிழா ேேனய்தீர்ந்து, வாக்கின் மன்னுய்,
வெந்தபொடி - விடம்-வேழம் - வேலை - நீந்தி,
வியன்சூலங், கொடியிடபம் விளங்கச் சாத்தி,

---

பா - ம்—*குறுக்கை.

யர்தமிலப் பூதிமக னரவு மாற்றி,
யருட்காசு பெற்று,மறை யடைப்பு நீக்கிப்,
புநிதமகிழ்ந் தையாற்றிற கயிலை கண்டு,
பூம்புகலூ ரான்பாதம் பொருந்தி னாரே. ௨௫

### குலச்சிறை நாயனார்

கோதில்புகழ் தருமணமேற் குடியார், கோவண்
குலச்சிறையார், தென்னர்குல வமைச்சர், குன்றா
மாதவர்க ளடிபரவு மரபார், பாண்டி
மாதேவி யாருள்வான் பயிர்க்கு வேலி,
காதனமிகு கவுணியர்கோன் வாதிற் றோற்ற
கையரைவை கைக்கரைசேர் கழுவி லேற்று
நீதியினா, ராலவாய் நிமலர்ச் சேர்ந்த
நின்மலனா, ரென்மலங்க ணீக்கி னாரே. ௨௬

### பெருமிழலைக்குறும்ப நாயனார்

கொண்டல்பனி வளர்சோலை மிழலை நாட்டுக்
கோதில்புகழ்ப் பெருமிழலைக் குறும்ப னார்,சி
ரண்டர்பிரா னடியவருக கடியா ராகு
மாதரவா லணுக்கவன் றொண்டர்க் காளாய்,
மண்டொழுமெண் டருசித்தி வாய்ந்து ளார்தாம்,
வன்றொண்டர் வடகயிலை மருவு நாண்மு
னெண்டிகழு மறைமூல நெறியூ டேகி,
யிலங்கொளிசேர் வடகயிலை யெய்தி னாரே. ௨௭

### காரைக்காலம்மையார்

தங்குபுகழ்க் காரைக்கால் வணிகன மிக்க தனதத்தன் றரும்புனித வதியார், மாவின
செங்கனிக டிருவருளா லழைப்பக், கண்டு திகழ்கணவ னதிசயித்துத் தேச நீங்க,
வங்கவுட விழ்ந்து,முடி நடையா லேறி, "யம்மையே!" யெனநாத, "னப்பா" வென்று,
பொங்குவட கயிலைபணிந், தாலங் காட்டிற் புனிதனட மனவரதம் போற்றி னாரே. ௨௮

### அப்பூதியடிக ணாயனார்

அந்தமினற் றிங்களூர் வருமப்பூதி யருமறையோர், திருநாவுக் கரசி னாமம்
பந்தரிடை யெழுதக்,கண் டாசு மெய்தப், பணிந்து,பரி கலமேடிப் படப்பை சேர்ந்த
மைந்தனுயி ருயர்கதலி யிலைமேற் றுஞ்சும் வாளரவு கவர,வுடன் மறைத்தல் கேட்டுச்
சிந்தைமகிழ்ந் தயர்பதிக மருந்தாற் றீர்த்துத் திருவமுது செய,வருளைச் சேர்ந்துளாரே

### திருநீலநக்க நாயனார்

நீதிதரு மறையோர்வாழ் சாத்த மங்கை நீலநக்க ரயவந்தி நிமலர் மேனி
யூதிவிழுஞ் சிலம்பிகடிந் தவளை நீத்தார்க், குமியாத விடநாத னுறுநோய் காட்டக்,
காதனமிகு மனைவியையு மகிழ்ந்து மேவிக்,காழியர்கோ னமுதுசெயக் களித்து வாழ்ந்து,
வேதிகையிற் பாணனார்க் கிடமு நல்கி, விளங்குபெரு மணத்தானை மேவி னாரே. ௩௰

### நமிநந்தியடிக ணாயனார்

நண்ணுபுகழ் மறையோர்வா ழேமப் பேறூர் நமிநந்தி யடிகடிரு விளக்கு நல்க,
வெண்ணெயம ணர்கள்விலக்க, நீரா லாரு ரிலங்குமா னேறி யாருக் கேற்று நாளிற்,

கண்ணமணர் கெடக்,கண்பெற் றடிகள் வாழக், காவலனு ளிபக்தங்கள் கட்டு வித்தே,
யண்ணலருள் கண்டாரு ரமர்ந்து'தொண்டர்க் காணி'யெனு மாசினரு ளடைந்தனாரே.

### திருஞானசம்பந்தமூர்த்தி நாயனூர்

காழிநகர்ச் சிவபாத விதயர் தந்த
கவுணியர்கோ னழு,துமையாள் கருதி யூட்டு
மேழிசையி னமுதுண்டு, தாளம் வாங்கி,
யிலங்கியமித திலச்சிவிகை யிசைய வேறி,
வாழுமுய லகனகற்றிப், பந்த ரேய்ந்து,
வளர்கிழிபெற், றாவின்விட மருகற் றீர்தது,
வீழிநகர்க் காசெய்தி, மறைக்கதவம் பிணிதது,
மீனவன்மே னியின்வெப்பு விடுவித தாரே. ௩௨

ஆரெரியிட் டெடுததவே டவைமுன் னேற்றி,
யாற்றிலிடு *மேடெதிர்போ யணைய வேற்றி,
யோரமண ரொழியாமே கழுவி லேற்றி,
யோதுதிருப் பதிகததா லோட மேற்றிக்,
காருதவு மிடிபுததன் றலையி லேற்றிக்,
காயாத பனையின்முது கனிக ளேற்றி,
யீரமிலா வங்கமுயி ரெய்த வேற்றி,
யிலங்குபெரு மணத்தானை யெய்தி னாரே. ௩௩

### ஏயர்கோன்கலிக்காம நாயனூர்

ஏதமில்வே ளாளர்பெரு மங்க லத்து
ளேயர்கோன் கலிக்காம "ரிறையை நேரே
தூதுகொளு மவனணுகி லென்னு" மெனனுந்
துணிவினர்பா, லிறைவனருஞ் சூலை யேவி
"வேதனைவன் றொண்டன்வரி னீங்கு" மெனன,
வெகுண்டுடல்வாள் கொடுதுறந்து, மேய †நாவற்
போதகமு முடலிகழ, வெழுந்து, தாழ்ந்து,
போற்றி,யது விலக்கி,யருள் பொருந்தி னாரே. ௩௪

### திருமூல நாயனூர்

கயிலாயத் தொருசித்தர், பொதியிற் சேர்வார்
காவிரிசூழ் சாத்தனூர் கருது மூலன்
பயிலாநோ யுடனவீயத, துயர நீடும்
பசுக்கனைக்கண், டவனுடலிற் பாய்நது, போத,
அயலாகப் பண்டையுட; லருளான் மேவி
யாவடுதண் டுறையாண்டுக் கொருபா வாகக
குயிலாரு மாசடியி லிருந்து, கூறிக,
கோதிலா வடகயிலை குறுகி னாரே. ௩௫

### தண்டியடிகணயனூர்

திருவாரூர் வருநதண்டி யடிகள், காட்சி
சேராதார், குளந்தொட்டற் கமணர் சீறிக்
"குருடா!நீ முன்செவிடுங் கூடிற" றென்று
குறித்தறியைப் பறித்தெறியக், கொதித்துத், தங்க

பா - ம்—*ஏடெதிரே. †நாவற்போதகம் - திருநாவலூரார்.

ணருளாலே விழித,தெவரு மந்த ராக,
வமணர்கலக் கம்பலகண், டவர்கள் பாழிப்
பருவான கற்பறித்,தா விககரையுங் கட்டிப்,
பரனருளா லமருலகம் பற்றி னரே. ௩௬

பூர்க்க நாயனர்

தொண்டைவள நாட்டுவளர் வேற்காட் டூர்வாழ்
தொல்லுழவர், நற்சூதர், சூது வென்று,
கொண்டபொருள் கொண்டன்பர்க் கமுத ளிக்குங்
கொள்கையினர், திருக்குடந்தை குறுகி யுள்ளார்,
விண்டிசைவு குழறுமொழி வீணர் மாள
வெகுண்டிடலான் பூர்க்கரென் விளம்பு நாம
மெண்டிசையு மிகவுடையா, ரண்டர் போற்று
மேழுலகு முடனுரு மியல்பி னரே. ௩௭

சோமாசிமாற நாயனர்

அம்பர்நக ரந்தணர்சோ மாசி மாற,
ரன்பர்களாம் யாவர்க்கு மன்பினமு தளிப்பா,
ரும்பர்திகழ் வகையாகம் பலவுஞ் செய்யு
முண்மையினு, ரைந்தெழுத்து மோவா நாவார்,
நம்பர்திகழ் திருவாரூர் நயந்து போறறு
நாவலர்கோ னடிபரவு நன்மை யாலே
யிம்பர்தொழ வும்பர்பணிந் தேதத மேலே
யேழுலகு முடனுரு மியல்பி னரே. ௩அ

சாக்கிய நாயனர்

சங்கமங்கை வரும்வேளாண் டலைவர், காஞ்சிச்
சாக்கியரோ டியைந்,தவர்தந தவறுணு சைவத
அங்கமலி பொருளுமுணர்ந், தநத வேடந்
துறவாதே, சிவலிங்கந் தொழுவோா, கண்டோ
ரங்கன்மலர் திருமேனி யழுந்தச் சாத்தி,
யமருநாண் மறந்தொருநா ளருந்தா தோடிச்
செங்கலெறிந் திடுமௌவின், மகிழ்ந்த நாதன
றிருவருளா லமருலகஞ் சேர்நது ளாரே. ௩௯

சிறப்புலி நாயனர்

திருவாக்கூ ரருமறையோ, ருலக மேதகுஞ்
சிறப்புலியார், மறப்புலியா ருரிமேற் செங்க
ணரவார்த்தார் வருமேற்ருர்க் கன்ப ரானர்க்
கமுதளிப்பா, ரொளிவெண்ணீ றணிந்த மார்பா,
பெருவாக்கான் மறைபரவி யாகம் போற்றும்
பெற்றியினு, ரைநதெழுத்தும் பிறழா தோதிக்
கருவாக்கா விறைவன்ரு ளிணைகள் சேர்ந்த
கருத்தினு, ரெனையாவுந் திருத்தி னரே. ௪௦

### சிறுத்தொண்ட நாயனார்

பல்குமருத் துவரதிபர், செங்காட்டங் குடிவாழ்
படைத்தலைவ, ரமுதளிக்கும் பரஞ்சோதி யார்,மெய்ச்
செல்வமிகு சிறுத்தொண்டர், காழி நாடன்
திருவருள்சேர்ந் தவர்,வளருஞ் சீராளன் றன்னை
நல்குதிரு வெண்காட்டு நங்கைசமைத் திடப்பின்
னன்மதிச்சந் தனத்தாதி தலைக்கறியிட் டுதவப்
புல்கவரும் வயிரவர்தா மகிழ்ந்துமக வருளப்
போற்றியவர் சிவனருளே பொருந்தி னாரே. ௬௧

### சேரமான்பெருமாணாயனார்

காவலர்ம கோதையார், கொடுங்கோ ளூர்க்கோக்,
கழறியவை யறிந்தகோச், சிலம்போசைக் கருத்தார்,
நாவலர்கோ னன்ப,"ரடிச் சேர" னென்றே
நவின்றுவரும் வண்ணனை நயந்த கோ, நற்
பாவலர்கோப், பாணபத் திரனல் வாய்ந்த
பரமர்திரு முகம்வாங்கிப் பணிகோ, வெற்பின்
மேவியகோ, வானைக்குக் குதிரை வைத்த
வீரர்கோ, வெனையாளுஞ் சேரர் கோவே. ௬௨

### கணநாத நாயனார்

கந்தமலி வயற்காழி மறையோ, ரேத்துங்
கணநாதர் திருத்தோணிக் கடவு ளார்க்கு
நந்தவனம் பலவமைத்து, மலருங் கொய்து,
நற்றாமஞ் சொற்றாம நயந்து சாத்தி,
வந்தவரைத் தொண்டாக்கிப், பணிகள் பூட்டி,
*வாதுசெய்த வாரணத்தை மகிழ்ந்து வாழ்த்திப்,
புந்திமகிழ்ந், தரனருளாற் கயிலை மேவிப்
பொருவில்கணத் தவர்காவல் பொருந்தி னாரே. ௬௩

### கூற்றுவ நாயனார்

குன்றாத புகழாளர், களந்தை வேந்தர், கூற்றுவனார், மாற்றலர்மண் கொண்டு சூடப்
பொன்றாழு முடிவேண்டப், புலியூர் வாழும் பூசுரர்கள் கொடாதகலப், புனித னீந்த
மன்றாடுந் திருவடியே முடியாச்சூடி, மாநிலங்காத, திறைவனுறை மாடக் கோயிற்
சென்றாசை யுடன்வணங்கிப் பணிகள் செய்து, திருவருளா லமருலகஞ் சேர்ந்து ளாரே.

### பொய்யடிமையில்லாத புலவர்

பொய்யறியாக் கபிலரொடு பரண ராதிப்
புலவோர்பொற் பார்கலைகள் பொருந்த வோதிச்,
செய்யுளிடை வளராசு மதுர நல்ல
சித்திரம்வித் தாரமெனத் தெரிக்குஞ் செம்மை
மெய்யுடைய தொடைகளெல்லா மன்று ளாடன்
மேவியகோ னிருதாளில் விரவச் சாத்திக்,
கையுடையஞ் சலியினரா, யருளான் மேலைக்
கருதரிய வமருலகங் கைக்கொண் டாரே. ௬௪

*வாதுசெய்த வாரணம் - சமண்வாது வென்ற ஆளுடைய பிள்ளையார்.

### புகழ்ச்சோழ நாயனார்

பொழின்மருவுங் கருவூர்வாழ் புகழார் சோழர்,
"போதகம்போ லென்னுயிரும் போக்கு" மென்றே,
யழலவிர்வான் கொடுத்தபிரா, னதிக மான்மே
லடர்ந்தபெரும் படையேவ வவர்கொண் டேய்ந்த
தழல்விழிகொ டலைகாண்பார், கண்ட தோர்புன்
சடைத்தலையை முடித்தலையாற் றாழ்ந்து வாங்கிக்,
கழல்பரவி, யதுசிரத்தி னேந்தி, வாய்ந்த
கனன்மூழ்கி, யிறைவனடி கைக்கொண் டாரே. ௫௬

### நரசிங்கமுனையரைய நாயனார்

நாடுபுகழ் முனைப்பாடி நாடு மேய நரசிங்க முனையர்,புவி நயந்து, மன்று
ளாடுமவ ராதிரைநா ளடியார்க் கம்பொ னமுதளிப்பா, ரொளிவெண்ணீ றணிந்துநூர்த்த
வேடமுடை யவர்க்கிரட்டிச்செம்பொ னீந்து,விடுத்,தழகாராலயங்கள் விளங்கச்செய்து,
தோடலர்தா ருடையபிரா னருளை யாளத் தோன்றினு, ரெனையருளி னூன்றி னாரே.

### அதிபத்த நாயனார்

அலையாருங் கடனாகை நகருள் வாழு மதிபத்தர், பரதவர்க ளதிபர், வேலை
வலைவாரி வருமீனிற் றலைமீ னீசன் வார்கழற்கே யென்றுவிடு மரபார், பன்னாட்
டலையான தொருமீனே சார, நாளுந் தந்தொழிலால் விடுத்து,மிடி சாரச், செம்பொ
னிலையாரு மணிநயந்த மீனொன் றெய்த, நீத,தருளா லிறைவனடி நேர்ந்து ளாரே. ௫௮

### கலிக்கம்ப நாயனார்

கடவுளருட் கண்ணார்கள் பயிலுந் தொல்லைக் கடந்தைநகர், வணிகர்கலிக் கம்ப, ரன்பர்க்
கடிமையுற வமுதளிப்பா, ரடியா னீங்கி யருளுருவா யன்பருட னணைய வேத்தி,
யிடையிலவ ரடியிணையும் விளக்கா நிற்ப, விகழ்மனைவி கரகமலி யிரண்டு கையும்
படியில்விழ வெறிந்,தவள்செய் பணியுந் தாமே பரிந்து,புரிந் தானருளை பற்றி னாரே.

### கலிய நாயனார்

தடமதில்சூ ழொற்றியூர் நகருள் வாழுஞ்
சக்கரப்பா டியர்குலமெய்த தவமா யுள்ளார்,
படர்புகழார் கலியனார், நலியுங் கூற்றைப்
பாய்ந்தவர்க்கு விளக்கெரிக்கும் பரிவான் மற்றோ
ருடலிலராய்ச், செக்குழல்வார்க், கதுவு நேரா,
துயர்மனைவி யைக்கொள்வா ருளரு மின்றி,
மிடறுதிர மகனிறைய வரிய, நாதன்
வியன்கைகொடு பிடிப்ப,வருண் மேவி னாரே. ௬௰

### சத்தி நாயனார்

விரிதருகா விரிநாட்டு வரிஞ்சை யூர்வாழ்
வேளாளர், சத்தியார், விமலர் பாதத
துரியவர்க ளடிபரவு மொருமை யார்,நா
வோவாமே யைந்தெழுத்து முரைக்கு நீரா,
ரிருவின் மிட றுடையபிரா னடியார் தம்மை
யிகழ்வார்நாத தண்டாயத திடுக்கி வாங்கி
யரியுமது திருத்தொழிலா வுடையார், மன்று
ளாடியசே வடிநீழ லடைந்து ளாரே. ௬௧

### ஐயடிகள்காடவர்கோனாயனார்

வையமிகழ் பல்லவர்தங் குலத்து வந்த மாமணி,மா நிலமுழுது மகிழ்ந்து காக்கு மையடிகள் காடவர்கோ, னருளா லூல்க ளறிந்,தரசு புரிந்திடுத லமையு மென்றே, பொய்யனைய வுடல்வாழ்வு கழியு மாறு பொருந்தியிடும் புகழ்வெண்பாப் புலியூர் மேவுஞ் செய்யதிரு வடிமுதலாப் பதிக டோறுஞ் செப்பினு, ரென்வினைக டப்பி னாரே. ௫௨

### கணம்புல்ல நாயனார்

இலகுவட வெள்ளாற்றுத் தென்பால் வாழு மிருக்குவே ளூரதிப, ரெழிலார் செனனிக கலைவலவா ரடிபரவுங் கணம்புல்லர், தில்லைக் கருதுபுலீச் சரத்தார்க்குக் காதற் றீப விலைதரத்தா மிட,மிடியா லொருநாட் புல்லா னீடுவிளக் கிட,வதுவு நேரா தாகத், *தலைமயிரி னெரிகொளுவு மளவி, லுதன ருவாத †வாழ்வருளுந் தன்மை யாரே. ௫௩

### காரி நாயனார்

திருக்கடவூர் வருமறையோர், காரி யாரத்
திகழ்தொண்டர், வண்டமிழ்நூ றிருந்த வோதி
விருப்பொடுதம் பெயராற்பா விளம்பி, மும்மை
வேந்தரையு முறைமுறையே மேவி, யங்க
ணுரைத்தவுரை நயமாக்கி, யவர்பா லேய்ந்த
வொண்பொருளா லாலயங்க ளோங்கச் செய்து,
தரைக்குளருந் தவர்க்கேவ றகமுன போற்றுந்
தன்மையா லருள்சேர்ந்த நன்மை யாரே. ௫௪

### நின்றசீர்நெடுமாற நாயனார்

கன்னன்மலி நெல்வேலிக் கவினார் மாறர்,
கவுரியர்கோ, னமணருறு கலக்க மெல்லாம்
பொன்னனையில்சூழ் சிரபுரக்கோ னனைய மாற்றிப்,
புனிதமிகு நீறணிந்து, போற்றி செய்து,
மனனுபுகழ் மங்கையருக் கரசி யாரா
மலர்மாது மணிமார்ப மகிழ்ந்து, மாற்றார்
வெருகிடுதல் கண்,டரசு புரிந்து, காழி
வேந்தருள் சேர்ந்தபெரு விறலி னாரே. ௫௫

### வாயிலார் நாயனார்

ஞாயிலார் மதிற்றெண்டை நாட்டு மேன்மை
நண்ணுமயி லாபுரியின் வேளாண் டொன்மை
வாயிலார், மலைவில்லா னடியே போற்றி,
மறவாமை தலைநின்ற மனமே செம்பொற்
கோயிலா, வுயர்ஞானம் விளக்கா, நீராக்
குலவியவா னந்த,மன்பே யமுதாக் கொண்டு,
தாயிலா னிருசரண மிகழ வேத்துந்
தன்மையா, ரருள்சேர்ந்த நன்மை யாரே. ௫௬

### முனையடுவார் நாயனார்

பொன்னிவளந் தருநாட்டுப் புகழு நீடூர்ப்
பொருவிறிரு மலிவேளாண் டொன்மை மிக்கார்,
முன்னியவர் முனையடுவா, ரிகலார் போரின்
முரணழிவார் தமக்காக மொழிந்த கூலி

பா - ம்—*தலையின் மயிர். †வாமருளுந் தகைமையோரே.

மன்னுநிதி கொண்டு,சயங் கொடுத்து, வந்த
வளர்பொருளா மிறைவனடி வழுவா வன்பர்க்
கன்னமவர் நசையின்மிக மிசைய நல்கு
மன்பர்,துன்ப மலையாவு மகன்று ளாரே. ௫௭

### கழற்சிங்க நாயனார்

காடவர்தங் குலமுவந்த கழலார் சிங்கர்,
காதன்மிகு தேவியுடன் காவ லாரு
ராடவல பெருமானைப் பணிவா, ரங்கோ
ரகன்றமலர் தனைமோந்த வரிவை மூக்கைச்
சேடுடைய செருத்துணையா ரரியக், கேட்டுத்,
திறலரசர் மலரெடுத்த செங்கை யென்றே
சூடகமுன் கைதடிந்து, ஞாலங் காத்த,
தூய்மையா ரருள்சேர்ந்த வாய்மை யாரே. ௫௮

### இடங்கழி நாயனார்

கோநாட்டுக் கொடும்பாளூ ரிருக்கும் வேளிர்
குலத்தலைவ, ரிடங்கழியார், கொங்கிற் செம்பொ
னானேற்றார் மன்றின்முக டம்பொன் மேய்ந்த
வாதித்தன் மரபோர், நெற் கவர்ந்தோ ரன்பர்
போராப்ப ணிருளின்கட் காவ லாளர்
புரவலர்முன் கொணர,வவர் புகலக் கேட்டு,
மானேற்றா ரடியாரே கொள்க வென்று,
வழங்கி,யர சாண்டருளின் மன்னி னாரே. ௫௯

### செருத்துணை நாயனார்

இரைத்தலையார் புனற்பொன்னி மருக னன்னாட்
டெழிலாருந் தஞ்சைநக ருழவ, ரேதஞ்
செருத்துணையார், திருவாரூர் சேர்ந்து வாழ்வார்,
செல்வமிகும் பல்லவர்கோன் றேவி வீழ்ந்த
மருத்துணையார் மலரெடுத்து மோப்பக் கண்டு,
வளமலிபூங் கத்தியா லவண்மூக் கீர்ந்த
கருத்துணையார், விறற்றிருத்தொண் டினையே செய்து
கருதலரு மமருலகங் கைக்கொண் டாரே. ௬௰

### புகழ்த்துணை நாயனார்

புண்ணியர்கள் புகழழகார் திருப்புத் தூர்வாழ்
புகழ்த்துணையா, ரகத்தடிமைப் புனிதர், சின்னாள்
மண்ணிகழ மழைபொழியா வற்கா லத்தால்
வருந்துடல நடுங்கிடவு மணிநீ ரேந்தி,
யண்ணன்முடி பொழிகலச முடிமேல் வீழ
வயர்ந்தொருநாட் புலம்ப,வர னருளா லீந்த
நண்ணலரு மொருகாசுப் படியால் வாழ்ந்து,
நலமலிசீ ரமருலக நண்ணி னாரே. ௬௧

### கோட்புலி நாயனார்

குலவுபுகழ் நாட்டியத்தான் குடிவே ளாளர்,
கோட்புலியார், குவித்துயர்த்த செந்நெற் கூடு
நிலவணிவார்க் கமைத,தானை நிறுத்தி, யொன்னார்
நேர்மலைவார், திருவாணை நினையா தேநெற்
சிலமிடியா லழித்தபடி யறிந்து, வாளாற்
சேர்ந்தபெருங் கிளைஞருடல் சிதற வீசி,
யிலகுமொரு குழவியையு மெறிந்து,நாத
னெண்ணரிய கருணைநிழ லெய்தி னாரே. ௬௨

### பத்தராய்ப்பணிவார்கள்

தொண்டரடித் தொழல்,பூசைத் தொழின்மகிழ்த, லழகார்
துளங்கியவர்ச் சனைபுரித, லுருகுதிகிய மங்கள்
கொண்டபணி திருவடிக்கே கொடுத்த, லீசன்
குணமருவு மருங்கதையைக் குலவிக் கேட்டு
மண்டிவிழி துளும்பன,மயிர் சிலும்ப, லுனனன்,
மருவுதிருப் பணிகாட்டி வருப வாங்கி
யுண்டிகொளா தொழித,லென விவையோ ரெட்டு
முடையரவர் பத்தரென வுரைத்து ளாரே. ௬௩

### பரமனையேபாடுவார்

அருந்தமிழால், வடகலையா, லருளா லொன்று லறிவுநெறி மருவுமருங் *கவிகள் யாவுந
திருந்தியவா னவர்பணிய மன்று ளாடுந் தேவர்பிரான் கழலிணையே சேர வோதி,
விருந்திடுநா வுடையபயன் மேவி னோர்தா, மேலானே மெனமகிழ்ந்து, விழிநீர் சோரப்,
பரிந்தருளாற் பரமனையே பாட வல்ல பான்மையா ரெமையாளு மேன்மை யாரே. ௬௪

### சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார்

பாரணவும் புலனந்தக் கரண மொன்றும் படராமே நடுநாடி பயிலு நாதங்
காரணபங் கயன்முதலா மைவர் வாழ்வுங் கழியுநெறி வழிபடவுங் கருதி, மேலைப் [வுஞ்
பூரணமெய்ப் பரஞ்சோதிப் பொலிவு நோக்கிப், புணர்ந்தனைந்த சிவானுபவ போக மே
ஈரணவு மவரன்றே வெம்மை யாளுஞ் சிதத்தைச் சிவன்பாலே வைத்து ளாரே. ௬௫

### திருவாரூர்ப்பிறந்தார்

பொங்கியமா தவமுடையார் வருண நான்கிற பொருந்தினர்க,ளல்லாத புகழி னுள்ளார்,
சங்கையிலா வருந்தவமுன் புரிந்தா, ரிங்குச் சார்விலா, ரிறைவனருள் சார்த லாலே
கங்கைவாழ் சடைமுடியா னருளை நீங்காக் கணநாத ரெனவாழுங் கருத்தர், கன்னிச்
செங்கண்வரால் வளர்வாவி திகழு மாரூர்ச் சிறந்துளா ரெமையாளப் பிறந்து ளாரே. ௬௬

### முப்பொழுதுந்திருமேனிதீண்டுவார்

செப்பலருந் தவமுடைய செம்மை யாளர், சிறுகாலே மலர்வாவி திகழ மூழ்கி, [மைத
யொப்பிறிரு நீறணிந்து, நியதி யாற்றி, யோவாமே யைந்தெழுத்து †முரைத்து, மேன்
தப்பில்சிவா கமவிதியா லின்பா லன்பார் தன்மையா னன்மையார் தகையா ரென்று
முப்பொழுதுந் திருமேனி தீண்ட வல்ல முறைமையார் பிறவிதெறுந் திறமை யாரே.

---

பா - ம்—*கலைகள். †உணர்ந்துரைத்துத.

### முழுநீறுபூசிய முனிவர்

கற்பமனு கற்பமுப கற்ப மென்றிக் கடனணைந்த திருநீறுங் கனற்க ணீறும
பொற்புடைய வாசனுசா னங்கி யாறு பொல்லாத பூமியெதிர் புனைத லாகா
வற்புதமாந் திரிபுண்ட மதியின் பாதி யகிலாங்கந் தீபமிகு மழகார் வட்ட
முறபொலிய வுடலணியு முறையா ரன்றோ முழுநீறு பூசவல்ல முனிவர் தாமே. ௬௮

### அப்பாலுமடிச்சார்ந்தார்

தாரரு மூவேந்தர் பயிலுந தொல்லைத
தமிழ்நாட்டப் புறத்திறைவன சரணஞ் சார்ந்த
சீராருந் தொண்டர்களு, மண்ட ரேத்துந
திருத்தொண்டத் தொகையருளாற் செப்புங காலத
தோராருந் தொடையிலுரு திப்பா - லப்பா -
லெங்கைபிரா னடியடைந்த வியல்பி னோரு,
மாராத காதலுடை யவர்க ளன்றோ
வப்பாலு மடிச்சார்ந்த வடியார் தாமே. ௬௯

### பூசலார் நாயனூர்

பொருவருந்தண் டகநாட்டு நின்ற வூர்வாழ் பூசுரர்கோப், பூசலார், புந்தி யாலே
யிருநிதியந் தேடி,யா லயமு மாக்கி, யெழுந்தருளப் பண்ணுவதா வெண்ணும் காலே,
யானதனைக் காடவர்கோற் கருள, மனன னங்கர மணைந்தவவா றறிந்து, தாழு, ளுரே.
விரவுமனக் கோயிலுற விருத்தி, யங்கண் வேண்டுவகொண் டிறைஞ்சி,பருண் பெவி

### மங்கையர்க்கரசியார்

மஙகையர்க்குத தனியரசி வளவர்குலக் கொழுந்து,
மன்னவர்சூழ் தென்னவர்க்கு மாதேவி யார்,மனன
சஙகைகெட வமண்சமயஞ் சாட வல்ல
சைவசிகா மணிஞானத தமிழிற் கோதத
பொஙகுதிரு வருளுடைய போத வல்லி,
பொருவினெடு மாறனுர் புயமேல் வாழுஞ்
செங்கலச முலையாட னருளா லின்பஞ்
சேர்ந்தவரைப் புகழ்நதடியேன வாழ்நத வாறே. ௭௰

### நேச நாயனுர்

சாலியர்கோக், காம்பீலித் தலைவர், மேனமையா
தாவாத புகழ்நேசர், தஞ்சொ லென ஆள
கோலியவைந தெழுத்தோதிச், சிந்தை யுனளிசு,
கொண்டபொரு ளனபர்கொளக கொடுத்து, வாழ்வார்,
சீலமிகுந் திருத்தொண்டர்க குடையுங் கீளுந
திருந்தியவெண் கோவணமுஞ் சோ வீந்து,
பாலனைய வொளிசீற்றுன் பாத மேத்திப்,
பரலோக முழுதாண்ட பான்மை யாரே. ௭௧

### கோச்செங்கட்சோழ நாயனார்

வெண்ணாவ லிறைக்கொளிநூற் பநதர் செய்ய
வியன்சிலம்பி, யதுவழித்த வெள்ளா னைக்கை
யுண்ணுடிக கடிததவுட லொழியச், சோழ
னுயர்குலத்துச் சுபதேவன் கமலத் தோங்கும்
பெண்ணாகி யவள்வயிற்றில் வைகிச், செங்கட்
பெருமானுய்த, தென்னவராய்ப், பெருங்கோயில் பலவுங
கண்ணார்வித, துயர்தில்லை மறையவர்கு முறையுள்
கனகமய மாக்கி,யருள் கைக்கொண் டாரே. எங

### திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார்

பிறங்கெருக்கத் தம்புலியூர் வாழும் பெரியாழ்
பேணுதிரு நீலகண்டப் பெரும்பாண னார்,சீர்
சிறநதருசெம் பொற்பலகை யால வாயி
னிமலன்பாற் பெற்றூரூர் சேர்நதுசிவன் வாயி
திறநதருளும் வடதிசையே சேர்ந்து, போற்றித,
திருஞான சம்பந்தர் திருததாள் வாழ்ததி,
யறநதிகழுந திருப்பதிகம் யாழி லேற்றி,
யாசிறிருப் பெருமணஞ்சேர்ந, தருள்பெற் றாரே. எச

### சடைய நாயனார்

சங்கையிலா வரன்மறையோர், நாவ லூர்வாழ்
தவாதிபா, தமபிரான றோழ ராய
வெங்கள்பிரான் - றவநெறிக்கோ ரிலக்கு - வாய்தத
விசைஞானி யார்தனய - ரெண்ணார் சிங்க -
மங்கையர்க டொழும்பரவை மணவாள நம்பி -
வந்துதிக்க மாதவங்கள் வருந்திச் செய்தார்,
வெஙகணரா விளங்குமிளம் பிறைசேர் சென்னி
விடையினா ரருள்சேர்நத சடைய னாரே. எரு

### இசைஞானியார்

நாவற் றிருப்பதிகளோர் செல்வசைவ நாயகமாஞ் சடையனார் நயநத வினபப் பூவைக் குலமடநதை, பொறபார் கொம்பு, புனிதமிகு நீறணிநது போற்றி செய்தே, யாவிற் றிகழதலைவன் வலிய வாண்ட வாரூா ரவதரிகக வருநதவங்கள் புரிநதார், யாவர்க்கு மெட்டாத விசைநத வினப விசைஞானி யெனஞான மெளிதா மனறே.எசு

### திருக்கூட்டத்தார் - தனியடியார் - புராணச் செய்யுட்டொகை - புராணசாரச் செய்யுட்டொகை

அததரடி யவர்கூட்டத் தில்லை வாழு
மந்தணர்பொய் யடிமையிலாப் புலவ ராசில்
பததர்முத லெழுவரோ டொன்பதின்ம ரேழொன்
பதின்மர்தனிப் பேரெண்ணென் பதின்ம ராய

வித்தொகையிற் றெண்டர்சீ ருரைத்தான் வைதத
வீரிரண்டா யிரத்திருநூற் றைம்பத்து மூன்ற
முத்தமநல் விருத்தத்திற், *பயனுஞ் செய்யு
ளுலகெழுபத் தைந்தெனவின் றுரைக்கு மன்றே. எஎ

திருத்தொண்டர் புராணசார முற்றிற்று.

---

செல்வமிகு திருத்தொண்டத் தொகையி லுள்ளார்
சிறந்ததனிப் பெயராக வறுபதின்மேன் மூவர்
மல்லன்மிகு கூட்டப்பே ரருள்சேர்ந் தார்கண்
மாதவத்தோர் மும்மூன்று வகைபெற் றூர்க
ளில்லறத்துந் துறவறத்து மிருந்து வாழ்ந்தே
யியல்பாகச் சிவபதநான் கிசைந்தார் தம்மை
யல்லலறத் தெனையாண்ட சைவசிகா மணியா
ரருட்புலியூ ருமாபதியா ரருள்செய் தாரே. எஅ

—அபியுக்தர்வாக்கு.

ஆகத் திருவிருத்தம் - எஅ.

---

*பயனுஞ் செய்யுள் உலகெழுபத்தைந்து என்றது - திருத்தொண்டர் புராணப் பயன் என்னும் திருத்தொண்டர் புராணசாரச் செய்யுட்டொகை எழுபத்தைந்து என்று குறித்தபடி என்பர். காப்புச் செய்யுள் நீக்கி எழுபத்தைந்து விருத்தங்களால் இந்நூல் அமைந்திருத்தல் காண்க. இந்நூற்குத் திருத்தொண்டர் புராணப்பயன் என்று ஆசிரியர் பேரிட்டனர் என்பது இதன் காப்புச் செய்யுளில் "திருத்தொண்டர் புராண மேவுந் திருத்துபய னடியேனுஞ் செப்பலுற்றேன்" என்றதாலும் அறியப் படும். இதில் தொண்டர்சீர் உரைத்தான் - என்றது சேக்கிழார் பெருமானை.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## கொற்றவன்குடி - உமாபதிசிவாசாரியார்

அருளிய

# சேக்கிழார் புராணம்

என வழங்கும்

# திருத்தொண்டர்புராண வரலாறு

---

## பாயிரம்

### காப்பு

#### வெண்பா

திருமருவுங் குன்றத்தூர்ச் சேக்கிழார் செல்வ
வருண்மொழித் தேவர்புரா ணஞ்சீர்—வருவதற்கு
மைம்மா மழைபோன் மதத்தான் றிரண்டபுழைக்
கைம்மா வதனத்தான் காப்பு.

### விநாயகர் துதி

வானுலகு மண்ணுலகும் வாழமறை வாழப்
பான்மைதரு செய்யதமிழ் பார்மிசை விளங்க
ஞானமத வைந்துகர மூன்றுவிழி நால்வா
யானைமுக னைப்பரவி யஞ்சலிசெய் கிற்பாம். க

### சபாநாதர்

சீராருஞ் சதுர்மறையுந் தில்லைவா ழந்தணரும்
பாராரும் புலிமுனியும் பதஞ்சலியுந் தொழுதேத்த
வாராருங் கடல்புடைசூழ் வையமெலா மீடேற
ஏராரு மணிமன்று ளெடுத்ததிரு வடிபோற்றி. உ

### சிவகாமசுந்தரி

பார்தெழுந்த சமண்முதலாம் பரசமய விருணீங்கச்
சீர்தழுவு சைவநெறித் திருநீற்றி னொளிவிளங்க
வார்த்தைகெடப் புகலியர்கோ னமுதுசெயத் திருமுலைப்பால்
சுரந்தளித்த சிவகாம சுந்தரிபூங் கழல்போற்றி. ங

### கற்பக விநாயகர்

மலரயனுந் திருமாலுங் காணாமை மதிமயங்கப்
புலிமுனியும் பதஞ்சலியுங் கண்டுதொழப் புரிசடையார்
குலவுநடந் தருந்தில்லைக் குடதிசைக்கோ புரவாயில்
நிலவியகற் பகக்கன்றி னிறைமலர்த்தா ளிணைபோற்றி. ச

### சுப்பிரமணியர்

பாறுமுக மும்பொருந்தப் பருந்துவிருந் துணக்கழுகு
நூறுமுக மாயணைந்து நூழில்படு களம்புகுத

மாறுமுகன் தருநிருதர் மடியவடி வேலெடுத்த
ஆறுமுகன் றிருவடித்தா மரையிணைக ளவைபோற்றி. ௫

சைவசமயாசாரியர்கள்

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி ;
ஆழிமிசைக் கன்மிதப்பி லணைந்தபிரா னடிபோற்றி ;
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி ;
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி. ௬

திருத்தொண்டத்தொகையடியார் - சேக்கிழார்

தில்லைவா ழந்தணரே முதலாகச் சீர்படைத்த
தொல்லையதாந் திருத்தொண்டத் தொகையடியார் பதம்போற்றி ;
ஒல்லையவர் புராணகதை யுலகறிய விரித்துரைத்த
செல்வமலி குன்றத்தூர்ச் சேக்கிழா ரடிபோற்றி. ௭

நூற்பெயர்

தாய்மலர்ந்த முகத்தினளாய்த் தழுவிமுலை தரவந்த
நோய்மலர்ந்த பிறவிதொறு நுழையாம லுலகுய்யத்
தீமலர்ந்த சடைக்கூத்தர் திருவருளாற் சேக்கிழார்
வாய்மலர்ந்த புராணத்தின் வரலாறு விரித்துரைப்பாம். ௮

அவையடக்கம்

*ஊர்க்கடலை யிவனெனவந் துதித்தநா ளுங்குதமிழ்
நூற்கடலைக் கரைகண்டு நுவலவினைக் குமதுதிருப்
பாற்கடலைச் சிற்றெறும்பு பருகவினைப் பதுபோலும்;
நீர்க்கடல்சூழ் மண்ணுலகை நிறுக்கவினைக் குமதொக்கும். ௯

†தேவுடனே கூடியசொற் செழுந்தமிழோர் தெரிந்துரைத்த
பாவுடனே கூடியவென் பருப்பொருளும் விழுப்பொருளாம் ;
கோவுடனே கூடிவருங் குருட்டாவு மூர்புகுதும் ;
பூவுடனே கூடியநார் புனிதர்முடிக் கணியாமால். ௧௦

பாயிரம் முற்றியது.

## நூல்

பாலாறு வளஞ்சுரந்து நல்க, மல்கும் பாளைவிரி மணங்கமழ்பூஞ் சோலை தோறுங்
காலாறு கோலியிசை பாட, நீடு களிமயிலின முடுமியற் றெண்டை நாட்டு
ளொலாறு கோட்டத்துப் புலியூர்க் கோட்ட நன்றிபுனை குன்றைவள நாட்டின்க
சேலாறு கின்றவயற் குன்றத்தூரிற் சேக்கிழார் திருமரபு சிறந்த தன்றே. ௧௧

நாடெங்குஞ் சோழனமுனை தெரிந்தே யேற்று நறகுடிநாற் பத்தெண்ணு றதனுள் வந்த
கூடல்கிழான் புரிசைகிழான குலவு சீர்வெண் குளப்பாக்கி பூரண்மரிசைக் குன்றத்தூ புரான்
றேடுபுக ழாரிவருஞ் சிறந்து வாழச், சேக்கிழார் குடியிலிந்தத் தேச மூப்பு [முன்
பாடல்புரி யருண்மொழித்தே வரும்,பி னந்தம் பாலறு வாயருமாக வுதித்து வாழ்ந்தார்.

*ஊர்க்கடலை - சாம்பற்புழுதி எனவும், ஓங்கு தமிழ் நூற்கடல் - பெரியபுராணம் எனவும் கூறுவர்.

†தேவுடனே கூடியசொற் செந்தமிழோர் - தெய்வத்தன்மை வாய்ந்த தமிழ்வாண ராகிய சேக்கிழார். தெரிந்துரைத்த பா - பெரியபுராணம். பருப்பொருள் - அற்பப் பொருள்.

இமயமலை யரையன்மக டழுவக் கச்சி
யேகம்பர் திருமேனி‡குழைந்த ஞான்று,
சமயமவை யாறினுக்குந் தலைவிக் கீசர்
தந்தபடி யெட்டுமிரக்கி ராழி நெல்லு
மமைதிருச்சூ டகக்கையாற் கொடுக்க வாங்கி,
யுழவுதொழி லாற்பெருக்கி, யுலக மெல்லாந்
தமதுகொழு மிகுதிகொடு வளர்க்கும், வேளாண்
டலைவர்பெருமை புகழுலகிற் றழைத்த தன்றே. கங

விளைகழனி பூலோக முழுது, மேரி
விரிதிரைநீர்க் கடல்,வருணன் கம்பு கட்டி,
கிளர்கலப்பை தரு,சுமையாள் சுவேத ராமன்,
கிடாமறலி வசத்,தீசன் வசததா, னென்றிங்
களவறிந்தாண் டாண்டுதொறும் விதைதப் பாம
லளக்குமவள் கச்சியறம் வளர்தத மாதா
வொளிபெருகு கொழுமிகுதி யெறும்பீ ருன
வுயிரனைத்துந் தேவருமுண் டுவப்ப தன்றே. கச

*மாறுகொடு பழையனூர்†நீலி செய்த
வஞ்சனையால் வணிகனுயி ரிழப்பத், தாங்கள்
கூறியசொற் பிழையாது, துணிந்து, செந்தீக்
குழியிலெழு பதுபேரு முழுகிக், கங்கை
யாறணிசெஞ் சடைத்திருவா லங்காட் டப்ப
ரண்டமுற நிமிர்ந்தாடு மடியின் கீழ்மெய்ப்
பேறுபெறும், வேளாளர் பெருமை யெம்மாற்
பிறித்தளவிட் டிவளவெனப் பேசலாமோ. கரு

காராள ரணிவயலி லுழுது தங்கள் கையார நட்ட†முடி திருந்தி லிந்தப்
பாராளுந் திறலரசர் கவித்த வெற்றிப் பசும்பொன்மணி முடிதிருந்தும்; கலப்பை பூண்ட
வேராலெண் டிசைவளர்க்கும புகழ்வே ளாள ரோடிக்குஞ் சிறுகோலாற் றாணி யாளச்
சீராரு முடியரச ரிருந்து செங்கோல்‘செலுத்துவர்;வே ளாளர்புகழ் செப்ப லாமோ. கசு

வாயிலார், சத்தியார், விறல்சேர் மிண்டர், வாக்கரையர், சாக்கியர்,கோட் புலி,கஞ் சாறர்,
ஏயர்கோன் கலிக்காமர், முனைவித் தாக்கும் இளையான்றன் குடிமாறர், மூர்க்கர், செங்கை
தாயனூர், செருதுணையார், செருவில் வெம்போர் சாதித்த முனையடுவா ராக நம்பி [த்
பாயிரஞ்சேர் அறுபதுபேர் தனிப்பேர் தம்மிற் பதின்மூவர் வேளாளர் பகருங் காலே.

அததகைய புகழ்வேளாண் மரபிற் சேக்கி ழார்குடியில் வந்தவருண் மொழித்தே வர்க்குத்
தததுபரி வளவனுந்தன் செங்கோ லோச்சுந் தலைமையளித், தவர்தமக்குத் தனது பேரு
மூத்தமச்சோ ழப்பல்ல வனீரு னென்று முயர்பட்டங் கொடுத்திட,வாங் கவர்சீர் நாட்டு
கிததனுறை திருநாகேச் சுரத்தி லன்பு நிறைதலினுன் மறவாத நிலைமை மிக்கார். கஅ

தம்பதிகுன் றத்தூரின் ‡மடவ ளாகந் தானுக்கித், திருக்கோயில் தாபித, தாங்கட் [றி,
செம்பியர்கோன் திருநாகேச் சுரம்போ லீதுந் திருநாகேச் சுரமெனவே திருப்பேர் சாற்

*நீலி என்னும் பேய்மகள் சரிதம் திருக்குறிப்புத்தொண்டர் புரா - 3-ம் பாட்டிலும், திருஞானசம்பந்தர் திருவாலங்காட்டுப்பதிகம் முதற்பாட்டிலும் குறித்தல் காண்க.
†முடி -‡கோல்-உழவுவழக்குச் சொற்கள். சிலேடையா லரசாங்கத்திற்குக் கூறினர்.
‡மடவளாகம் - திருமதிலின் புறதது அதனை அடுதது்ச் சுற்றியுள்ள வீதி.

யம்புவியி லங்காங்க வைப வங்கட் கானபரி கலந்திருநாள பூசை கற்பித,
திம்பர்புகழ் வளவனா சரிமைச் செங்கோ லிமசேது பரியந்த மியற்று நாளில், ௧௯

*கலகமிடு மமண்முருட்டுக் கையர் பொய்யே
கட்டிநடத் தியசிந்தா மணியை மெய்யென்
றுலகிலுளோர் சிலர்கற்று, நெற்குத தண்ணு
துமிகுதலிக் கைவருந்திக், கறவை நிற்க
மலநெறந் துளர்ந்தளர்ந்து, குளிர்பூஞ் சோலை
வழியிருக்கக் குழியில்விழுந் தளறு பாய்ந்து,
விலைதருமென் கரும்பிருக்க விரும்பை மென்று,
விளக்கிருக்க மின்மினித்தீக் காய்ந்த வாறே, ௨௦

வளவனுங்குண் டமண்†புரட்டுத் திருட்டுச் சிந்தா
மணிக்கதையை மெய்யென்று வரிசை கூர
வுளமகிழ்ந்து பலபடப்பா ராட்டிக் கேட்க,
வுபயகுல மணிவிளக்காஞ் சேக்கி ழார்கண்,
டிளவரசன் றனைநோக்கிச், "சமணர் பொய்ந்நூ
லிது;மறுமைக் காகா;திம் மைக்கு மற்றே;
வளமருவு கின்றசிவ கதையிம் மைக்கு
மறுமைக்கு முறுதி"யென, வளவன் கேட்டு, ௨௧

"அவகதையாய்ப் பயனற்ற கதையீ தாகி,
லிம்மையுமிம் மையுமுறுதி பயக்கத் தக்க
சிவகதையே; ததுகற்ற திறமைப் போரார்?
சிவகசிந் தாமணிபோ லிடையில் வந்த
நவகதையோ ?; புராதனமோ ?; முன்னூ லுண்டோ ?;
நானிலத்துச் சொன்னவரார் ?; கேட்ட போரார் ?;
தவகதையோ ?; தவம்பண்ணிப் பேறு பெற்ற
தனிக்கதையோ ?; வடைவுபடச் சாற்று" மென்றான். ௨௨

செம்பியர்பூ பதிமகிழ்ந்து வினவிக் கேட்கச்
சேக்கிழார் குரிசிலுரை செய்வார் "ஞாலத்
தம்பலவர் திருத்தொண்டர் பெருமை யாரு
மடிகண்முத லடியெடுத்துக் கொடுக்க, நாவ
ணம்பிபதி னொருதிருப்பாட் டாகச் செய்த
நலமலிதொண் டத்தொகைக்கு, நாரை யூரிற்
றும்பிமுகன் பொருளுரைக்க, நம்பி யாண்டார்
சுருதிமொழிக் கலித்துறையந் தாதி செய்தார். ௨௩

*உயர்ந்த சைவசமயமிருக்கத் தாழ்ந்த சமண சமயத்திலுள் தாம் புகுந்தமைக்கு எடுத்துக்காட்டாக இப்பாட்டிற காட்டிய பழமொழிகளை அப்பர் சுவாமிகள் தமது திருவாரூர் - காந்தாரம் - பழமொழித் திருப்பதிகத்திலுட் காட்டியருளியிருத்தல் குறிக்க.

†மெய்ப்பயன் குறியாத சரிதமாதலின புரட்டு என்றும், சில வேதவிருத்தம் நீக்கி, கொல்லாமை பொய்யாமை முதலாக அதிறகூறும் அறங்கள் எமது புராண இதிகாசங்களில் முன்பு உள்ளனவே யாதலின் திருட்டு என்றுங் கூறினர் - என்பர் ஸ்ரீமத் - ஆறுமுகத் தம்பிரான் சுவாமிகள்.

"ஆயுமறை மொழிநம்பி யாண்டார் நம்பி
யருள்செய்த கலித்துறையந் தாதி தன்னைச்
சேயதிரு முறைகண்ட ராச ராச
தேவர்,சிவா லயதேவர், முதலா யுள்ள
ஏயகருங் கடல்புடைசூ *ழுலக மெல்லா
மெடுத்தினிது பாராட்டிற்" றென்ன, "வந்த
தூயகதை யடைவுபடச் சொல்வீ" ரென்று
சோழனுரை செயக்கேட்டுக், குன்றை வேந்தர், உச

தில்லைவா ழந்தணரே முதற்,பண் பாடு
திருநீல கண்டத்துப் பாண ரீறாச்,
சொல்லியதொண் டத்தொகைநூல் வகையந் தாதித
தொடர்ச்சியினை விரித்துரைக்க, வளவன் கேட்டு,
மெல்லியலாள் பங்கர்திரு வருளை நோக்கி,
வியந்,தடிமைத் தொண்டுசெய்து பேறு பெற்ற
செல்கதியை யினைந்,துருகி, வளவர் கோமான்
சேவையர்கா வலரைமுக நோக்கிச், சொல்வான், உரு

"அவரவர்கள் நா,டவர்க ளிருந்த வூர்,வந்
தவதரித்த திருமரபு, திருப்பேர், செய்த
சிவசமயத் திருத்தொண்டு, முற்பிற் பாடு,
சிவனடிக்கீ ழுயர்பரம முத்தி பெற்றோ,
எவருமறி யச்சிவன் முத்த ராயிங்
கிருப்பவர்க, ளினிமேலும் பிறப்போர், மண்மேல்
அவர்களைச்சேர்ந் தருள்பெற்றோர், பகைத்துப் பெற்றோ,
ரவர்கள்பகை யாய்நரகி லடைந்த பேர்கள், உசு

"இல்லறத்தி லிருந்தினி முத்தி பெற்றோ,
ரில்லறத்திற் சிற்றின்ப வியல்பை நீக்கி
நல்லறமாந் துறவறத்தி னின்று பெற்றோர்,
நற்பிரம சாரிகளா யருள்பெற் றுய்ந்தோர்,
செல்கதிசற் குருவருளாற் சென்று சேர்ந்தோர்,
சிவபூசை செய்துபர முத்தி பெற்றோர்,
புல்லறிவு தவிர்ந்துதிரு வேடமேமெய்ப்
பொருளெனக்கொண் டரனடிக்கீழ்ப் பொருந்தப் புக்கோர், உஎ

"இப்படியே யடைவுபடப் பிரித்துக் கேட்டால்
யாவருக்கு மேதரிக்கச் செவிநா நீட்ட
வொப்பரிய பொருடெரிந்து விளங்கித் தோன்ற,
வுவமையுடைத் தாயகதை கற்க, விற்கத,
தப்பில்பெருங் காவியமா விரித்துச், செய்து
தருவீ"ரென் றவர்க்குவிடை கொடுத்து, வேண்டுஞ்
செப்பரிய திரவியமுங் கொடுக்க, வாங்கிச்,
சேக்கிழார் குறிசிறிருத் தில்லை சேர்ந்தார். உஅ

*இங்கு உலகமெல்லாம் - என்றது அறிஞர் தொகுதியை உணர்த்திற்று. உலகம் பசித்தது எனபுழிப்போலப் பாராட்டிறறு என அஃறிணை முடிபு கொண்டது.

### வேறு

தில்லை யெல்லையில் வந்து,வந்,தெதிர் தெண்ட னாக விழுந்,தெழுந்,
தல்லி சேர்கம லத்த டத்தினின் மூழ்கி, யம்பல வாணர்முன்
னெல்லை சென்று, பணிந்து, கைத்தல முச்சி வைத், துள முருகி,நைந்,
தெல்லை காணரி தாய பேரொளி யின்ப வாரியின் மூழ்கியே, ௪௯

அடைய லார்புர நீறெ ழத்திரு நகைசெய் தன்னொரு மூவரைப்
படியின் மேலடி மைக்கொ ளும்பத பங்க யங்கள் பணிந்து,பின்,
"றடிக ளே!யுன தடியர் சீரடி யேனு ரைத்திட வடியெடுத்
திடர்கெ டத்தரு வா"யெனத்,திரு வருளை யெண்ணி, யிறைஞ்சினார். ௫௦

அலைபு னற்பகி ரதிந திச்சடை யாட வாடர வாடநின்
றிலகு மன்றினி லாடு வார்திரு வருளி னாலச ரீரிவாக்
"குலகெ லா"மென வடியெ டுத்துரை செய்த பேரொலி யோசைமிக,
கிலகு சீரடி யார்செ விப்புலத் தெங்கு மாகி நிறைந்ததால். ௫௧

தில்லை மாநகர் வாழ வாழ்தவ சிந்தை யந்தண ராறைஞ்ஞூ,
றல்ல தும்பல மடப தித்*தவ, ராச ரிக்கையி லுள்ளபேர்
எல்லை யில்லவ ரியாவ ருங்களி கொளவி ளங்கச ரீரிவாக்
கொல்லை வந்தெழ வனைவ ருங்கர முச்சி வைத்துள முருகினார். ௫௨

உள்ள லார்புர நீறெ ழக்கணை யொன்று தொட்டவர் மன்றில்வாழ்
வள்ள லார்திரு மாலை யுந்திரு நீறு மெய்ப்பரி வட்டமு
†மெள்ள லாரல ரென்று சேவையா காவ லாக்கிவை யினிதளித்,
தள்ள லார்வய னீடு தில்லையி லனைவ ருங்களி கொண்டபின், ௫௩

சேவை காவலர் தொண்டா சீருரை செய்வ தற்குயர் செய்யுண்முன்,
மூவ ரோதிய திருநெ றித்தமி ழாத லால்வரன் முறைமையால்
யாவ ரும்புகழ் திருநெ றித்தலை வரைவ ணங்கி யிணங்கிமெய்த்
தாவ ருஞ்‡சிவ சாத னங்க டரித்து நீறு பரித்தரோ, ௫௪

வந்து சூழ நிரைத்த §வையிரு நூறு கான்மணி மண்டபத்
தெந்தை யார்திரு வருளை யுன்னி, யிருந்து, சேவையர் காவலர்
செந்த மிழ்த்தொடை யால்வி ளங்கிய திருவி ருத்த நிருத்தனார்
தந்த சொன்முத லாவெ டுத்தனர் **தானுவான புராண நூல்.** ௫௫

### வேறு

திருமறையோர் புராணமவை பதின்மூன்று; சிவவே
தியரானை வழிபட்ட புராண‖மோ ரிரண்டு;
குரைகழனமா மாத்திரரொன்ன; றறுவர்முடி மன்னர்;
குறுநிலமன் னவரைவர்; வணிகர்குலத் தைவ;

---

*தவராசாரிக்கை - தவாசிரமம். †எள்ளலாரலர் = தரிக்கத்தக்கவர்.

‡சிவசாதனங்களாவன - முண்டனம், குண்டலம், சிரமாலை, கரமாலை, கண்டமாலை தாழ்வடம் - முதலியன 50-வது பாட்டுப் பார்க்க. சிறப்புப்பற்றித் திருநீற்றை வேறு பிரித்துக் கூறினார்.

§ஆயிரக்கான் மண்டபம் என்னும் இராச சபை.

‖மீரிரண்டு - என்ற பாடம் தவறு.

ரிருமைநெறி வேளாளர் பதின்மூவ, ரிடைய
ரிருவர்,ஆ வியர் - குயவர் - தயிலவினை யாளர் -
பரதவர் - சான ருர் - வண்ணுர் - சிலைமறவர் - ஈசர் -
பாண - ரிவ ரோரொருவ ராம்;பகருங் காலே. ௩௬

அறுதிபெறத திருமரபு குறிததுரையாப் புராண
மவைகளொரு பதின்மூனறு; திருக்கூட்டந் தன்னின்,
மறுவிலவர் பதியறிந்த கதையிரண்டு - வரத
மரபறிநத கதையிரண்டு - பேரறிந்த கதையொன் -
றுறுமரபு தெரியாப்பு ராணமவை யோரே -
ழூரறியாக் கதையேழு - பேரறியாக் கதையெட் -
டிறுதியிலக் கங்கண்ட திருகக்கூட்ட மொன் - றெண்
*ணிததனையென் றறியாத திருக்கூட்ட மெட்டே. ௩௭

தில்லைமறை யோர்கலயர் முருகர்பசு பதியார்
சிறப்புலியார் கணநாதர் பூசலைசண் டேசா
கல்விநிறை சோமாசி மாறர்நமி நந்தி
கவுணியஞு ரப்பூதி நீலநக்க ராகச்
செல்வமறை யோர்காதை பதின்மூன்று; சிவவே
தியர்காதை யிரண்டுபுகழ்த் துணையார்முப் போதும்
வல்லபடி சிவனையருச் சிப்பார்கண்; மாமாத்
திரர்மரபிற் சிறுதொண்ட ரொருவர்,முடி மன்னர், ௩௮

---

*தில்லைவாழநதணர் புராணமும் திருவாரூர்ப்பிறநதார் புராணமும் பதியறிந்த கதையென்றும், தில்லைவாழ்நதணர் புராணமும் முப்பொழுதுந திருமேனி தீண்டுவார் புராணமும் மரபறிந்த கதையெனறும், கபிலா பரணர் முதலாக நாற்பத்தொன்மருக் கும் பெயர் கூறப்படுதலில், பொய்யடிமையில்லாத புலவா புராணம் பேரறிந்த கதை யென்றும், மேற்குறித்த மரபறிநத தொகையடியார் புராணம் இரண்டு நீக்கி ஏனைய தொகையடியார் புராணம் ஏழும் மரபறியாக் கதையென்றும், மேற்கூறிய பதியறிநத கதை இரணடு நீக்கி ஏனைய தொகையடியார் புராணம் ஏழும் ஊரறியாக் கதையென றும், பொய்யடிமையில்லாதபுலவர்புராண நீக்கி ஏனைய தொகையடியார் புராணம் எட் டும் பேரறியாக் கதையெனறும், தில்லைமூவாயிரவர் எனத் தொகை கூறப்படுதலின் அவா புராணம் இறுதியிலக்கங்கண்ட புராணம் எனறும், ஏனைய எட்டுந் தொகை காணுமையின எண்ணித்தனை யென்றறியாத திருககூட்டமெனவுங் கொள்க. கடைச் சங்கததார் நாற்பததொன்பதின்மரென்று இலக்கங் கூறப்படுதலின் அவரை இலககங் காணுத தொகையோடு சேர்த்த தென்னெனின்: ஆண்டுச் சங்க மிருந்தாரேயன்றி அச்சங்கததுச சிவபிரான்மேற் பல பாடற்றிரட்டைப் பாடி அரங்கேற்றிய புலவரும் அடங்கலில் தொகைகூற அமையாமையினெனக—ஸ்ரீமத் ஆறுமுகத தம்பிரான் சுவாமிகள் உரை. சங்கத்தார் நாற்பததொன்பதின்மர் என்றது கடைச்சங்கப்புலவோர் ஆசனத்தொகை. இவர்கள் பல காலதது மிருநதவர். அன்றியும் இவருள்ளே சமணர் முதலிய புறச்சமயிகளுமிருந்தனர். அவர்கள் அரன்பாற் பொய்யடிமையில்லாத புலவ ராகார். இதனுனும் இவர்கள் இலககங்காணுத் தொகையடியார் என்பதாம். "கபிலர் பரணர் முதல" எனத திருவந்தாதியிற் கூறிய பெயர்களை ஆசிரியர் சேக்கிழார் இவர் புராணததுக் குறித்துக் கூருமையேகொண்டு இப்புலவராவார் திருவாதவூரடிகள் என்று சாதிப்பாருமுளர். சேக்கிழார் கருத்து அஃதன்று என்பது உமாபதி சிவஞர் அருளிய புராணசாரப் பாட்டானும் அறியப்படும்.

அறுவரெவ ரவர்செங்கட் சோழர்புகழ்ச் சோழ
 ரருண்மானி யிடங்கழியார் நெடுமாறர் சேரர் ;
குறுநிலமன் னவரைவர் நரசிங்க முனையர்
 கூற்றுவனூர் கழற்சிங்கர் மெய்ப்பொருளை யடிகளை ;
முறைமைவணி கரிலைவர் காரைக்கா லம்மை
 மூர்த்திகலிக் கம்பரமர் நீதியியற் பகையார் ;
திறமைபுரி வேளாளர் பதின்மூவர் மூர்க்கர்
 செருத்துணையார் வாயிலார் கோட்புலியார் சத்தி ; ௩௯

தாயனு ரிளையானறன் குடிமாற ரரசு
 சாக்கியர்கஞ் சாறர்விறன் மிண்டர் முனையடுவா
ரேயர்கோன் கலிககாமர்; கோபாலர் மரபி
 லிருவர்திரு மூலனு ரானுயர் ; குயவர்
சேயபுகழ்த திருநீல கண்டனூர்; பாணர்
 திருமரபிற் றிருநீல கண்டதுப் பாணர் ;
மேயதிற லதிபததர் பரதவர்; கண்ணப்பர்
 வேடர்;மா பிணிற் சான்ற ரேனாதி நாதர் : ௪௦

நேசனூர் சாலியரிற்; றிருநாளைப் போவார்
 நீசர்மா பிணி,லெங்க டிருக்குறிப்புத் தொண்டர்
தூசொலிக்கு மேகாலி மரபு;திலெ தயிலத்
 தொழின்மா பிற்கலியனூர்; மரபுகுறித் துரையாக்
காசில்கதை பதின்மூன்று குலச்சிறையார் தண்டி
 கணம்புல்ல ரெறிபததர் காரியார் குறும்பர்
தேசுடைய பத்தர்பர மனைப்பாடு வார்கள்
 சிததத்தைச் சிவனபால்வைத தாராரூர்ப் பிறநதாா, ௪௧

சேப்பரிய பொய்யடிமை யில்லாதாா மெய்யிற்
 றிருநீறு பூசுமுனி வர்களுலகு தன்னில்
அப்பாலு மடிச்சார்ந்தா; ரிவாகடமிற் சிலபே
 ராய்ந்ததமிழ்ப் பேர்சிலபேர்; மலையாளர் சிலபேர் ;
தப்பாத தெலுங்கர்சிலர்; மறறுளதே சததோர்
 தவஞ்செய்து பாகதியை யடைந்தவர்கள் சிலபே ;
*ரிப்போது மிருந்தாரை வழிபடுவோர் சிலபே ;
 ரினிமேலுந் திருமேனி கொடுவருவோர் சிலரே ; ௪௨

திருஞான சம்பந்தர் திருநாவுக் கரையர்
 திருமூலர் நெடுமாறர் மங்கையருக் கரசி
கரைசேருங் குலசசிறையார் யாழ்ப்பாணர் குறும்பர்
 கணநாத ரப்பூதி சோமாசி மாற

---

*தொகையடியார்களில் முததிபெற்றுரொழிய “ இப்போது மிருந்தாரை வழிபடு வோரும் - இனிமேலும் வருவோருமாவார் - தில்லைவாழந்தணர், பத்தராய்ப்பணிவார், பரமனையேபாடுவார், சித்தத்தைச்சிவன்பாலே வைத்தார், திருவாரூர்ப்பிறந்தார், முப்பொழுதுந்திருமேனிதீண்டுவார், முழுநீறுபூசியமுனிவர், அப்பாலுமடிச்சார்ந் தார், என்னுமிவர்களேயாம் - ஸ்ரீமத ஆறுமுகத தம்பிரான் சுவாமிகள் உரை.

குரைசேரு மிவர்கள்பதி னெருவர்குரு வருளா
லுயர்முத்தி யடைந்தவர்க; ளெறிபத்தர் கலயர்
முருகனார் கண்ணப்ப ராஞயர் தாயர்
மூர்த்தியார் சண்டேசர் திருநாளைப் போவார், ௬௩

சேரனார் சாக்கியனார் கூற்றுவனார் தண்டி
சிறப்புலியார் பசுபதியார் கலிக்காமர் கலியர்
காரியா ரதிபத்தர் நீலநக்கர் பூசல்
கணம்புல்லர் கோட்புலியார் நமிநந்தி யடிகள்
சீருடைய கழற்சிங்கர் வாயிலார் தூய
செருத்துணையார் புகழ்த்துணையார் காடவரை யடிகண்
மூரிநெடு வேற்செங்கட் சோழனா ராக
முப்பதுபேர் சிவலிங்கத் தான்முத்தி யடைந்தோர் ; ௬௪

திருநீல கண்டனா ரியற்பகையார் மூர்க்கர்
சிறுத்தொண்டர் திருக்குறிப்புத் தொண்டர்விறன் மிண்ட
ரருள்சேரு மிடங்கழியார் முனையடுவார் சத்தி
யமர்நீதி மெய்ப்பொருளா ரேனாதி நாதர்
கரைசேரும் புகழ்ச்சோழர் கஞ்சாறர் மாறர்
காரைக்கா லம்மைநர சிங்கர்கலிக் கம்பர்
வருநேச ராகவொரு பத்தோன்ப தடியார்
மணிவேடத் தாரைவழி பட்டரனை யடைந்தோர் ; ௬௫

கவுணியர்நா வுக்கரசர் பேயாரிம் மூவர்
கற்குமிய லிசைவல்லோ; ரிசைத்தமிழ்நூல் வல்லோர்
பவமணுகாத் திருநாளைப் போவாரா னாயர்
பாணர்பா மனைப்பாடு வாராக நால்வர்;
புவனிபுக ழையடிக ளடிருமூலர் காரி
பொய்யடிமை யில்லாத தமிழ்ப்புலவர் சேரர்
நவமுடைய விவரைவ ரியல்வல்லோர்; நின்ற
நாயனமார் தவம்புரிந்து நற்கதியை யடைந்தோர், ௬௬

இல்லறத்தி னின்றவர்க டிருநீல கண்ட
ரியற்பகையா *ருள்ளிட்டார்; மூர்த்தியா ரப்பர்
நல்லதுற வறம்;பிரம சாரிகளசண் டேசர்;
நானிலத்தி லரனடியார் தங்களுடன் சேர்ந்து
செல்கதிபெற் றவர்ஞான சம்பந்த ருடனே
திருமணத்தி லொருமணமாய்ச் சேர்ந்தவர்க ளனேகர்,
பல்வளஞ்சே ராரூர ருடன்சேரர் கையிற்
பரியுகைக்க வுடனசென்ற பரிசனமெண் ணிறந்தோர் ; ௬௭

சிவனடியா ருடன்பகையாய் முத்தியடைந் தவர்கள்
சேய்ஞலூர்ச் சண்டேசர் பிதாவெச்ச தத்தன்
கவர்புகழ்சேர் கோட்புலியா ருரைத்த“திரு விரையாக்
கலி”பிழைத்த கிளை;பகைத்து நரகினைச்சேன் றடைந்தோர்

*தனியடியார்களில் பிரமசரியத்தும் துறவறத்தும் நின்ற மூவர் நீக்கி ஏனையோர் இல்லறத்தினராதலின் உள்ளிட்டார் என்றார் - ஸ்ரீமத் ஆறுமுகத்தம்பிரான் சுவாமிகள் உரை.

*தவரான மூர்த்தியா ரிறைவனுக்குச் சாத்துஞ்*
*சந்தனக்காப் பினைவிலக்கி யமண்சமயச் சார்வாய்ப்*
*புவிபுரந்த கருநடமன னவன்முதல னேகர்;*
*புராணகதை யினைப்பிரித்துப் புகலவெளி தலவே.* ௬௮

*ஆரூரர் திருத்தொண்டத் தொகையுரைத்த நாளி*
*லடித்தொண்டு செய்தொண்டர் சில;ரவர்க்கு முன்னே*
*பேரூர்மெய்த் தொண்டுசெய்த பேர்சிலபே; ரவர்க்குப்*
*பிறகுதிருத் தொண்டுசெயும் பேர்சிலபே; ராகச்*
*சீரூரு திருத்தொண்டர் புராணத்திற் சேர்த்துச்*
*சேவையர்கோன் சேவைசெயுந் தொண்டரள விறந்தோர் ;*
*காரூரு மணிகண்டர்க் கவர்கள் செய்த*
*கைத்தொண்டி னிலைகரைகண் டுரைக்கவெளி தலவே.* ௬௯

*ஓருலகோ? வொருதிசையோ? வொருபதியோ? தம்மி*
*லொருமரபோ? வொருபெயரோ? வொருகால மதாமோ?*
*பேருலகி *லொருமைநெறி தருங்கதையோ? பன்மைப்*
*பெருங்கதையோ? பேரொளனரோ ? வல்லவே யிதனை*
*யே"* **"உலகெ லாமுணர்ந்தோ தற்கரிய வன்"** *னென்*
*றிறைவன்முத லடியெடுத்துக் கொடுத்தருளக் கொண்டு*
*பாருலகி னுமகனின் றெடுத்துக்கை நீட்டப்*
*பாடிமுடித்* **தனர்தொண்டர் சீர்பரவ வல்லார்.** ௭௰

*கருங்கடலைக் கைநீத்துக் கொளவெளிது; மூநீர்க்*
*கடற்கரையி னுய்மணலை யெண்ணியள விடலாம்;*
*பெருங்கடன்மேல் வருந்திரையை யொன்றிரண்டென் றெண்ணிப்*
*பிரித்தெழுதிக் கடையிலக்கம் பிரித்துவிட லாகும் ;*
*தருங்கடலின் மீனையள விடலாகும்; வானத்*
*தாரகையை யளவிடலாஞ்; சங்கரன்று டமது*
*சிரங்கொடிருத் தொண்டர்புரா ணத்தையள விடநஞ்*
*சேக்கிழார்க் கெளிதலது தேவர்க்கு மரிதே!.* ௭௧

*அறுபதுபேர் தனித்திருப்பேர்; திருக்கூட்ட மொன்ப ;*
*தாகவறு பத்தொன்ப தரனடியார் கதையை*
*மறுவிறிரு நாவலூர்ச் சிவமறையோர் குலத்து*
*வருசடைய னார்மனைவி யிசைஞானி வயிற்றி*
*லுறுதிபெற வவதரித்த வாரூரர் முனனு*
*னுரைசெய்த* **திருத்தொண்டத் தொகைப்பதிகத் தடைவே**
*நறைமலியும் பொழில்புடைசூழ் திருநாரை யூரி*
*னம்பியாண் டார்திருவந் தாதிகடைப் பிடித்து,* ௭௨

**காண்டமிரண்** **டா**வகுத்*துக, கதைப்பரப்பைத் தொகுத்துக்,*
*கருதரிய சருக்கங்கள் பதின்மூன்று நிலையிட்,*
*டுண்டுரைத்த புராணத்திற் றிருவிருத்த நாலா*
*யிரத்திருநூற் றைம்பத்து மூன்றாக வமைத்துச்,*

---

**ஓர் வமிச பாரம்பரியமாய்த் தொடர்ந்து வாராமையின் ஒருமைநெறி தருங்கதை யாகாது; மரபாற் பலவாய்வரினும் திருத்தொண்டின் ஒருதொடர்புபற்றியன ஆதலின பன்மைப் பெருங்கதையாகாது.*

சேண்டகைய "திருத்தொண்டர் புராண"மெனப் புராணத
திருமுறைக்குத திருநாமஞ் சீர்மைபெற வமைததிட்,
டாண்டகைமை பெறவெழுதி, மைக்காப்புச் சாத்தி,
யழகுபெறக் கவளிகையு மமைததனில்வைத் ததன்பின், ௩௩

வேறு

சேவை காவலர் புராண காதைதொகை செயநி னைந்தெமை யகன்றபின
"இயாவர் தாமரு கிருந்த பேர்கள்?கதை சென்ற தெவ்வள?வி ருந்ததெங் ?
காவதென்? னிவைக ளறிய வேண்டும தறிந்து வாரு"மென வளவர்கோ
னேவி னானுரிய தூதர்; தூதரறி யாம லொற்றரையு மேவினான். ௩௪

வென்றி வேள்வளவ னளவ றிந்துவர விட்ட காளையர் புராணநூல்
ஒன்று பாதிகதை சென்ற தென்றுசில ரோடி னார்;சில ருவந்துசென்
றின்று நாளைமுடி யும்பு ராணமினி யென்று ரைததிட, விறைஞ்சினான் ;
சென்று நற்கதை முடிந்த தென்றுசிலர் செம்பி யற்குறுதி செப்பினார். ௩௫

வந்து சொன்னவர்க ளனைவ ருக்குநவ மணிக ளுந்துகிலு மம்பொனுஞ்
சிநதி யள்ளியு முவநது வீசி,யுயர் செம்பொ னம்பல மருங்கில்வா
ழந்தி வண்ணர்நட மும்ப ணிந்து,முத லடியெ டுததவர் கொடுத்திடப்
புந்தி செய்துமகிழ் சேவை காவலர் புராண முநதொழு வனானெனா, ௩௬

வீதி வீதிக டொறுநதொ றுமபயண மெனறு வென்றிமணி முரசறைந்,
தோதி, வேதியர்க ளெண்ணி யிட்டவுயர் நாளு மோரையு முகூர்த்தமும்
போத நாடி,வரை புரைக டக்களிறு புரவி தேர்கருவி யாடரச்
சாது ரங்கமுட னேசெ லப்பிளிறு தந்தி மேல்கொடு நடந்தனன். ௩௭

தேர்மு ழக்கொலி, மழைக்க டக்காட சிந்து ரக்களிறு பிளிறுசீ
ரார்மு ழக்கொலி, பரிச்செ ருக்கொலி, பதாதி வந்தெதி ரடர்ந்தெழும்
போர்மு ழக்கொலி, சழக்கி லாதுயர் படைக்க லன்புனரு மோசை,யேழ்
கார்மு ழக்கொலியி னெட்டி ரட்டிநிறை கடன்மு ழக்கென முழக்கெழ, ௩௮

வளவர் கோன்வர வறிந்து தில்லைமறை யோரும் வண்மைமட பதிகளும்
பிளவு கொண்டமதி றுதன்ம டந்தையரு மற்று முள்ளபெரி யோர்களுங்
களவி லாதமொழி கொடுபு ராணகதை செய்த கங்கைகுல திலகருந
தளவ மாலையப யனையெ திர்ந்தினிய சார வாசிபல சாற்றினார். ௩௯

பூண்ட மானதிரு முடியு, மிட்டதிரு முண்ட முங்,கவச முந் துணைக்
*குண்ட லங்களு, மிரண்டு காதினும வடிந்த லைந்தகுழை யுந்,திருக்
கண்ட மாலைகர மாலை யுஞ்சிரசு மாலை யுங்,கவின் விளங்கவே
தொண்டர் சீர்பரவு வான னைநதசுப சரிதை சோழனெதிர் கண்டனன். ௪௦

கண்ட போதுள மகிழ்ந்து, தன்னையறி யாது, கைகடலை மீதுறக்,
"கொண்ட வேடமா னடியர் வேடமிது குறைவி லாததவ வேட"மென
றண்ட வாணர்திரு வருளை யுனனி,யவ ரடிமை கொண்டபெரு மையைநினைந்,
தெண்ட யங்கரச ரேறு சேவையர் குலாதி பாதுகை யிறைஞ்சினான். ௪௧

இறைஞ்சி யம்பலவர் பாத தாமரை யிறைஞ்ச வெண்ணி,வரன் முறைமையா
லறஞ்சி றந்தமுனி சேவை காவலரு, மாறைஞ் ஞூறுமறை யோர்களுந்,

*குண்டலம் - ஆறு உருத்திராக்கங்கள் சேர்த்தமைத்த காதணி. குழை - மணி யிழைத்து வட்டமாய்ச் சதுரப்பாட்டுடன் அமைத்த காதணி. சரிதை - செயல்.

*துறஞ்சி றந்தமட பதிக ளூர்,தொடர வந்து, மன்னனரி பிரமர்பான்
மறைஞ்சு நின்றபொருள் வெளிப்ப டக்கனக மன்றி னின்றபடி கண்டனன். ௬௨

கண்ட கண்ணருவி தாரை கொள்ள,விரு கைக ளஞ்சலிகொ ளக்,கசிந்,
தெண்ட ரும்புளக ரோம கூபமெழ, வின்ப வாரிகரை புரள,வாய்
விண்ட தூமொழிகள் குழற, வன்பினொடு விம்மி விம்மியருண் மேவிடத்,
தெண்ட னாகமுன் விழுந்,தெ ழுந்து,நனி செம்பி யன்பரவ, வெம்பிரான், ௬௩

"சேக்கி ழானமது தொண்டர் சீர்பரவ, நாம கிழ்ந்துலக மென்றநம்
வாக்கி னாலடி யெடுத்து ரைத்திட, வரைந்து நூல்செய்து முடித்தனன;
காக்கும் வேல்வளவ! நீயி தைக்கடிது கே"ளெ னக்கனக வெளியிலே
யூக்க மானதிரு வாக்கெ ழுந்தது திருச்சி லம்பொலியு முடனெழ. ௬௪

மன்று ளாடிதிரு வாய்ம லர்ந்தமொழி யுஞ்சி லம்பொலியு மன்றிலே
நின்ற மானிடர் செவிப்பு லன்புக நிறைந்த, தன்றியு நிலத்தின்மே
†லொன்றி நின்றுயர் சராச ரங்களடை யக்க சிந்துருகி யோலிடக்,
குன்றி லங்குதிர டோண ரேந்த்ரபதி குதுகு லித்துள மகிழ்ந்தனன். ௬௫

"தொண்டர் தொண்டுசெய் புராண காதைமதி சூடு நாதர்திரு வருளினால்
விண்ட நீதிபுனை சேக்கி ழார்முனி விரித்து ரைத்தகதை கேட்பதற்
கண்ட வாணரடி யாரெ லாங்கடுக வருக" வென்றுதிசை திசைதொறு
மெண்ட யங்கரச னேயெ டுத்தெழுதி யாளு மோலைகளு மேவினான். ௬௬

## வேறு

கவச மணிந்த சனங்களு மிங்கித முங்கம்பித
தவச முறுஞ்சிவ சிந்தையு, மன்பக லாமேன்மைத்
தவச ரிதத்தொழி லுஞ்,சிவ சாதன முஞ்,சாரச்
சிவச மயத்தவர் யாவரும் வந்து திரண்டார்கள். ௬௭

வேதியர் வேத முழக்கொலி, வேதத் தைத்தமிழா
லோதிய மூவர் திருப்பதிகத தொலி, யோவாமற்
பூதிய ணிந்தர கரவென வன்பர் புகழ்ந்தோதுங்
காதியல் பேரொலி, காரொலி போலொலி கைதேற. ௬௮

பூசிப் பவர்சிலர்; பூசித தன்பொடு புனிதன்றா
ணேசிப் பவர்சிலர்; "பிறவா வரமரு ணிமலா"வென்
றியாசிப் பவர்சிலர்; திருமுறை யெழுதிக் களிகூர
வாசிப் பவர்சில; ராக விருந்து மகிழ்ந்தார்கள். ௬௯

தெள்ளு திரைக்கடன் மீது மிதந்த திருத்தோணி
வள்ளலை யன்புசெ யன்பர் மடங்க டொறும்பாலர்
மெள்ள விருந்து மிழற்று புராண விருத்தத்தைக்
கிள்ளைகள் பாடியு ரைப்பன; கேட்பன மெய்ப்பூவை. ௭௰

மற்றது கண்டு களித்த நலத்த மனத்தோடு
சுற்றிய மந்திரி மாரொடு தந்திரி மார்சூழத்
தெற்றென வந்து திரண்டு முரண்டரு சீர்நாடு
பெற்றது செல்வ மெனத்தனி யோகை பெருத்தார்கள். ௭௧

---

*துறம் - துறவறம். †ஆனாயநாயனார்புராண வரலாறு பார்க்க.

பாடினர் தும்புரு நாரதர்; நீடிசை பாடாமின்
றாடினர் வானி லரம்பையர்; ரஞ்சலி யெஞ்சாமற்
சூடினர் மண்ணின் மடந்தையர்; ரெந்தை துணைப்பாதந்
தேடினர் மாலயர்; ரன்பர் நடந்தரி சித்தார்கள். எ௨

சங்கொடு பேரி கறங்கிசை வீணை தனித்தாளம்
வங்கிய கான மிடக்கை கடக்கை மணிக்காளம்
பொங்கிய பம்பை வலம்புரி சுண்டை முதற்பொற்பார்
மங்கல தூரிய மெங்கு முழங்கி வனப்பெய்த, எ௩

வேதியர் வேள்வி நெடும்புகை, யாலய மெங்கெங்குங்
காதிய குங்குலி யப்புகை, நீடு கருப்பாலைச்
சோதி நெடும்புகை, தோரண வீதி தொறுந்தோறு
மாதர் புகைக்கு மகிற்புகை, யெங்கும் வனப்பெய்த, எ௪

ஆடக நாடக சாலைகள், முத்தணி யததாணி,
மேடை யரங்கு, களங்க மிலாத வெளிக்கூட,
மாட, மதிட்களை, மாளிகை, சூளிகை, யெங்கெங்குந்
தோடவிழ் மாலைகள் *பொன்னரி மாலைகள் சூழ்விததார். எ௫

பழுதக லத்திரு வலகு விருப்பொடு பணிமாறிக்
குழைவு பெறத்திகழ் கோமய நீர்குளி ரச்செய்து
தழைபொதி தோரண முங்கொடி யுந்துகி லுஞ்சார்வித
தழகு பெறத்திரு வீதி புதுக்கி யதன்பின்பு, எ௬

வேறு

†திருநெ றித்தமிழ் வல்ல பேர்கள், சிவாக மங்கள் படித்தபேர்,
கருநெ றிப்பகை ஞான நூல்பல கற்ற பேர்,மறை கற்றபேர்,
குருநெ றிக்குரி யோ,ரி லக்கண விலக்கி யங்கள் குறிததபேர்,
பெருநெ றிப்பல காவி யங்களை பேச வல்லவ ரானவரும், எஎ

வேறு

வள்ளலார் திருநடஞ்செய் மன்றின் முன்றின
மறையவர்கோ மயசலத்தான் மெழுகித தாபித
தெள்ளரும்வெண் சுதையொழுக்கி யறுகாற் பீட
மிட்டதன்மேற பசும்பட்டு விரிதது மீதே
வெள்ளைமடித திட்டுமது மலருந் தூவி
விரைநறுந்து பங்கொடுததா தனங்கற் பித்துத
தெள்ளுதமிழ்ச் சேக்கிழார் புராணஞ் செய்த
திருமுறையை யதன்மேல்வைத் திறைஞ்சிப் போற்றி, எ அ

"வாழிதிருத் தொண்டர்புரா ணத்தை நீரே
வாசித்துப் பொருளருளிச் செய்வீ" ரென்று
சோழர்பெரு மான்முதலா மடிய ரெல்லாஞ்
சொலக்கேட்டுக், குன்றைமுனி மன்று ளாடுந

*பொன்னரிமாலை - பொன்னை மலரிதழ்போலரிந்து தொடுத்தமாலை.
†திருநெறித் தமிழ் - தேவாரத் திருமுறைகள்.

தாழ்சடையா னடியெடுத்துத் தரத்தாஞ் செய்த
சைவகதை யினைவிளங்க விரித்துச் சொல்லச்,
சூழவிருந் தம்பலவ ரடியா ரெல்லாஞ்
சுருதிமொழி யிதுவெனக்கை தொழுது கேட்டார் ௭௯

தாளுடைய திருச்சிலம்பு புலம்பநடம் புரியுந்
தன்மையா னுக்கிசைந்த பேர்வழியி னாளு
மாளுடைய பிள்ளையா ரவதரித்த நாளு
மவரமுது திருஞான மமுதுசெய்த நாளுஞ்
சூளுடையா திரைநாளாஞ் சித்திரை யாதிரைநாட்
டொடங்கியெதி ராமாண்டு சித்திரையா திரையி
னாளுடைய கதைமுடிப்ப மெனக்குன்றை வேந்தர்
நடத்தவினை வருமிருந்து கேட்டனர்நா டோறும். ௮௦

*சிறப்புடைய மூவர்முத லிகடிருவாய் மலர்ந்த
திருநெறிய தமிழ்,மூலர் திருமந்திர மாலை,
யறப்பயனுங் காரைக்காற் பேயிரட்டை மாலை,
யந்தாதி, மூத்தபதி கம்,கழறிற் றறிவார்
மறப்பரிய பொன்வண்ணத் தந்தாதி, திருமும்
மணிக்கோவை, தெய்வவுலா, வையடிகள் வெண்பா,
வுறுப்பாகத், திருவிருத்த முடலாகப், பொருட்கோ
ளுயிராக நாலடியா னடந்த "துல கெல்லாம்" ௮௧

அன்றுமுத னாடோறு நாடோறு மண்ண
லடியரள விறந்தபெயர் வந்தவர்க ளெல்லாஞ்
சென்றுறையத் திருமடங்க, டிருமடங்க டோறுந்
திருவிளக்,கங் கவர்சாத்த வுள்ளுடை,மேற் போர்வை,

---

*இதிற் கூறப்பட்டன மூவர் தேவாரங்களாகிய திருமுறைகளேழும், திருமூலர் திருமந்திரமாகிய பத்தாந் திருமுறை ஒன்றும், காரைக்காலம்மையா ரருளிய அற்புதத் திருவந்தாதி, திருஇரட்டைமணிமாலை, மூத்ததிருப்பதிகங்கள் ஆகிய பிரபந்தங்கள் நான்கும், கழறிற்றறிவார்நாயனார் என்னும் சேரமான்பெருமானாயனாரது பொன் வண்ணத்தந்தாதி, திருமும்மணிக்கோவை, திருக்கைலாய ஞானவுலா என்ற பிரபந்தங்கள் மூன்றும், ஐயடிகள் காடவர்கோனாயனாரது க்ஷேத்திரவெண்பா ஒன்றும் ஆகிய இவைகளாம். இவர்கள் இப்புராணத்துக் கூறிய அறுபான்மும்மை நாயன்மார்களில் இயலிசைத் தமிழ்ப் புலவர்பெருமக்களாவார். இத் திருப்பாட்டுக்கள் ஆளுடைய பிள்ளையார் முதலாயினார் சரிதங்களை விளக்குதற்குக் கருவிகளாயும் ஏனைய சரித ஆதாரங்களாயும் ஆங்காங்கும் ஆசிரியராற் கொள்ளப்பட்டு இப்புராணத்தை [illegible] அமைத்திருத்தலின் இவை உறுப்பாக என்றார். இவற்றின் பொருள்களே இப்புராணத்தின் பொருளா யமைதலின் பொருட்கோள் உயிராக என்றார். இவ்வுண்மையை இப் புராணத்துள் "தோடுடைய செவியன" முதலிய திருப்பதிகங்கள் பலவற்றிற்கும் ஆசிரியர் சரிதத் தொடர்பும் உட்கோளும் கூறியிருத்தலும், திருப்பாசுரத்திற்குப் பேருரை செய்திருத்தலும் முதலியவற்றா னறிக. இவற்றில் தேவாரந் திருமந்திர நிற்க எஞ்சியவை பதினொராந் திருமுறையில் நம்பியாண்டார் நம்பிகளாற் சேர்க்கப் பட்டதுங் காண்க. "நடந்தது உலகெல்லாம்" என்றது, இப்புராணம் உலகிலே நின்றதெங்கும் நிலவி எனவும், ஆகுபெயராய் "உலகெலாம்" என்ற தொடக்கத்தை யுடைய புராணம் நடந்தது எனவும் இரு பொருளும் பெற அமைந்த அழகு காண்க.

மூவர் முதலிகள் - முதன்மையோராகிய ஆளுடையபிள்ளையார் முதலிய மூவர்.

துன்றியசெந் நெலினடிசில், கன்னனறுங் கனிக
ளேவறு சுவைக்கறி,நெய், தயிர்,திரண்ட பால்,தே
னன்றுதிருப் பண்ணியந்,தண் ணீரமுத, மடைக்காய்,
நரபதியே வவினமைச்சர் நாடோறு நடத்த, அஉ

நலமலியுந் திருத்தில்லை மன்றினினின் றாடு
நடராசற் கன்றமுதன் மகபூசை நடத்தி,
யலகில்புகழ்த் தில்லைவா ழந்தணர்க்கும் வெவ்வே
றமுதுபடி கறியமுது முதலான வெல்லா
நலமலிசெங் கோல்வளவன் றப்பாமே நாளு
நடத்திவர, வானடியார் நிறைந்து,பதஞ் சலியும்
புலிமுனியுந் தவஞ்செய்த பெரும்பற்றப் புலியூர்
பூலோக சிவலோக மெனப்பொலிந்து தோன்ற, அ௩

மருவுதிரு முறைசேர்ப்பா, ரெழுதுவா, ரிருந்து
வாசிப்பார், பொருளுரைப்பார், கேட்டிருப்பார், மகிழ்ந்து
சிரமசைத்துக் கொண்டாடிக் குதுகுலிப்பார், சிரிப்பார்,
*தேனிப்பார், குன்றைமுனி சேக்கிழார் செய்த
வரியதவத் தினைநினைப்பா, "ரம்பலவர் முன்னு
ளடியெடுத்துக் கொடுக்கவிவர் பாடின"ரென் றுரைப்பார்,
"பெரியபுரா ணங்கேட்ட வளவர்பிரான் செவிக்குப்
பிடிக்குமோ வினிச்சிந்தா மணிப்புரட்"டென றுரைப்பார். அச

இத்தகைய சிறப்புடனே திருத்தொண்டர் புராண
மிருந்தன்பர் பாராட்ட நடநதெதிரா மாண்டு
சித்திரையா திரைநாளின் முடிய,வது கண்டு
திருத்தொண்ட ரரவெனும்பே ரொலியெழுந்து பொங்கக்,
கததுதிரைக் கடலொலியை விழுங்கிமுழங் கோரேழ்
கடலொலியைக் கீழ்ப்படுததிப் பிரமாண்ட வெளியைப்
பொததியிமை யவர்செவியை நிறைத்துயரப் பொங்கிப்
பொன்னுலகுக் கப்பாலும் புகப்பொலிநத தன்றே. அரு

திருதொண்டர் புராணமெழு தியமுறையை மறையோர்
சிவமூல மநதிரத்தா லருச்சனைசெய் திறைஞ்சி,
யிருக்குமுதன் மறைநான்கி னின்றுமுத லாக
விதுவுமொரு தமிழ்வேத மைந்தாவ தென்று
கருததிருததி, யமுதடைக்காய் நறுந்தூப தீபங்
†கவரிகுடை கண்ணடி யாலத்தி நீறு
பரிததளவு செயக்கண்டு, வளவர்பிரான் முறையைப்
பசும்பட்டி னுற்சூழ்ந்து பொற்கலத்தி லிருததி, அசு

சேறிமதயா னைச்சிரத்திற் பொற்கலததோ டெடுத்துத்,
திருமுறையை யிருத்தியபின், சேவையர்கா வலரை
முறைமைபெற வேற்றி,யா சனுங்கூட வேறி,
முறைமையினு லிணைக்கவரி துணைக்கரத்தால் வீச,

*தேனித்தல் - தேன் முதலியவற்றை உண்டார் போலக் களிப்பால் நாவைச் சுவைத்தல். சிரிப்பார் களிப்பார் தேனிப்பார்—திருவாசகம்.

†கண்ணடி முதலியன பூசைக்குரிய சோடசோபசாரமெனப்படும்.

மறைமுழங்க, விண்ணவர்கள் கற்பகப்பூ மாரி
மழைபொழியத், திருவீதி வலமாக வரும்போ,
திறைவர்திரு வருளாகிலைனத் தடலரசா கோமா
"னீதுவன்றே நான்செய்த தவப்பய?"னென் றிசைத்தான். ௮௭

வாரணத்தி லிவரைவரக் கண்டதிரு வீதி
மறுகுதொறுந் தூய்மைசெய்து வாழைகளு நாட்டிப்
பூரணகும் பமுமமைத்துப் பொரியுமிகத் தூவிப்
பொன்னரிமா லையுநறும்பூ மாலைகளுந் தூக்கித
தோரணங்க ணிரைத்துவிரை நறுர்தூப மேநதிச்
சுடர்விளக்கு மேற்றியணி மணிவிளக்கு மேந்தி
யாரணங்கள் விரிதவோதி மாமறையோ ரெதிர்கொண்
டறுகெடுப்ப வாழ்த்தெடுதா ரம்பையர்க ளெல்லாம். ௮௮

## வேறு

"காவல னிவர்; தவரிவா; காவலர் கவரி யிடத்தகு மோ?"வென்பார ;
"சேவையர் காவல னர்சிவ மான சிறப்பிது நல்ல சிறப்!"பென்பார் ;
"தேவரு மெழுதவொ ணுமறை யைத்தமிழ் செய்து திருப்பதி கம்பாடு
பூவரு மோருமுத லாயுல கத்து முளைத்த முதற்போருடா!" னென்பார். ௮௯

மீன்மழை பெய்தது மேக வொழுங்குகள; விண்ணவர் கற்பக விரைசேர்பூ
நன்மழை பெய்தனர்; சேவையர் காவலர் நாவல ரின்புற நாவாரச்
சொன்மழை பெய்தன; ரிரவலர் மிடிகெட வள்ளி முகந்தெதிர் சோளேசன்
பொன்மழை பெய்தன; னுருகிய நெஞ்சொடு கண்மழை யன்பர் பொழிநதார்கள். ௯0

"மதுரா விராமா யணகதை யுரைசெய்த வான்மிக பகவனு மொப்பல்ல;
விதிவழி பாரத முரைசெய்து கரைசெய்த வேத வியாதனு மொப்பல்ல ;
சிதைவற வாயிர நாவுட னறிவுள சேட விசேடனு மொப்பல்ல ;
பொதிய மலைக்குறு முனிவனு மொப்பல புகழ்புனை குன்றை முனிக்"கெனபார். ௯௧

மெய்புள சிவசா தனமும் வெளிப்பட வெண்ணீ றெழுதிய கண்ணேறுங
கையுந திகழ்மணி கண்டமு மொளிதரு கவளிகை யும்புத் தகவேடு
மையுந திருவுள மழியுந் தொறுமா கரவெனு நாமமு நாமெல்லா
முய்யும் படியருள கருணையு மழகி தெனத்தொழு தனருல கவரெலலாம். ௯௨

பூவை மறநதனள வெண்டா மரைமயில்; புகல்தரு சங்கப் புலவோர்சொற்
பாவை மறந்தனள்; தேச சுபாடித பயனை மறந்தனள்; பதுமத்தோ
ளுவை மறந்தனள; பொதிய மலைத்தலை நண்ணிய புண்ணிய முனிவனெனுங்
கோவை மறந்தனள்; சேவையர் காவல னர்திரு நாவிற் குடிகொண்டாள். ௯௩

இப்படி யிப்படி தன்னில் விதிப்படி யிம்பரு மும்பரு மேனொரு
மப்படி சூழ வரத்திரு வீதி வலஞ்செய் தணைநதம் பலமுன்றிற்
றப்பற யானையி னின்று மிழிந்தா சனுமுறை செறிசே வையர்கோவு
முப்புரி நூன்மறை யோரொ டணைந்தெழு தியமுறை யைதிரு முன்வைத்தார். ௯௪

## வேறு

அண்ட வாணரெதிர் தெண்ட னுகவனை வரும்வி ழுநதுபி னெழுந்துசீர்
கொண்ட சேவைகுல திலக ருககனை வருங்கு றித்தெதிர் கொடுததபேர்
தொண்ட சீர்பரவு வாரெ னப்பெயர் சுமததி, ஞானமுடி சூட்டி,முன்
மண்ட பததினி லிருத்தி, மற்றவரை வளவர் பூபதி வணங்கினன். ௯௫

*மூவ ரோதுதிரு முறைக ளேழு,திரு வாத வூரர்முறை யொன்;றிசைப்
பாவ ரைந்தமுறை யொன்று; மூலர்முறை யொன்று; பாசுரம தாதியாக்
கோவை செய்தமுறை யொன்று; சேவையர் குலாதி நீதிமுறை யொன்றுடன்
பாவை பாகர்திரு வருள்சி றந்தமுறை பன்னி ரண்டென வகுத்தபின, கசு

†தோடு செய்ததிரு நெறிய செந்தமிழோ டொக்கு" மென்றுரை தொடர்ந்துசெப்
பேடு செய்து,நட ராசர் சந்நிதியி லேற்றி னார்க;ளிது பாலிசூழ்
நாடு செய்ததவ!; நீடு குன்றைவள நகரி செய்ததவ!; நிகரிலாப்
பீடு செய்தபகி ரதிகு லத்திலகர் சேக்கிழார் செய்த பெருந்தவம் ! கஎ

ஆய வேலையன பாய "னிர்மிலைமை யாத லாலனுசர் பாலறு
வாய ரெங்குள?"ரெ னப்,பணிந்திரு மருங்கு நின்றவர் விளம்புவார் :

---

*மூவர் ஓது திருமுறைகள் ஏழாவன - ஆளுடையபிள்ளையார் தேவாரங்கள் முதல் மூன்று திருமுறைகளாகவும், திருநாவுக்கரசர் தேவாரங்கள் நான்காவது, ஐந்தாவது, ஆறாவது திருமுறைகளாகவும், சுந்தரமூர்த்திகளது தேவாரங்கள் ஏழாவது திருமுறையாகவும் வகுக்கப்பெற்று உள்ளவையாம். வாதவூரர் முறை ஒன்று எனபது திருவாசகமுந் திருக்கோவையுமாகிய எட்டாவது திருமுறையாம். இசைப்பா வரைந்த முறை ஒன்று என்பது திருமாளிகைத்தேவர் முதற் சேதிராயரீறாக ஒன்பதின்மர் பெருமக்கள் அருளிய திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்பவையாம். இவை திருவிசைப்பா என்ற பெயரால் ஒன்பதாவது திருமுறையாக வகுக்கப்பட்டன. இவற்றுள் அடங்கிய திருப்பதிகங்கள் திருவிசைப்பா இருபத்தெட்டும் திருப்பல்லாண்டு ஒன்றும் ஆக இருபத்தொன்பதாம். மூலர் முறை ஒன்று என்பது திருமூலநாயனார் திருவாவடுதுறையில் அரசின்கீழ்ச் சிவயோகத்திருந்து ஆண்டுக்கொரு மந்திரமாக அருளிய மூவாயிரம் திருமந்திரங்களடங்கிய பத்தாவது திருமுறையாம். பாசுரமதாதியாக் கோவைசெய்த முறை ஒன்று என்பது, திருவாலவாயுடையார் அருளிய திருமுகப் பாசுர முதலாக நம்பியாண்டார்நம்பிகள் அருளிய திருநாவுக்கரசுதேவர் திருவேகாதச மாலையீறாக நாற்பது பிரபந்தங்களைக் கோவை செய்த பதினொராந் திருமுறையாம். இவற்றை அருளியவர்கள் திருவாலவாயுடையார் முதல் நம்பியாண்டார்நம்பிகள் வரைப் பன்னிருவர் என்பர். இதனையும் ஏனை முன்னைத் திருமுறைகளையும், இராசராச தேவர் நம்பியாண்டார்நம்பிகளை வேண்ட, அவர் கோவை செய்த வரலாறு திருமுறைகண்ட புராணத்துட் (23—29) காண்க. முன் வகுத்த அப்பதினொன்றுடன் சேர்த்துப் புராணத்தைப் பனிரண்டாந்திருமுறையாக வகுத்தவர் அநபாயசோழ தேவர் என்க. திருநெறிய தமிழ் - தேவாரங்கள்.

†தோடு செய்த திருநெறிய செந்தமிழொடொக்குமென்று உரை தொடர்ந்து செப்பேடு செய்து—என்றது இப்புராணமும், "தோடுடைய" எனத் தொடங்கினவையாய் முன்னுள் நம்பியாண்டார் நம்பிகளது அருட்டுணை கொண்டு வகுத்த திருமுறைகளோடு ஒப்பாகும் என்று சொல்லி, அக் கருத்தினாலே தொடர்ந்து, செப்பேடு வரைந்து சாசனம் செய்து - என்றதாம். இந்தச் செப்பேடானது இக் கருத்தொன்றினையே வெளியிடப்பெற்ற அரசாது கட்டளையாக அமைத்தன ரென்றும்; அற்றன்றிப், புராணமுழுமையுமே செப்பேட்டில் வரைந்து சேமஞ் செய்தனர் என்றும் இருவகையும் கொள்கின்றனர். எவ்வகையேயாயினும் இதுபற்றிய செப்பேட்டுச் சாசனமொன்று அரசராணையால் நடராசர் கருவூலத்துள்ளே சேமிக்கப்பட்டதென்பது தில்லைவாழந்தணர்களிலொருவராகிய உமாபதியா ராணையால் ஒருதலையாய்த் துணியப்படும். அது கிடைப்பின் சைவத்துக்குப் பேருதியமாம்.

"தூய குன்றைநகர் மீது தம்பெயர் துலங்க வோர்குள மமைத்தபி
னேய நாகையா னூர்தி ருப்பணி யியற்றி யவ்விடை யிருந்தனர்" கூஅ

என்று சொல்லவவர் தமைய ழைத்தரச "னிவர மைச்ச;ரிவர் பட்டமு
மன்றன் மாலேபுனே தொண்டை மா"னென வகுத்த பின்,றமது மண்டல
மன்று வற்பமவர வந்த டைந்தவரை யாற்றல் செய்து,தொண்டை மண்டல
நின்று காத்தபெரு மானெ னத்தமது பெயரை யெங்கணு நிறுத்தினூர். கூகூ

தொண்டர் சீர்பரவு சேக்கிழார் குரிசி றூய தில்லைநகர் தன்னிலே
பண்டு மூவர்பதி கத்து வந்தவறு பத்து மூவர்கதை தனையுணர்ந்,
தண்ட வாணரடி யார்க டம்முட னருந்த வந்தனி லிருந்து,பி
னிண்டை வைத்தசடை யம்ப லத்தவ ரெடுத்த பாதநிழ லெய்தினூர். கOO

வாழி தில்லைமணி மன்று ளென்றுநட மாடு மங்கனர் மலர்ப்பதம் !;
வாழி காழிநகர் வாழ வந்ததிரு நெறிய ராதிபதி வள்ளறள் !;
வாழி யன்பர்திரு நீறு,மிட்டதிரு முண்ட மூந்துவய கவசமும் !;
வாழி குன்றைமுனி சேவை யாதிதிரு வாய்ம லர்ந்தருள் புராணமே ! கOக

தேசி லக்குமுகில் குன்றை யாதிபதி தொண்டர் சீர்பரவு சேக்கிழார்
வாச லன்றமுத வின்று காறுமினி மேலும் வாழையடி வாழையாய்
வீசு தென்றன்மணி மண்ட பததரசு வீற்றி ருக்குமுடி மன்னருக்
கீச னன்பர்கள் புராண முஞ்சொலி யமைச்சு மாகிநல மெய்துமால். கO௨

அண்ட வாணர்தொழு தில்லை யம்பலவ ரடியெ டுத்"துலகெ லா"மெனத்
தொண்டர் சீர்பரவு சேக்கி ழான்,வரிசை துன்று குன்றைநக ராதிபன்,
றண்ட காதிபதி, திருநெ றித்தலைமை தங்கு செங்கைமுகில், பைங்கழற்
புண்ட ரீகமலர் தெண்ட னிட்டுவினை போக்கு வார்பிறவி நீக்குவார். கOங

## சிறப்புப்பாயிரம்

திருக்கிளருங் கயிலைமலைக் காவல்பூண்ட செல்வமலி திருநந்தி மரபில் வந்து
கருக்குழியி லெமைவீழா தெடுத்தாட் கொள்ளுங் கருணைமிகு மெய்கண்ட தேவர், தூய
மருக்கிளர்தாள் பரவுமரு ணந்தி தேவர், மகிழுமறை ஞான தேவ ருக்கன் பாகி
யிருக்குமுமா பதிதேவர் சேக்கி ழார்த மிசைப்புரா ணம்முரைத்தா ரென்ப மாதோ.

—அபியுக்தர் வாக்கு.

திருச்சிற்றம்பலம்

தில்லைமூவாயிரவரி லொருவரும், சந்தானசாரியர் நால்வரிலொருவருமாகிய
உமாபதிசிவாசாரியார் அருளிச் செய்த

சேக்கிழார்புராண மென்னும்

திருத்தொண்டர்புராண வரலாறு

முற்றும்.

ஆக திருவிருத்தம் கOச.





சேக்கிழார் சுவாமிகளது தம்பியார்
பாலறாவாயர்



சேக்கிழார் சுவாமிகளது
தாயார்

சோழநாட்டுச் திருநாகேச்சரத்தில் உள்ள படிமங்கள்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருத்தொண்டர்புராண

# வரலாற்றுச் சுருக்கமும்

## ஆசிரியர் சேக்கிழார்சுவாமிகளது

# சரித ஆராய்ச்சிக் குறிப்புக்களும்

---

உலகிலே எல்லாவுயிர்களுக்கும் கருணைத்தாயாகியவர் உமைஅம்மையார். அவ்வுயிர்கள் எவைகட்கும் போக மோட்சங்களைத் தரும்பொருட்டு அவர் இறைவனைத் தழுவுதற்குத் தவம்புரிந்தனர். அதற்குரிய இடமாகப் பெற்றது தொண்டை நன்னாடு. பாலாறு பெருகி இதற்கு எல்லா வளங்களையும் தருகின்றது. இந்நாடு, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நானிலப்பகுதிகளையும் இவற்றின் புணர்ப்பாலாகிய நிலப் பகுதிகளையும் சிறக்க உடையது. இந்நிலப்பகுதிகள் ஒவ்வொன்றும் சிவத்தலங்களிற் சிறந்தனவற்றைத் தம்முட்கொண்டு விளங்கும் பெருமையுடையன.

இந்நாட்டிலே கரிகாற்பெருவளப் பெருஞ்சோழர் பற்பல நாட்டினும் தெரிந்துகொண்ட நற்குடி நாற்பத்தெண்ணாயிரத்து வேளாண் மக்களைக் குடியேற்றினர். ஒழுக்கத்தினும் வாய்மையினும் சிறந்த குடிகளால் நிரம்பப் பெற்றதால் "தொண்டை நன்னாடு சான்றோருடைத்து" எனப் பாராட்டப்பெற்றது இந்நாடேயாம்.

இந்நாட்டின் இருபத்துநான்கு கோட்டங்களிற் சிறந்து விளங்குவது புலியூர்க் கோட்டம். அதில் உள்ள நாடு பலவற்றினும் சிறந்தது குன்றத்தூர் நாடு. அதனுட் சிறந்து விளங்குவது குன்றத்தூர். அவ்வூரில் வேளாண்குடிமரபிலே சேக்கிழார்குடி பெருமைபெற்று வாழ்ந்தது. அக்குடிசெய்த பெருந்தவப்பயனாய் அருண்மொழித் தேவரும், அவர் தம்பியாராகிய பாலறுவாயரும் அவதரித்து வாழ்ந்தனர்.

காமாட்சியம்மையாரிடம் இருநாழிநெல் பெற்று அதனை உழவுதொழிலாற் பெருக்கி உலகமெல்லாமுண்டு வாழும்படி அறம் வளர்க்கும் வேளாளர் குலம் மிகப் புகழ்பெற்றதாம். ஒரு வணிகனுக்குத் தாம் சொன்னசொல்லைக் காக்க எழுபது பேர் வேளாளர்கள் முன்னாளில் தீப்பாய்ந்து வாய்மை காத்த திருவாலங்காட்டுப் பழயனூர்ச் சரிதம் ஆளுடைய பிள்ளையாராலும் புகழப்பட்டதென்றால், வேறு நாம் புகழ்வது என்னை? அறுபத்துமூன்று நாயன்மார்களிலே பதின்மூவர் வேளாளர்களாவார். இத்தகைய விழுக்குலத்திலே சிறந்த விழுக்குடியிலே அவதரித்த விழுத்தகைமையானும் அறிவானும் மேம்பட்டு விளங்கிய அருண்மொழித்தேவர் பெருமையை அக்காலத்துச் சோழநாட்டையாண்ட குலோத்துங்கச் சோழர் என்ற அரசர் கேட்டு அவருக்கு உத்தமச்சோழப் பல்லவன் என்ற பட்டமூந்ந்து அவரைத் தமது முதன் மந்திரியாக அமைத்துக் கொண்டார். அவ்வாறே அவரும் அமைச்சர் தொழில்பூண்டு அரசாங்கத்தைத் திறம்பெற நடத்தி வந்தார். அந்நாளில் அருண்மொழித் தேவர் திருநாகேச்சரத்தில் எழுந்தருளியுள்ள இறைவனிடத்து மிக்க அன்பு செலுத்தி அவரையே தமது ஆன்மார்த்த நாயகராகக் கொண்டு வழிபட்டு வந்து, அத்திருக்கோயிலிற் பற்பல திருப்பணிகள் செய்தனர். அங்கு நடேசப்பெருமான் எழுந்தருளியிருக்கும் கனகசபையையும் அதன் முன்புறம் மண்டபத்தையும்

புதிதாய் அமைத்துத் திருப்பணிசெய்தனர். தமது ஊராகிய குன்றத்தூரிலே தமக்குக் கிராமப்புலத்திலே இருந்த மனைக்கட்டு இடத்தில் தமது ஆன்மார்த்த நாயகராகிய திருநாகேச்சுரத்திறைவர் நினைவுக்கு அறிகுறியாகத் திருக்கோயிலும், திருமடவளாகமும் அமைத்துத் தாபித்து, அதற்குத் திருநாகேச்சரம் என்று பேருமிட்டு, அதற்கு நித்திய நைமித்திக விசேட உற்சவாதிகளும் நியமித்தார். அவ்வூரிற்றமக்கிருந்த நிலம் முதலிய பொருள்கள் அனைத்தையும் அத்திருக்கோயிற் றிட்டச்செலவுகளுக்கென்று நியோகித்தார். அந்நிபந்தமும் திருக்கோயிலும் இன்றும் அவ்வாறே நின்று நிலவிச் சிறப்பாய் நிகழ்ந்து வருகின்றன.

அருண்மொழியார் அறநெறியிற் சீர்பெற அமைச்சியல் நடத்தினர். அந்நாளில், உலகர் பலரும் பாராட்டி வந்ததுபோலவே, அருங்கலை விநோதரான இவ்வரசர் அநபாயரும் சீவகசிந்தாமணி என்ற சமண காவியத்தைப் பெரிதும் பாராட்டி அதைப் பலவாறும் கேட்டு மகிழ்வாராயினர். அதுகண்டு, அரசனை உண்மை நெறியிற் றிருத்துதல் அமைச்சரது கடமைகளில் ஒன்றாதலின், ஆசிரியர் அருண்மொழியார் "இது பொய்நூல்; சிற்றின்பக் கதைகள் மலிந்து மக்களைத் தீயவழியிற் புகுத்தும்; மறுமைக்காகாது; இம்மைக்குமாகாது; இம்மைக்கும் மறுமைக்கும் உறுதி தந்து வீடு தருவன சிவ கதைகளேயாம்" என்று அறிவுறுத்தினர். அதுகேட்ட அரசர் "அவ்வாறாயின் அச்சிவகதைகள் யாவை?" எனக் கேட்டனர். "திருவாரூர் இறைவர் தாமே "தில்லைவாழந்தணர்தமடியார்க்கு மடியேன்" என்று முதலடி எடுத்துக் கொடுத்து அறிவுணர்த்தி யருளியபடி நம்பியாரூரர் திருத்தொண்டத்தொகை பாடியருளினர். அதனை விரித்துத் திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையார் பொருளுரைக்கக் கேட்ட நம்பியாண்டார் நம்பிகள் திருத்தொண்டர் திருவந்தாதி பாடினர். இவ்வாறு வந்த திருத்தொண்டர் வரலாறுகளை இராசராசசோழதேவர், சிவாலய முனிவர் முதலாகப் பற்பல பெரியோரும், உலகரும் பாராட்டிக் கொண்டாடினர்" என்று அவற்றின் வரலாற்றினை அருண்மொழித்தேவர் எடுத்துச் சொல்லியருளினர். அரசர் "அச்சரிதங்களைச் சொல்க" எனக் கேட்க, அருண்மொழியாரும், அவ்வாறே தில்லைவாழந்தணர் சரிதம் முதலாகத் திருநீலகண்டயாழ்ப்பாணர் சரிதம் ஈறாக விரித்துரைத்தனர். அதுகேட்ட அரசர் மிக மகிழ்ந்து "இவ்வடியார்கள் அவதரித்த நாடும், ஊரும், மரபும் அவரவர்கள் பேரும், செய்த திருத்தொண்டின் வரலாறும் அடைவுபடப் பிரித்தும் விரித்தும் உலகெலாம் கேட்டுய்யுமாறு ஒரு பெருங் காப்பியமாகச் செய்து தருதல்வேண்டும்" என்று அமைச்சரை வேண்டினர். அவருமிசைந்தார். அதன் பொருட்டுத் தக்க திரவியங்களையும் தந்து தக்க பரிசனங்களுடன் அவரை அவர் விருப்பின்படியே திருத்தில்லைக்கு வழியனுப்ப, அவரும் அங்குச் சென்று சேர்ந்தனர். தில்லை யெல்லையை வணங்கிக்கொண்டு அம்பலவாணர் திருமுன்னர்ச் சென்று, வணங்கி, உள்ளமுருகி, நைந்து, கண்ணீர்வார்ந்து, உரோமம் சிலிர்க்கப், பேரின்பவெள்ளத்தில் மூழ்கி, வணங்கி, நின்று, "அடிகளே! உமது அடியார்களது சீர்களை அடியேன் உரைத்திட அடியெடுத்துக் கொடுத்து, இடர்களைக் களைந்தருள வேண்டும்" என்று வேண்டி இறைஞ்சினர். அப்போது அம்பலவாணர் அருளினால் அசரீரிவாக்கு "உலகெலாம்" என்று உரை செய்த பேரொலி எழுந்து அடியார் செவிப்புலத்து எங்குமாகி நிறைந்தது. அது கேட்ட தில்லைவாழந்தணர்களும் மடபதிகள் முதலிய யாவரும் அம்பலவாணரை வணங்கி மகிழ்ந்தனர். அருண்மொழித்தேவரும் திருநெறித்தலைவர்களாகிய சமயகுரவர்களை வணங்கிச், சிவசாதனங்களைத் தரித்துக்கொண்டு, ஆயிரக்கால் மண்டபத்திலே யிருந்து, திருவருளையே மேற்கொண்டவராய், அம்பலவர் எடுத்துக்கொடுத்த மொழியையே முதலாக வைத்து, அன்று முதலாகப் புராணத்தை முறையாகப் பாடி முடித்தருளினர். இவர் புராணம் பாடிய சிறப்பைச் சந்தான குரவர்பெருமானாகிய உமாபதிசிவாசாரிய சுவாமிகள்,

"ஓருலகோ ? வொருதிசையோ ? வொருபதியோ ? தம்மி
லொருமரபோ ? வொருபெயரோ ? வொருகாலந் தானோ ?
பேருலகி லொருமைநெறி தருங்கதையோ ? பன்மைப்
பெருங்கதையோ ? பேசொன்றோ ? வல்லவே ! யிதனை
யே"ருலகெ லாமுணர்ந்தோ தற்கரிய வன்"னென்
றிறைவன்முத லடியெடுத் துக கொடுத்தருளக் கொண்டு,
பாருலகி னுமகனின் றெடுத் துக்கை நீட்டப்,
பாடிமுடித் தனர்தொண்டர் சீர்பரவ வல்லார்"

"கருங்கடலைக் கைநீத்துக் கொளலெளிது ; முந்நீர்க்
கடற்கரையி னுய்மணலை யெண்ணியள விடலாம் ;
பெருங்கடனமேல் வருந்திரையை யொன்றிரண்டென் றெண்ணிப்
பிரித்தெழுதிக் கடையிலக்கம் பிரிததுவிட லாகும் ;
தருங்கடலின் மீனையள விடலாகும் ; வானத்
தாரகையை யளவிடலாஞ் சங்கரன்ற டமது
சிரங்கொடிருத தொண்டர்புரா ணத்தையள விடநஞ்
சேக்கிழார்க் கெளிதலது தேவர்க்கு மரிதே"

எனறு வியந்து பாராட்டிக் காட்டினர் என்றால் அதன பெருமையை யாமோ அளந்து காணவல்லோம் ? இவ்வாறு பாடிய புராணததை இரண்டு காண்டங்களாகவும் பதின் மூன்று சருக்கங்களாகவும் வகுத்துத, தெய்வம் மணக்கும் நாலாயிரத்து இருநூற்றைம் பத்துமூன்று செய்யுட்களாற் பாடி முடித்து, அதற்குத் திருத்தொண்டர் புராண மெனறு பேரிட்டு, அப்புராணத் திருவேட்டினை மைக்காப்பணிந்து, கவளிகையுமிட்டு நிறைவு செய்தருளினர் ஆசிரியர்.

அருண்மொழியார் புராணம் பாடத் தில்லைக்குச் சென்றபின் அரசர் பல காலமும் 'புராணம் எவ்வளவு சென்றது ? எவ்வளவு சென்றது ?' என்று தூதுவர்களையும் ஒற்றர் களையும் அனுப்பித் தெரிந்து வந்தனர். புராண நிறைவெய்திய செய்தி கேட்டனர். அது சொல்லியவர்க்கெல்லாம் செம்பொன்னும் நவமணியுஞ் செழுந்துகிலும் முதலான வரிசைகள் சிறப்புறப் பொழிந்தனர்; "தில்லையம்பலவாணரது திருக்கூத்துக் கும்பிட்டு அவர் அருண்மொழி முதலெடுத்துத் தரப்பெற்ற அருண்மொழியாரையும், அம்முதல் கொண்டு அவர் வாய்மலர்ந்த புராணததையும் தொழுவேன் யான்" என்று துணிந்த னர் ; "யாவரும் பயணம் எழுக" என்று முரசறைவித்தனர் ; நல்வேளையிற் றமும் சேனைகள் சூழப்புறப்பட்டனர். அவர் வரவு கேட்ட தில்லைவாழநதணர்களும், மடபதி களும், மற்றும் பெரியோர்களும், அருண்மொழியாரும் மகிழ்ந்து அரசரை எதிர் கொண்டு இனிய மொழி பல பகர்நது வரவேற்றனர்.

"முண்ட மானதிரு முடியு மிட்டதிரு முண்ட முங்கவச முந்துணைக்
குண்ட லங்களு மிரண்டு காதினும் வடிந்த லைநதகுழை யுந்திருக
கண்ட மாலைகா மாலை யுஞ்சிரசு மாலை யுநகவின் விளங்கவே
தொண்டர் சீர்பரவு வான னைந்தசுப சரிதை சோழனெதிர் கண்டனன்"

அரசர்அருண்மொழியாரைத தவவேடத் தாசராகக் கண்டு அத்திருவேடத்தினையும் அம்பலவர் அருளையும் நினைந்து அவரது திருவடிகளில் வீழ்ந்திறைஞ்சினர். பின்பு அரசர், யாவரும் சூழத் திருச்சிற்றம்பலவாணா திருமுன்பு சென்று, கண்ணருவிபாய, உரோமம் புளகிப்ப,வாய்குழற,அன்பினாலே விம்மிவிம்மி, ஆனந்த பரவசராகி, வீழ்ந்து, எழுந்து, நின்றனர். அப்போது "சேக்கிழான் நமது தொண்டர்சீர் பரவுதற்கு நாமே "உலகெலாம்" என்று அடியெடுத்துக் கொடுக்க வரைந்து நூல்செய்து முடித்தனன்

வளவ! நீ இதை விரைந்து கேள்" என்று கனகசபையில் இறைவனுடைய அசரீரி வாக்கு யாவரும் கேட்க எழுந்தது. அவர் பாதத் திருச்சிலம்பொலியும் உடனே எழுந்தது. அரசர் அதுகேட்டு உளங்கசிந்து உருகி மகிழ்ந்தனர். "இத்திருக் கதையினை விரித்துக் கேட்க யாவரும் வருக" என்று எல்லாத் திக்குக்களிலும் அரசர் ஓலை போக்கினர். அவ்வாறே சிவ சமயத்தவர் யாவரும் யாங்கணுமிருந்தும் வந்து திரண்டார்கள். நகர முழுவதும் அலங்கரித்தனர். திருவீதிகளிற் றோரண முதலியன கட்டி அழகு செய்து புதுக்கினார்கள். நடராசர் நடஞ்செய்யும் கனகசபைத் திருமுன்றிலிற் கோமயத்தால் மெழுகி, அறுகாற் பீடமிட்டு, அதன்மேற் பசும்பட்டு விரித்து, மேலே வெண்பட்டு மடித்து இட்டுப், புதுமலர்கள் தூவி, நறுந்தூப தீபங் கொடுத்துச், சிவாகம விதிப்படி ஆசனங் கற்பித்தனர். அதன்மேற் றெள்ளுதமிழ்ச் சேக்கிழார் செய்த புராணத் திருமுறையை வைத்து இறைஞ்சிப் போற்றினர். "இப்புராணத்தை நீரே வாசித்துப் பொருள் அருளிச் செய்வீர்" என்று யாவரும் கேட்கக் குன்றை முனிவரும் அவ்வாறே சொல்ல விசைந்தனர். சிவபெருமானுக் கிசைந்த பேர்வழியின்னுளும், ஆளுடைய பிள்ளையார் அவதரித்த நாளும், அவர் அழுது ஞானமுண்டருளிய நாளும் ஆகிய திருவாதிரை நாளிலே சித்திரையிற்றொடங்கி அடுத்த சித்திரைத் திருவாதிரையிலே முடிப்போமென்றுகொண்டு சேக்கிழார்பெருமான் நடத்த ஆயிரக்கால மண்டபத்தில் அனைவரும் நாடோறுமிருந்து கேட்டனர். மூவர் முதலிகள் அருளிய திருநெறித் தமிழாகிய தேவாரமும், திருமூலர் அருளிய திருமந்திரமாலையும், அம்மையார் அருளிய திருவிரட்டைமணிமாலை, அற்புதத்திருவந்தாதி, மூத்ததிருப்பதிகம் என்றிவைகளும், கழறிற்றறிவார் நாயனாருளிய பொன்வண்ணத்தந்தாதி, ஞானவுலா, திருமும்மணிக்கோவை என்றிவையும், ஐயடிகள்காடவர்கோ னாயனாருளிய திருவெண்பாவும் ஆகிய இவற்றைத் தனது உறுப்பாகவும், திருவிருத்தப்பாவினத்தை உடலாகவும், பொருள்கோள் உயிராகவும் கொண்டு, நாலடியால் "உலகெலாம்" என்ற புராணம் உலகெலாம் நடந்தது. புராணம் சொல்லத் தொடங்கிய நாள் முதலாக நாடோறும் வந்து கேட்ட எல்லா அடியவர்களுக்கும் உறையுள், உணவு முதலிய எல்லா உபசாரங்களையும் அரசாணையின்படி அமைச்சர்கள் நடத்தினர். நடராசருக்கு மகாபூசை நடத்தினர். தில்லைவாழந்தணர்கட்கெல்லாம் வெவ்வேறாக அமுதுபடி முதலான வெல்லா நடத்தினர். இவ்வாறு திருத்தில்லை சிவலோகம் போலப் பொலிந்து தோன்றிற்று. திருமுறையைப் பல பேர் எழுதுவர்; பல பேர் வாசிப்பர்; பல பேர் பொருளுரைப்பர்; பலர் சிரமசைத்துக் கொண்டாடுவர்; பலர் சிரிப்பார், களிப்பார், தேனிப்பார்; வேறு பலர் குன்றை முனிவர் செய்த அருந்தவப் பயனை எண்ணி எண்ணி மகிழ்வர்; மற்றும் பலர் அம்பலவர் அருளினை மகிழ்வர்; பற்பலரும் "இது கேட்ட சோழர் செவிக்கு இனிச் சிந்தாமணிப் புரட்டுப் பிடிக்குமோ" என்பர். இவ்வாறு அன்பர்கள் பாராட்ட அடுத்தவாண்டு சித்திரைத் திருவாதிரை நாளில் புராணம் படித்து முடித்தனர் சேக்கிழார் பெருமான். அன்பர் முழக்கிய அரவொலி கடலினு மிக்குமுழங்கியது. திருத்தொண்டர் புராணம் எழுதிய திருமுறையை மறையோர் சிவமூல மந்திரத்தால் அருச்சனைசெய்து இறைஞ்சினர். வேதத்தோ டொப்ப இதுவும் ஒரு தமிழ்வேதமேயாம் என்று தூபதீப நிவேதனம் முதலிய உபசாரங்களுடன் பூசித்தனர். பின்பு அரசர் அத்திருமுறையைப் பச்சைப் பட்டினாற் சுற்றிப், பொற்கலத்தில் வைத்து, யானைச் சிரத்தில் ஏற்றி வைத்து, அதனை யடுத்துச் சேக்கிழார் பெருமானையும் ஏற்றினர். அரசருங்கூட ஏறிப் பின்புறம் அமர்ந்து தமது இரண்டு கரங்களினாலும் இரண்டு வெண்சாமரைகளை வீசினர். தேவர்கள் பூமழை பொழிந்தனர். இவ்வாறு திருவீதி வலம் வந்தபோது அரசர் மனமிக மகிழ்ந்து "இதுவன்றோ நான் செய்த தவப் பயன" என்று மகிழ்ந்தனர். வீதிகள்தோறும் வாழைகட்டித் தோரண முதலியவற்றால் அலங்கரித்துப் பூரண கும்பமும்

வைத்து தூபதீபமேற்றிப் பூசித்தனர். வேதியர் வேதமோதி எதிர்கொண்டு வாழ்த்தினர். கண்ணுற்காணும் பேறுபெற்றாரெல்லாம் பலவாறும் வாழ்த்தினர். இவ்வாறு திருவீதி வலம்வந்து அம்பலமுன்றிலிலே யானையினின்றும் இறங்கிச் சேக்கிழார் பெருமான் தில்லைவாழ் அந்தணரோடு மனையத, திருவம்பல முன்பு திருமுறையை வைத்து யாவரும் அமபலவாணரை வணங்கிப் போற்றினர். சேக்கிழார் பெருமானுக்குத் " தொண்டர்சீர் பரவுவார் " என்ற பட்டம் சுமத்தி, ஞானமுடி சூட்டி, மண்டபத்தில் அமர்த்தி, அவரைச் சோழர் வணங்கினர்.

"தோடு செய்ததிரு நெறிய செந்தமிழொ டொக்கும்" என்றுரை தொடர்ந்து,செப்
பேடு செய்து,நட ராசர் சந்நிதியி லேற்றி ஞர்க;ளிது பாலிசூழ்
நாடு செய்ததவ!; நீடு குன்றைவள நகரி செய்ததவ!; நிகரிலாப்
பீடு செய்தபகி ரதிகு லததிலகர் சேக்கி ழார்செய்த பெருந்தவம்!"

அரசன் அதனபின் சேக்கிழாரது தம்பியாராகிய பாலறுவாயர் எங்குற்றார் என று விசாரிததனர். அவர் குன்றததூரில் தமது பெயரினாலே திருக்குளம் அமைதது அங்குத திருநாகேச்சரததிலே திருப்பணி செய்து அமர்ந்தனர் என்று தெரிந்து அவரை வரவழைத்து அவர்க்குத் தொண்டைமான் என்று பட்டம் அளிததனர். அமைச்சரிமை பூண்டு நாடுகாவல் கைக்கொள்ளுமாறு அவரை வேண்டினர். அவர் தமது நாட்டைவிட்டுவர இசையாமையால் அங்கிருந்தபடியே அமைச்சரிமை பூணும் படி அரசர் வேண்ட அவரும் உடன்பட்டாராய் அரசர்க்குற்ற துணையாய் அமைச் சியற்றினர். அக்காலத்திலே தொண்டை நாட்டிலே உண்டாகிய பஞ்சத்தில் மக்களை யெல்லாம் வருந்தாது காத்தனர். அவருக்குத் தொண்டைமண்டலம் நின்று காத்த பெருமான் என்ற பெயர் எங்கும் பரவியது.

சேக்கிழார் பெருமான் தில்லை நகரிலே இருந்து, அறுபத்துமூன்று நாயன்மார் சரிதங்களை யுணர்ந்து கொண்டு, அடியார்களுடன் அருந்தவத்திலிருந்து, பின் அம் பலவர் இனிததருமுடைய எடுததபாதநிழ லெய்தினார்.

**வாழ்த்து**

வாழி தில்லைமணி மன்று ளென்றுநட மாடு மங்கணர் மலர்ப்பதம்!;
வாழி காழிநகர் வாழ வந்ததிரு நெறிய ஞானபதி வள்ளலார்!;
வாழி யன்பர்திரு நீறு மிட்டதிரு முண்ட மூர்த்துவய கவசமும்!;
வாழி குன்றைமுனி சேவை யாதிதிரு வாய்மலர்ந்தருள் புராணமே!.

---

## சரித ஆராய்ச்சிக் குறிப்புக்கள்

**பெயரும் இளமையும்** — சேக்கிழார்சுவாமிகளது இயற்பெயர் அருண்மொழியார் என்பது. அது இறைவனது திருநாமங்களுள் ஒன்று. சேககிழார் குடியிற்பிறந்து, சிறநது, அக்குலவிளக்காக நிலவியதனால் இவரைச் சேக்கிழாரென்றே வழங்குவர். இளஞ்சேக்கிழார் பழந்தமிழ் நூல்களில் மிக வல்லவராய் விளங்கினார். திருக்குறளைப் பெரிதும் பயின்று சிறந்தனர் என்பர்.

**புராணம் பாடிய பிற்றைநிலை** — சேக்கிழார்சுவாமிகள் பெரியபுராண மரங்கேற்றியபின் திருத்தில்லையிலே தங்கியிருந்து அப்புராணததிற் கூறிய சரிதங்களை உணர்நதுகொண்டும், திருத்தொண்டர்களுடன அருந்தவத்தினிலிருந்துகொண்டும் சிவபிரானடிநீழல் எய்தினர்.

அவர் பெருமையினை உட்கொண்டு, அரசர் அவரது தம்பியார் பாலறாவாயரைத் தமது அமைச்சராகக் கொண்டனர். அதன் பின்பு வந்த சோழ அரசர்களும் அவர்களது வாழையடி வாழையாய் வமிச பரம்பரையில் வந்த பெருமக்களையே தமது அமைச்சர்களாகக் கொண்டு அரசு செலுத்தினர் என்றும், அவ்வமைச்சர்கள் இவ்வுலகங் காவல் பூண அரசர்க்கு அமைச்சராயின மட்டில் அமையாது, திருத்தொண்டர் புராணத்தையும் அவ்வவ் வரசர்களுக்கு உபதேசித்து வருதல் பின்னுட் பல நூறு ஆண்டுகள்வரை மரபா யிருந்தது என்றும், சேக்கிழார் சுவாமிகளுக்கு ஏறக்குறைய இருநூறாண்டுகளின் பின் வாழ்ந்த உமாபதியார் திருவாக்கினு லறிகின்றோம்.

**ஆசிரியரது வழி வழியாரே அமைச்சர்கள்**

"......சேக்கிழார், வாச லன்றுமுத லின்று காறுமினி மேலும் வாழையடி வாழையாய், வீசு தென்றன்மணி மண்டபத்தரசு வீற்றிருக்குமுடி யரசருக், கீச னன்பர்கள் புராண முஞ்சொலி, யமைச்சு மாகி,நல மெய்துமால் " என்பது திருத்தொண்டர் புராண வரலாறு. இதில் இனிமேலும் என்றதனுல் சோழ அரசர்கள் இதனை நியதியான மரபாகக் கையாண்டனர் என்றும் தெரிகின்றது.

**நாயனுர்க்குத் திருநாகேச்சரம் ஆன்மார்த்த தலமானது**

திருநாகேச்சரவீசரிடத்துப் பராய்க் கடனெறியினின்ற நல்வினைப் பயனுலே இவர் தாயார், இவரையும், இவரது இளவலாகிய பாலறாவாயரையும் பெற்றெடுத்தார் என்றும், அதனுலும் பின்னர்ப் பல நிகழ்ச்சிகளின் தொடர்பினுலும் இவர் அவ்விறைவரையே தமது ஆன்மார்த்தமாகக் கொண்டு நேசித்துப் பூசித்தனர் என்றும் ஊகிக்க இடமிருக்கின்றது. "மாநாக மருச்சித்த மலர்க்கமலத் தாள்வணங்கி, நாளும் பரவுவார் பிணிதீர்க்கும் நலம்போற்றி " (திருஞான சம்பந்த சுவாமிகள் புராணம் - 412) என்ற குறிப்பும், உமாபதி சிவத்தின் திருவாக்கும் இதற்கு ஆதாரந்தருகின்றன. அமைச்சராகிய பின் திருநாகேச்சரத்தைத் தமது வாசத்தலமாகக் கொண்டு பல நாளும் வழிபட்டு அங்குத் திருப்பணிகள் செய்தனர் என்று கொள்ள இடமிருக்கின்றது. அத்தலத்தே இவரது தாயாரும் தாமும் தம்பியுமாக உள்ள திருவுருவங்கள் திருக்கோயிலினுள்ளே தாபிக்கப்பெற்று இந்நாளும் பூசிக்கப்படுகின்றன.

**காலம்**

குன்றத்தூரிற் சேக்கிழார் சுவாமிகளது வீடு இருந்த இடத்தில் இப்போது அவரது கோயில் அமைக்கப்பட்டிருக்கின்றது. அவர் வாழ்ந்த காலம் இப்போதைக்கு ஏறக்குறைய எண்ணூறு ஆண்டுகளின் முன் என்று கொள்ளப்படுகிறது. புராணம் பாடுவித்த அநபாயச் சோழர் முதலாவது குலோத்துங்கர் என்ற கொள்கை முன் நிலவியிருந்தது. இப்போது அக்கொள்கை வலியுறாது, அவர் இரண்டாங் குலோத் துங்கரே என்றும், அவரது காலம் பன்னிரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதி என்றும் உள்ள கொள்கை சரித ஆராய்ச்சி வல்ல பல அறிஞர்களாலும், அரசாங்கக் கல்வெட்டுப் பரிசோதனை அதிகாரிகளாலும் பற்பல ஏதுக்களால் வலியுறுத்தப் பெறுகின்றது. இவ்விரு கொள்கையுமே யன்றி அநபாயர் என்பவர் கங்கைகொண்டசோழர் ஆவார் என்று கொள்வாரும் உண்டு. இந்நாள் அறிஞர் பலரும் ஆதரிக்கும் கொள்கையின்படி பார்த்தாற், கலிங்கத்துப்பரணி பாடிய செயங்கொண்டார் சேக்கிழார் சுவாமிகளுக்கு முன்னும், ஒட்டக்கூத்தர் அவருடனும், கம்பர் அவர்க்குப் பின்னும் இருந்த புலவராவார்கள்.

**புராணத்தின் ஆதாரங்கள்**

சேக்கிழார் சுவாமிகள் புராணம் பாடுதற்கு முதனூல் திருத்தொண்டத்தொகை. வழிநூலும் வகைநூலுமாகியது நம்பியாண்டார் நம்பிகள் அருளிய திருத்தொண்டர் திருவந்தாதி.மேலும் இப்புராணத்திற்கும் பேராதாரவாகவும் அடிநிலையாகவுமுள்ளன மூவர் முதலிகள் அருளிய திருநெறித் தமிழாகிய தேவாரம் முதலிய அருணூல்கள். ஆசிரியர் அவற்றை முற்றும் ஆய்ந்துணர்ந்து அவற்றுட் கண்ட உண்மைகளை விளக்கியதோடு அவற்

# பழஞ் சுவடியின் நிலை



குறிப்பு:—இங்குக்காட்டிய சுவடிப்படங்கள் பல அரிய பொருள்களை விளக்குகின்றன. 1½ அங்குல அகலமுள்ள ஓலையிதழின் ஒருபுறத்திற் பத்துச் செய்யுட்களும், முதலிலுங் கடைசியிலும் அவ்வப்புராணங்களின் பெயரும், செய்யுட் கடையிலக்கங்களும், கொண்டு புராணமுடிந்தவிடத்துத் திருச்சிற்றம்பலம் என்றெழுதியுமுள்ளன. ஒரு பக்கத்தில் 27 வரிகளும், மற்ற பக்கம் 26 வரிகளுமாக எழுத்துக்கள் ஒன்றோடொன்றுசேராமலும் வரிகள் பிறழாமலும் எழுதப்பட்டன. இடப்புறம் புராணத் தலைப்புக்குப் பக்க இடம் விட்டுத தனியாக எழுதப்பட்டுளது. கோல் துளைக்கும் இடம் விடப்பட்டது. இது என் அருமைத் தந்தையார் வைத்துப் போற்றி யிருந்த ஏட்டுச் சுவடியின் ஓர் இதழ். 48 ஆண்டுகளின் முன்னர் அவர் தமது 51-வது வயதிற் சிவகதி பெற்றனர். எனவே இச்சுவடி இற்றைக்கு ஒரு நூறு ஆண்டுகளின் முன் எழுதிப் போற்றப்பட்டதென்று கூறலாம். கல்விநிலை, எழுத்துநிலை, தமிழில் ஆர்வநிலை, சுவடி போற்றுநிலை முதலியவை அந்நாள் நின்ற உயர்வும் நேர்மையும் இது கொண்டு ஒருவாறு தெரியலாம். இந்நாள் அச்சிற்றுறனும் சிறிய இடத்தில் இத்தகைத்தாய்ப் பொறிக்க இயலாமை காணலாம். இவ்வருஞ் சுவடி என் வீட்டிலிருந்தும் எனது பேதைமையாலும் கவனக் குறைவாலும் தீவினையாலும் முழுதும் சிதலுக்கிரையாயிற்று. நான் அறிந்து தேடும் போது மிகச் சில இதழ்களே முழுதும் பகுதிகளுமாகக் கிடைத்தன.

இச்சுவடி யிதழினு லறியப்படும் பொருள்கள் :—(1) பத்தராய்ப் பணிவார் புராணத்து இறுதியில் 4141 என்று குறித்துள்ளது. 4282 பாட்டுக்களுள்ள பதிப்புச் சுவடிகளில், மேற் கண்ட இடத்துச் செய்யுள் 4154 ஆகிறது. எனவே அதுவரை பின் வந்தார் 13 செய்யுட்கள் இடைச் செருகல் செய்தனர் எனறு கூறக் காரணமுண்டு.

(2) பததராய்ப்பணிவார் சருக்கம் ஒவ்வொரு புராணமும் பொதுவாக ஒவ்வொரு திருப்பாட்டா னமைந்துள்ள தென்பது இவ்விதழிற் காணலாகும். பரமனை - புரா - "தென்றமிழும்..." (க); சித்தத் - புரா - "காரணபங்கயம்..." (க); திருவாரூர் - புரா - "திருக்கயிலை..." (க); முப்போ - புரா - "எப்போது மினிய..." (க); "தெரிந்து..." (உ) வே. "காரணற்கும்..." (ங); அப்பாலும் - புரா - "மூவேந்தர்..." (க) "செற்றார் தம்..." (2); என்ற எட்டுச் செய்யுட்களே காணப்படுகின்றன. எனவே இச்சருக்கத்தில் பின் வந்தவர் சேர்நத இடைச் செருகல்கள் அச்சுப் பிரதிகளிற் கண்ட "புரமூன்றும்" "அருவாரு" "தெரிந்துணரின்" "ஆதார" "அம்பலத்தே" "ஆரணிய" "அடவிபடு" "இந்தவகை" எனற எட்டுச் செய்யுட்களாம் என்னலாம்.

(3) அன்பர்கள் நேரே கண்டு கொள்ளுமாறு இவ்விதழ்களின் படம் இங்குப் பதித்தேன். ஆர்வதத்தொடும் இதற்குதவி செய்த என் நண்பர் திரு. திருத்துறையூர்-ஆறுமுக நாயனூர்க்கு என் நன்றி உரியது.

றையே தமது புராணத்திற்கு ஆதாரவாகக் கொண்டனர். புராணமாகிய பெரு மாளிகை அந்த அடிநிலையின்மேற் கட்டப்பட்டது என்னின் அஃது அமையும். இவற்றையே இப்புராணத்தின உறுப்புகளாக மேலே சுட்டப்பட்டதும் காண்க. இனி முன்னாளிற் கண்ட பழங் கல்வெட்டுக்களும், அமைச்சர் பெருமானாகிய ஆசிரியர் அரசாங்கஞ் செலுத்தலிற் கண்ட சாசன முதலியவையும, உலகவழக்கிற கேட்ட சரிதவரலாறுகள் முதலியவைகளும் ஆதாரவாயின. இவை எல்லாவற்றிற்கும் மேலாய் ஆசிரியர் அம்பலவர் திருவருள் வெளியிலே அதது விதமாய் நின்று, அருண்மயமான ஞானக்கண்ணிலே எல்லா உண்மைகளையும் அவனே காட்டக் கண்டு, அறிந்தபடி பாடினர். இப்புராணம் முழுதும் அருள்வாக்காகிய வேதம் என்பது முக்காலும் சத்தியமேயாம்.

**செய்யுட்டொகையும்இடைச் செருகல்களும்**

இப்புராணச் செய்யுள் தொகை 4253 என்பது உமாபதியார் புராண வரலாறு. இததொகைக்குமேல் 32 பாட்டுக்கள் அச்சிட்ட பிரதிகளிற் காணப்படுகின்றன. அவை பிற்காலப்புலவர்களால் உண்டாக்கப்பட்டுப் புராணத்திற் புகுத்தப்பெற்ற இடைச்செருகல்கள் என்று அறிஞர் கருதுகின்றனர். செய்யுட்டொகையும் 'இடைச்செருகலையும் காட்டத் தக்கதோர் பழைய சுவடியின் படம் உதாரணத்துக்காக இதில் சேர்ததுள்ளேன். இன்னும் இதுபற்றிய ஆராய்ச்சியும் சேக்கிழார் சுவாமிகளைப்பற்றியும் புராணத்தைப்பற்றியும் உள்ள பற்பலவகை ஆராய்ச்சிக் குறிப்புக்களும் எனது சேக்கிழார் என்ற நூலில் எழுதியுள்ளேன். இடன் நேர்ந்தவழிப் புராண உரையினுள்ளும் அங்கங்குக் குறிததுள்ளேன். விரிவு ஆண்டாண்டுக் கண்டுகொள்க.

**தனித் தமிழ் நூல்**

இப்புராணம் உபமன்னிய பக்த விலாசம் என்ற வடமொழி நூலின் மொழிபெயர்ப்பு என்போர் சிலர். இது முற்றிலும் தவறு. இது தனித்தமிழ் நூலேயாம்.

**பயன்**

இப்புராணத்தின் பயனாவது இருள் போக்குதல் என்க. என்னை? இருள் இருவகைப்படும்: புறவிருள் ஒன்று; சிந்தையுள் நின்ற அகவிருள் மற்றொன்று; புறவிருள் போக்குபவன் செங்கதிரவன். அதுபோல் உயிரினிடத்துப் பொருந்திய ஆணவம் என்னும் வலிய இருளைப் போக்குவது இத் தொண்டர் புராணம் என ஆசிரியர் நூற்பெயர் சொல்லியவிடத்தே அறிவுறுத்தியுள்ளார். உலகச் சார்புபற்றிக் கற்போருக்கும் இப்புராணம் பெரும் உண்மைகளை அறிவுறுத்தி நற்பயன் அளிக்கும். இப்புராணம் ஒரு பெருங்காப்பியமாம். நாட்டின் அமைப்பும, அந்நாள் வழக்குக்களும், சரிதமும், பிறவும் அறிதற்கு இது பெருந்துணையாம். ஆணவ நீங்கி அரனடி நினைந்து பேரின்பமுறும் ஆசைபற்றிக் கற்போருக்கு இது பெருஞ் சேமநிதியாம். இது பேரின்ப வீட்டிற்குச் சாதனமாவதன்றி இதுவே சாத்தியமெனப்படும் அடையப்படுபொருளுமாம் என்பதும் அறிஞர் துணிபு. ஆசிரியர் இப்புராணம் பாடி அரங்கேற்றிய பின்னர், இப்புராணச் சரிதங்களை யுணர்ந்து கொண்டு இவ்வுலகத்துத் தமது எஞ்சிய வாழ்நாளைச் செலுத்தி அரனடி யடைந்தனர் என அறிகின்றோமன்றோ? கலைஞானங்களை யறிதற்கும் இது பெருந்துணையாம்.

**பல பக்குவ முடையார்க்கும் பயன் படும் சிறப்பு**

உலகத்து எவ்வெப் பக்குவமுடையார்க்கும் இப்புராணம் வழிகாட்டும் திருவிளக்காம் என்பது இதனுட் பேசப்படும் சிவப்பேறடைந்தோர் சரிதங்களான் அறியக்கிடக்கும். இதனுள்ளே மரபுவகையானே திருமறையோர் சரிதம் பதின்மூன்றும், சிவவேதியர் சரிதங்கள் நான்குமாம்; மாமாத்திரர் ஒருவர், முடிமன்னர் அறுவர், குறுநில மன்னர் ஐவர், வணிகர் ஐவர், வேளாளர் பதின்மூவர், சாலியர் இருவர், குயவர் - தைல வினையாளர் - பரதவர் - சான்றார் - வண்ணார் - மறவர் - நீசர் - பாணர் இவர்

ஒவ்வொருவர், மரபு குறித்து உரையாதார் பதின்மூவர் என்று இப்புராணத்திற் போற்றப்பட்டோரின் மரபு வகுக்கப்பெறுகின்றது.

இனி, இப்பெரியார் திருக்கூட்டத்திலே தமிழர் சில பேர்; மலையாளர் சிலபேர்; தெலுங்கர் சிலர்; மற்றுள்ள தேசத்தோர் சிலர்; முற்காலத்தவர் சிலர்; இப்போதுள்ளவர் சிலர்; இனி எதிர்காலத்து வருவோர் சிலர் என்று அறியப்படும். இனி, வழிபாட்டு வகையாலே திருஞானசம்பந்த நாயனார் முதற் சோமாசிமாற நாயனார் வரைப் பத்தொன்பது பேர் குருவழிபாட்டாலும், எறிபத்தர் முதலாகக் கோச்செங்கட் சோழனாரீறாக முப்பதுபேர் சிவலிங்க வழிபாட்டாலும், திருநீலகண்டனார் முதல் நேசர் வரைப் பத்தொன்பது பேர் அடியாரது திருவேட வழிபாட்டாலும் முத்தியடைந்தனர் என்றறியக் கிடக்கின்றது.

இனித், தமிழ்வகையானே திருஞானசம்பந்த சுவாமிகள், அப்பர் சுவாமிகள், காரைக்காலம்மையார் இம்மூவர்கள் இயற்றமிழும் இசைத்தமிழும் வல்லவர்கள்; திருநாளைப்போவார், ஆனாயர், திருநீலகண்டயாழ்ப்பாணர், பரமனையேபாடுவார் என்ற இவர்கள் இசைத்தமிழ் வல்லோர்; ஐயடிகள், திருமூலர், காரியார், பொய்யடிமையில்லாத புலவர், கழறிற்றறிவார் என்னுமிவர்கள் இயற்றமிழ் வல்லோராவர்.

இனி, ஆச்சிரம வகையானே, திருநீலகண்டர், இயற்பகையார் முதலியோர் இல்லறத்தினின்றே பேரின்ப முத்தி பெற்றோர்; மூர்த்தியாரும், அப்பர் சுவாமிகளும் துறவறத்தினின்று பேறடைந்தோர்; சண்டேசர் பிரமசாரிகள்.

இனி, அடியார்களுடன் சார அணைந்தமையால் அச்சார்புபற்றி முத்தியடைந்தோர் பல்லோர். திருஞானசம்பந்த சுவாமிகளது திருமணத்திலே சேவித்து உடனே முத்தி பெற்றாரும், சேரரும் நம்பியாரூரரும் கயிலைக்கெழுந்தருளும்போது அன்பினால் உடல் வீழ்த்து, வீர யாக்கைகொண்டு அவர்களைச் சாரச் சென்றணைந்தாரும் முதலிய எண்ணிறந்தோர் வரலாறு இதனைப் புலப்படுத்தும். சிவனடியாருடன் பகைத்து அவராற் புனிதமாக்கப்பட்டு முத்தி பெற்றோரும் பலர். அவர்களாவார் சண்டேசாற் றண்டிக்கப்பட்டுக் குற்ற நீங்கிய எச்சதத்தன் என்னும் அவர் பிதா, கோட்புலியாராற் றண்டிக்கப்பெற்ற சுற்றத்தார் முதலியோராம். சிவனடியார்களைப் பகைத்து நரகத்திலடைந்தோர் மூர்த்திநாயனாரது திருத்தொண்டினுக்கு இடையூறு செய்த வடுகக் கருநாட மன்னன் முதலியோராம். இவ்வாறு இப்புராண சரிதங்களைப் பிரித்துப் புகல வரிதாம். தனியடியார்களும் தொகையடியார்களுமாகித் திருநாவலூரர் காலத்து முன்னும் பின்னும் நின்று சிவனடியடைந்த அடியார்கள் எண்ணிறந்தபேர். இவர்கள் யாவரும் உலகர்க்கு வழிகாட்டிய உத்தமர்களாவார். இவ்விரிவுகளை உமாபதியார் அருளிய திருத்தொண்டர்புராண வரலாற்றிற் காண்க.

**முன்னை வரலாறும் முடிபும்**

இவர்கள் கதையினை உமாதேவியாருக்குப் பரமசிவன் உபதேசித்த வரலாறு சிவரகசியத்து ஒன்பதாம் அமிசத்திலே கேட்கப்படும். திருநாரையூர்ப் பொல்லாப்பிள்ளையார் நம்பியாண்டார்நம்பிகளுக்குத் தெருட்டியருளினர். உபமன்னியமுனிவர் பல பெருமுனிவர்களுக்கு எடுத்துச் சொன்னார். இவ்வாறு திருக்கைலாய பரம்பரையிலே வந்த, உலகம்போற்றும் உத்தமர்களது சரிதமாகிய இப்புராணத்தைப் பயின்று உலகம் இம்மை மறுமை வீட்டின்பங்களை யடைந்துய்வதாக. இப்புராணம் காட்டக் காண்பதன்றித் தேவார முதலிய அருட்டிருவாக்குக்கள் பலவற்றிற்கும் நாம் உள்ளுறையும் பொருளும் காண்பதரிது. இக்கண்கொண்டு நாம் அவற்றையும் ஓதி உய்வோமாக.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# ஸ்ரீ மாதவச் சிவஞான முனிவர்

அருளிச் செய்த

# திருத்தொண்டர் திருநாமக்கோவை.

---

மெய்யன்பர் நாமமெல்லாம் வெவ்வேறு போற்றிடவைங்
கையன் றிருவடியே காப்பு.

## கலிவெண்பா

தில்லைவா ழந்தணர்கள் சீர்நீல கண்டனா
ரில்லை யளித்த வியற்பகையார்—தொல்லை
யிளையான் குடிமாறர் மெய்ப்பொருளா ரென்று
மிளையா விறன்மிண்ட ரின்ப—மளவுமமர்
நீதி யெறிபத்தர் நீண்டபுக ழேனாதி
நாதர்திருக் கண்ணப்பர் நற்கலயர்—மேதகுசீர்
மானக்கஞ் சாறரரி வாட்டாய ரானாயர்
ஞானத திருமூர்த்தி நாயனார்—மேன்மை
முருகர் பசுபதியார் முன்னாளைப் போவார்
திரிசி றிருக்குறிப்புத் தொண்டர்—மருவுமறைச்
சண்டீசர் வாகீசர் தக்க குலச்சிறையார்
கொண்ட மிழலைக் குறும்பனார்—தொண்டுசெயு
நீள்காரைக் காலம்மை யப்பூதி நீலநக்கர்
முனா நமிநந்தி முத்தமிழை—யானாந்
திருஞான சம்பந்தர் செய்ய கலிக்காம
ரருண்மூலர் தண்டி யடிகள்—வருமூர்க்கர்
சோமாசி மாறனார் சாக்கியனார் சூழாக்கூர்
நாமார் சிறப்புலியார் நற்றெருண்டி—னேமச்
சிறுத்தொண்டர் சேரமான் செய்ய கணநாதர்
விறற்களந்தைக் கூற்றுவனார் விஞ்சைத்—திறத்துமிகும்
பொய்யடிமை யில்லாப் புலவர் புகழ்ச்சோழர்
மொய்கொணர சிங்க முனையரைய—ரையரதி
பத்தர் கலிக்கம்பர் கலியர் பகர்சத்தி
கைத்தபுல னையடிகள் காடவர்கோன்—மொய்த்தகணம்
புல்லனார் காரிநெடு மாறர்புகழ் வாயிலார்
நல்ல முனையடுவார் நாயனார்—மல்குகழற்
சிங்க ரிடங்கழியார் தஞ்சைச் செருத்துணையார்
கொங்கார் புகழ்த்துணையார் கோட்புலியா—ரங்கணர்க்குப்
பத்தராய்த் தாழ்வார் பரமனையே பாடுவார்
சித்தஞ் சிவன்பாலே சேர்த்துள்ளார்—கித்தமு

முத்திநெறி காட்டு முதல்வர் முழுதுணர்ந்தோர்
பித்தனுறை யாரூர்ப் பிறந்தார்க—ளத்தனையே
முப்போது நீண்டுவார் முழுநீறு பூசுவா
ரப்பாலு மீச னடிச்சார்ந்தார்—மெய்ப்பூசன்
மானியார் நேசனர் வாழ்செங்கட் சோழனர்
பான்மையார் நீலகண்டப் பாணனர்—மேன்மைச்
சடையரிசை ஞானியிவர் தம்மையெல்லாஞ் சேர்தநுத
தொடையாகப் பாடியவன் ரொண்ட—ரடியிணைகள்
சிந்தனைசெய் திந்தத் திருநாமக் கோவைதனை
மந்திரமாக் கொண்டு மயிர்சிலிர்த்து—நைந்துருகி
மெய்யன்பா லென்றும் விளம்பப் பெறுவார்கள்
கைதவமும் புல்லறிவுங் கற்பனையு—மையலுந்தீர்ந
தத்துவிதா னந்த வகண்டபரி பூரணத்தி
னித்தியமா வாழ்வார் நிசம்.

**திருத்தொண்டர் திருநாமக்கோவை முற்றிற்று**

*திருச்சிற்றம்பலம்*

---

## திருநாமக்கோவையின் உரைக்குறிப்புக்கள்

1. **சீர் நீலகண்டனர் - சீர்** - சிறப்பு - சீர்த்தி. அயலறியாத வண்ணம் அண்ணலாரானை காத்துப், பெருந்தேவர்களுங் கடத்தற்கரிய காமத்தை வென்ற சிறப்புக் குறிக்கச் **சீர்** என்றார். மயலில் சீர்த்தொண்டனர் - என்ற பெரிய புராண ஆட்சி போற்றப்பட்டது காண்க.

2. **இல்லை அளித்த** - அடியார் வேண்டிய தெதுவாயினும் இல்லை என்று சொல்லாமற் கொடுத்த. "இல்லையே யென்னாத" என்ற திருத்தொண்டத்தொகையும், அதற்கு, "மறைச்சிலம்படியார், மிக்க சீரடி யார்கள்யா ரேனும் வேண்டும் யாவையும் இல்லையென் னாதே, இக்கடற்படி நிகழமுன் கொடுக்கு மியல்பு" என்ற பெரியபுராண வுரையும் இங்குச் சுருக்கிக் காட்டிய அழகு காண்க. என்னாது என்பது தொக்கு நின்றது. இனி, இல்லை - இல்-மனைவி என்று கொண்டு, இல்லை அளித்த - மனைவியை அளித்த என்று பொருள் கொள்ளின், இல்லை என்ற விதப்பு, நாடுறு பழியு மொன்னார் நகையையு நாணுது, "உன்றன் மனைவியைப் பனவற் கீந்தோ பாடவ முரைப்பது. கொடுக்கயா மொட்டோம்" என்ற பாசத்தார் கட்டினை யறுத்துச், செய்வதற்கரிய செய்கையாகிய களத்திரபாச நீக்கின தீரங் குறித்தது. **இல்லையளித்த** என்ற ஒரு சொற்றொடரானே நாயனாது பண்பும், சரிதமுங் குறிக்கவைத்த பேரழகு காண்க.

2. **தொல்லை** - தொன்மையும் வாய்மையும் சிறந்த வேளாண்குலத்தின் குடிப் பண்பு குறித்தது. வறுமை, பசி முதலிய எந்தத் தொல்லை வரினும் இளையாது அடியாரைப் பேணியவர் என்ற குறிப்பும் காண்க.

4. **என்றும் இளையா விறன்மிண்டர்** - திருக்கூட்டம் பேணுது செல்லும் நம்பியாரூரரும் புறகு; அவரையாண்ட பிரானுகிய திருவாரூரரும் புறகு - என்ற வன்மையும், புவியெங்கும் சென்று ஆளுடையாரடியவர்தம் திண்மை யொழுக்க நடை செலுத்திய இவரது வீரமுஞ், சலியாமையும் குறித்தது **என்றும் இளையா** என்றார்.

5. **இன்பம் அளவும் அமர்நீதி** - திருவிழாச் சேவித்தலும், அடியார்க்கமுதளித்தலும் என்ற, மண்ணினிற் பிறந்தார் பெறும் பயனிரண்டினையும் பெற்று, வாழ்ந்து காட்டிய இவரது சரிதங் குறித்து **இன்பம் அளவும்** என்றார். இவையே - இவ்வளவினவே.

இன்பம் ; பிற வெல்லாந் துன்பததுக்கே யேதுவாம் என்பது உண்மைநூற் றுணிபு. இனபத்தை இவ்வாறு அளநது வாழ்க்கையிற் காட்டியதுடன், துலைக்கோல் கொண்டு நிறுத்தலளவையாலும் அளந்து காட்டியவராதலின் அளவும் - அளததலைச் செய்யும் - அமர்நீதி என்றார். இதனல் அவரது சரிதங் குறிதத அழகு காண்க.

5. நீண்ட புகழ் ஏனதி - நீண்ட புகழ் என்றது தமது மாற்றானேயாயினும் நீறு புனைந்த அடியாராயினார்க்கு, நிராயுதரைக் கொன்றார் எனும் பாவ மெய்தாதபடி காக்கும் பொருட்டுத் தாம் ஆயுதந்தாங்கி, மலைவார்போல் நின்று, தம் உயிரையும் அளித்த பெரும்புகழ் குறித்தது. உயிரையும் உவந்தீயும் புகழின்மேற் புகழ் வேறில்லை.

6. திருக்கண்ணப்பர் - நக்கீரதேவர் அருளிய திருக்கண்ணப்பதேவர் திருமறம் (பதினொராந் திருமுறை) "திருக்கண்ணப்பன்" என்று தொடங்கி அதனையே கொண்டு முடிந்தது இங்குப் போற்றப்பட்டது. திரு என்றது ஆளுடையபிள்ளையார் காளத்தியப்பரைக் "கும்பிட்ட பய" னிதுவே, (திருஞான - புரா - 1028) யென்று காணும்படி, பேறினி யிதன்மே லுண்டோ ? எனப்பெற்ற மன்னுபேருட் டிரு.

6 நற் கலயர் - குங்கிலியக்கலய நாயனார். பலபகல் உணவில்லாது பசியால் வாடிய தமது மக்கள் முதலியோர் பசி தீர்க்க நெற்கொள்வதற்கு மனைவியார் தந்த திருமங்கல நூற்றாலியை, நெற்கொள்ளாது, இறைவனுக்கேற்ற குங்கிலியத்துக்கு மாறினா. அதனை ஏற்றுக்கொண்ட இறைவன் பெருவளனீந்தருள, அதுகொண்டு, ஆளுடைய அரசுக்கும் ஆளுடையபிள்ளையார்க்கும் மற்றும் அடியார்க்கும் மாகேசுரபூசை செய்தனர் நாயனார். இந்நலமெல்லாங் குறிக்க நல் என்றா.

8. ஞானத் திருமூர்த்தி நாயனார் - ஞானம் - திரு - என்ற அடைமொழிகள், இவர் ஞானம் பெற்றுத துறவறத்தில் நின்றமையும், அதில் நின்று திருநீறு, கண்டிகை, சடைமுடி என்ற மும்மைத் திருவே பொருளாகக் கைக்கொண்டு உலக வாழ்வாகிய அரசர் திருவை அதுகொண்டு அளநத திறங் குறித்தன.

9. மேன்மை முருகர் - இறைவன் முடிமேல் முப்போதும் மாலை சாத்தி அவரது குறிப்பறிந்து களிக்கும் நாயனாரது மேன்மையினை ஆளுடையபிள்ளையார் தேவாரத்திற் பாராட்டியது மிகு மேன்மையாம். பிள்ளையார்க்கும், அரசுகட்கும், சிறுத்தொண்டர், திருநீலநக்கர், திருநீலகண்டயாழ்ப்பாணர் முதலிய சிரடியார் பலர்க்கும் ஒக்க அமுதளித்துபசரித்து உடனுறைவின் பயன் பெற்றது பெருமேன்மை. பிள்ளையார் திருமணத்திற் சிவனடி பெற்றது சிறந்த மேன்மை. இவையெல்லாங் குறிக்க மேன்மை முருகர் என்றார்.

9. மூன் நாளைப்போவார் - இவர் திருத்தில்லையினை உடம்பாற்போ யடையுமுன் பலநாளும் மனததாற் சென்றடைந்ததனையும், குலத்தாற் கடையாராயினும், நலத்தால் முனியாகி, முன்னவர்க்கும் மூன்னாகி அணைந்ததனையும் குறிக்க மூன் என்றார்.

10. துரிசில் - துரிசு - அழுக்கு. அடியாரது ஆடைகளின் துகள் மாசு கழிப்பவர் போல, இந்நாயனார் செய்தசெயல் தமது "தொல்லைவினை ஆசுடைய மலமூன்று மணைய வரும் பெரும்பிறவி மாசுதனை விடக்கழித்" தது குறிப்பு. ஆன்மாக்களாகிய நமது துரிசுகளையும் இல்லையாகச் செய்பவர் என்ற குறிப்புமாம்.

10. மருவும் மறைச் சண்டீசர்-மலரின் முகையில் மணம் மருவுவதுபோல முந்தை யறிவின் தொடர்ச்சியினாலே வேதம் - வேதாங்கம் - ஆகமம் எல்லாமறிந்த அறிவு மருவியவர் - வந்து பொருந்தியவர்-என்றது குறிப்பு. மறை மருவும் என்க. மறை - ஆகமங்களையும் ஆறு அங்கங்களையும் உடன குறித்தது. (சண்டீசர் புரா - 13)

11. தக்க குலச்சிறையார் - (திருவாலவாய் - பண் - புறநீர்மை.) ஆளுடைய பிள்ளையாருளிய திருப்பதிகத்தில் ஆறு திருப்பாட்டுக்களிற் பாராட்டப்பெற்ற

தகுதியும், அவர் செய்த சைவத தாபனத்திற்குத துணைக்காரணமாகி நின்ற தகுதியும், அடியார் திருவேட வழிபாட்டுச் சிறப்பின தகுதியும் குறிக்கும்படி தக்க என்றார்.

12. கொண்ட - தாம் குருவாகக் கொண்ட நம்பியாரூரரது பாதமே பற்றாகக் கொண்டு, அச்சிறப்பினாலே அவர்க்குமுன் இறைவர் பாதங் கைக்கொண்ட சிறப்புக குறிக்கக் கொண்ட என்றார்.

12-13. தொண்டு செயும் நீள் காரைக்காலம்மை - நீள் தொண்டு செயும் என மாற்றுக. மறவா வரம்பெற்று, மகிழ்ந்து பாடித, தொண்டுசெய்து, இறைவர் திருவடிக் கீழ் என்றுமிருக்கின்றாராதலின் நீள் எனவும், செயும் என்றும் கூறினார். காலங்கடந்து நீளும் தொண்டினை முக்காலத்தும் செயும் என்க. "பிறந்து மொழிபயின்ற பின்னெல் லாங் காதல், சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன்" என்ற அம்மையாரது அற்புதத திருவந்தாதிக் கருத்துங் குறித்தது.

14. மூளு நமிநந்தி - பொறாமை மூண்ட அமணர் சொற்கள் கேட்டு மனததில் வருதத மூண்டனர். இறைவனருள் மூள, அரனெறியார் கோயில் முழுதும் பல நாளும் நீராற்றிருவிளக்கு மூள எரித்தனர். திருமணலிக்கு இறைவனது திரு எழுச்சி சேவிக்க எல்லாக் குலததுள்ளோரும் உடன் நண்ணியதனால் இழிவு தொடக் கிற்று என மனத்தில் மூண்ட இழிபினை, இறைவன் காட்டிய அறிவுச்சுடர் மூளத, திரு வாரூர்ப் பிறந்தார்கள் எல்லாரும் கணநாதர்களாகக் காட்டக் கண்டு, அந்த அறிவு மூளப் பெற்றனர். "தொண்டர்க்காணி" என ஆண்டஅரசுகள் பாராட்டும்படி மூண்ட அடிமைத் திறம் பெற்றனர் என்பனவாதி குறிப்புக்கள் பெற மூளும் என்றார்.

14-15. முத்தமிழை ஆளும் - ஆளுடையபிள்ளையார் முதததமிழ் விரகராந்தன்மை குறிததது. "தமிழ்ஞான சம்பந்தன்", "தமிழாகரன்", "அருந்தமிழ் ஞானசம் பந்தன செந்தமிழ்" என்பனவாதி அவரது தேவார ஆட்சிகளும், "அணைந்த மாமறை முதற்கலை யகிலமு மோதா, துணர்ந்த முத்தமிழ் விரகன்வந் தானென வூத" - (223) என்ற புராணமும் குறிக்க. தமிழை ஆளுதல் - மூலவிலக்கியங்களை யருளிச்செய்து, தமிழிலக்கணங்கள் தமது ஆணையினடங்கி நின்று உறுதிப்பொருள் தரப் பயன்படுத்து தல். இக்கருத்துப்பற்றியே நாவலர் பெருமானும் "நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தன" (திருப்புன்கூர் - தக்கேசி-4), "நாளு மின்னிசை யாற்றமிழ் பரப்பு ஞானசம்பந்தன்" (திருக்கோலக்கா - தக்கேசி - 8), "தமிழ் ஞானசம்பநதன்" (திருக்கேதாரம் - நட்ட பாடை - 10) எனத் தமிழொடு புணர்த்தியே துதிததும், "பழுத்த செந்தமிழ்மலர்" (திருவீழிமிழலை - 10) எனச் சேந்தனார் திருவிசைப்பாவிற றுதித்ததும், "இருந் தமிழ்" எனத திருவந்தாதி (39) யிலும், "ஞானத்தமிழ்" என மும்மணிக்கோவையி லும் (11) நம்பியாண்டார் நம்பிகள் துதித்ததும், "அசைவில்செழுந தமிழ்வழக்கே யயல்வழக்கின் றுறைவெல்ல" எனச் சேக்கிழார்சுவாமிகள் புராணததுக் (24) காட் டியதும், பிறவும் காண்க.

15. செய்ய - செம்மையையுடைய. செம்மையாவது "எந்தை தந்தை தந்தை யெங் கூட்டமெல்லாந், தம்பிரானீரே யென்று வழிவழிச் சார்ந்து வாழும், இம்பரின் மிக்க வாழ்க்கை" யுடைய நீர்மை குறிததது. (ஏயர்கோன் - புரா - 392.)

16. அருண்மூலர் - தம்மை மேய்ப்பானாகிய மூலன் பிரிவினால் வருந்திய பசுக்க ளின் துன்ப நீங்க அருள் கொண்டமையும், அதன் பொருட்டுத தம்முடலினின்றும் அவனுடலிலே தாமுயன்ற பவனவழித் தம்முயிரைப் பாய்த்தியமையும், பின்னர், மூல னைக் காணாது வருந்தும் பசுக்களாகிய உயிர்களின் பொருட்டு ஆகமப் பொருளைத் தமிழ் வகுப்பத் தம் உடல் கரக்க இறைவன் அருள் வைத்தமையும், உலகர் "பிறவிவிடந் தீர்த்துய்ய" அருள்கொண்டு "ஞானமுத லான்குமலர் நற்றிருமந் திரமாலை" அருளியமை யும குறிக்க அருள் மூலர் என்றார்.

16. வருமூர்க்கர் - தொண்டை நாட்டுத் திருவேற்காட்டூரினின்றும் சோழ நாட்டுத திருக்குடந்தைக்கு வரும் என்றும், சூதினில் வென்ற பொருளால் முன்னர் அடியார்க் கமுதளித்துத் தாம் அமுது செயக் கடைப்பந்திக்கு வரும் என்றும், தீமை பயக்கும் பாதகமாமெனறு விலககிய சூதினையும் நன்மை பயக்க வல்லதாக்க வரும் என்றும் குறிக்க வரும் என்றார்.

17—18. சூழ் ஆக்கூர் - நாமார் - சிறப்புலியார். இன்மையாற் சென்றிரப்பார்க் கில்லை யென்னுதே யீயும், தன்மையார் சூழ்ந்திருக்கப்பெற்ற சிறப்பும், இதனை ஆளு டைய பிள்ளையாரது மறைத்திருவாககினுற் பாராட்டப் பெற்ற பெருஞ் சிறப்பினுற் சூழப்பெற்றதும், குறிக்கச் சூழ் ஆக்கூர் என்றார். மறைத்திரு வாக்கூர் அவ்வூர்-என்பது புராணம். நாம் ஆர் - நாமம் - நாம் என நின்றது. நாம் - கீர்த்தி - புகழ். இவரது புகழா வது "இரப்பார்கொன் றீவார்மே னிற்கும் புகழ்" என்றபடி வள்ளன்மையுடைய ராதல். இது பற்றியே திருத்தொண்டத் தொகையில் "சீர்கொண்ட புகழ்வள்ளல்" என்று நம்பியாரூராற் றுதிக்கப்பட்டனர் என்றது குறிப்பு.

18—19. நற்றெண்டினேமச் சிறுதொண்டர் - அடியார் முன்பு மிகச் சிறியராய் அடைந்து வழிபட்டார் என்றதும், அடியார்க்கு அமுது படைத்தலே நியமமாக - நேமமாகக் - கொண்டொழுகினுர் என்றதும், அத்தொண்டின் ஏமம்-காவல்-பெற்றனர் என்றதும் குறிப்பாம்.

19. செய்ய கணநாதர்-திருநின்ற செம்மை என்னும் சிவதன்மை பெறுவிக்கும் பலவகைத் திருத்தொண்டினுறுதி பெறத், தொண்டருக் கறிவளித்துச், செம்மைத தொண்டரையாக்கித, தாமும் செம்மை பெற்றனர் என்பது குறிக்கச் செய்ய என்றார்.

20. விறற்களந்தைக் கூற்றுவனுர் - மாற்றலர் வெருளுங் கருவி நான்கும் நிறை வீரச்செருக்கின் மேலாயினுர் எனவும், வேந்தர் வளநாடு பலவும் கவர்ந்த விறலினர் என வும்,முடி ஒன்றுமொழிய அரசர்திரு வெல்லாமுடையாராயின விறல் படைததனர் என வும், தாம் சூட எண்ணிய அரசர் முடியைத் தில்லைவாழந்தணர் தமக்குச் சூட்டா தொழியவும் தில்லைவாழ் பேரந்தணராகிய இறைவாபால் வேண்டி அவரது திருவடி யினையே முடியாகச் சூட்டப் பெற்ற விறலினையுடையார் எனவும் குறிக்க விறல் என்ற அடைமொழி தநதோதினுர்.

20—21. விஞ்சைத் திறத்து மிகும் - விஞ்சை - வித்தை ; திறம் - அதனுலாய பயன். மிகும் - அதில் முனைதது நிற்றல். செய்யுணிகழ் சொற்றெளிவு பெற்ற திற மும், செவ்விய நூல் பல கற்றதனுலாய பயனிதுவே யென அறிந்து ஈசன் மலரடிககே யாளாயின திறமும், இவற்றில் மிக்கு நின்றமையும் குறிப்பாம்.

22. மொய் கோள் - மொய் - போர். போர்க்களம். கோள் - வெற்றி கொண்ட. இந்நாயனுர் பல போர்களிலும் வெற்றி பெற்றுர் என்பது சரிதம். "தெம்முனைகள் பல கடந்து" என்பது புராணம். தீங்குநெறிப் பாங்காகும் போரினும் அடியாரடி யடை தலே புனைந்து வெற்றி பெற்றவர். "சீலமிலரே யெனினும் திருநீறு சார்ந்தாரை ஞாலம் இகழ்ந்து அருநரக நண்ணுமற்" செய்யவல்லது ஒருபெரும் மாயப்போரின் வெற்றியாம். காமகுறி மலர்ந்த வூனநிகழ் மேனியராய் நீறணிந்து வந்த அடியவருக் குப், பிறர்முன்னே, படி இரட்டிப்பொன் கொடுத்த வகையாலே இம்மாயப் போரிலும் வெற்றிகொண்டார் என்பனவாதி குறிப்புக்கள் பெற மொய்கோள் என்றார்.

22—23. ஐயர் அதிபததர் - ஐயராகிய அதிபத்தர். இவரது குலம் பரதவர் - மீன் வலைஞர் - என்ற தாழ்ந்த குலமேயாயினும் இவர் ஐயரே - பெருமையிற் சிறந்தோ ரேயாம் என்றது குறிப்பு. திருநாளைப்போவாரைத் தில்லைவாழந்தணர்கள் "ஐயரே" - (திருநாளை - புரா - 30) என்றதும், திருநீலகண்ட யாழ்ப்பாணரை ஆளுடையபிள்ளை யார் "ஐயர்நீர்" - (திருஞான-புரா - 133-450) என்றதும் முதலிய ஆட்சிகள் காண்க,

23. **பகர் சத்தி** - அன்பரை இகழ்ந்த நாவினை அரியும் சத்தியுடையார் என்று எவரும் பகரும் சத்தியார் என்ற குறிப்பு. அன்பரை "இகழ்ந் தியம்பும்முரை வைத்த நாவை வலித்தரி சத்தியாற் சத்தியாரெனும்" - (சத்தி - புரா - 3) என்றது புராணம்.

24. **கைத்தபுலனீ ஐயடிகள் காடவர்கோன்** - புலன் கைத்த என மாற்றுக. கைத்த - கசந்த - வெறுத்த. தமது அரசாட்சியை இன்னலென இகழ்ந்து வெறுத்து ஒதுக்கியவர்; யாக்கை நிலையாதென்பதையும், யாக்கை விரைந்து அழிந்துபோவதன் முன்னே அரன் பணிசெய்து அவன் தலந்தோறுஞ் சென்று அவனை யடையவேண்டு மென்பதையும் வலியுறுத்தி ஐம்புல வின்பங்களையும் கைக்குமாறு உலகர்க் கறிவுறுத் தும் க்ஷேத்திரவெண்பாப் பாடினர்; பேரரசரான தாமும் ஐம்புலன்களையும் கைத்துத், தமது முடிதுறந்து, சிவதலந்தோறும் சென்று, பாடிச், சிவனடி பெற்றனர் என்பன வாதி குறிப்புக்கள் பெறக் கைத்தபுலனீ என்றார்.

24. **மொய்த்த கணம்புல்லனார்** - மொய்த்த-மொய்த்தல் - தொகுத்தல் - கூட்டு தல். தொகுதியாய் அரிந்து கட்டிய கணம்புல்லினால் தம் வாழ்வு நடத்தியவர்; முறை யாமங் குறையாமல் இறைவன் சந்நிதியில் விளக்கெரிக்கக் கணம்புல்லுப் போதாமையாலே தமது திருமுடியினையே அதற்கீடாகக் கூட்டியவர் என்பது குறிப்பு.

25. **புகழ் வாயிலார்** - அகமலர்ந்த அர்ச்சனையில் அண்ணலார் தமைநாளும் அன்பினாற் புகழ்ந்து நிறைவழிபாடுசெய்த புகழினையுடையார்.

26. **நல்ல முனையடுவார்** - தமது உதவிக்கீடாக நிதிபெற்றுச் சென்று, கன்னார் முனையெறிகின்ற அதனையும் நடுவுநிலை வைத்துச், சீர்தூக்கிக், கூலியேற்றுச் சென்று வென்றாராதலானும், அவ்வாறு பெற்ற நிதியத்தை ஈசனடியார்க் காக்கினாராதலானும் நல்ல என்றார்.

26. **மல்கு கழற்சிங்கர்** - மல்குதல் - நிறைதல். தமது பட்டமு மணிந்து காதல் பயில்பெருந் தேவிபால் வைத்த அன்பினும் இறைவன் பணியில் அதிகம் பற்று மல்கிய வர் என்ற குறிப்பும், மலர் மோந்த மூக்கின் முன்னே பூவைத் தொட்டு முன் எடுத்த கையாம் முறபடத் துணிப்பதென்ற நீதி உறைப்பும் மல்கியவர் என்ற குறிப்பும் பெற மல்கு என்றார்.

28. **கொங்கார்** - கொங்கு - வாசனை - இருந்தவிடத்தனறி நெடுந்தூரம் சென்று பரவி வீசும் புகழினையும் குறிக்கும். நித்தல் ஒரு படிக்காசு இறைவனிடம் பெற்ற திருஅருண் மணமும், அதனாற் பரவிய அவாது புகழ் மணமும் குறித்தது.

30. **சித்தம் சிவன்பாலே சேர்ந்துள்ளார், நீத்தமு, முத்திநெறி காட்டும் முதல்வர் முழுதுணர்ந்தோர்** என்றது, தாம் சித்ததைச் சிவன்பாலே வைத்த அதனால் சிவத்தடைந்து, அடித்தொண்டின வழியடைந்தார். அதுவே முத்திபெறும் நெறி யாவதென்று உலகுக்குக் காட்டுகின்ற முதன்மையார். இவர்களே முழு உண்மையும் உணர்ந்தவர்களாவார். பிரமன் முதலிய காரணபங்கய மைந்தின் கடவுளர் பதமுங் கடந்து, அதன மேலையதாகிய பூரண மெய்ப்பாஞ்சோதி பொலிந்து விளங்கும் நாதாந தத தாரணையாலே சிவத்தை யடைந்து சிவாநுபோகம் பெற்று நிற்பவர்களாதலால் அந் நிறைவினுள் நின்று முழுதுமுணர்ந்தோராவர் என்றவாறாம். சிவத்தையடையும் எல் லாத் தொண்டினுள்ளும் சித்தம் சிவன்பால் வைத்தல் வேண்டப்படும்; ஆயினும் அது முடிவுபெற்று நிற்கும் சிறப்பு நோக்கி இதனை யிவ்வாறு விரித்துக் கூறினர்.

32. **அத்தனையே** - அத்தன் திருமேனியை. திருமேனி என்று திருத்தொண் டத் தொகையிற் கூறியது அத்தனாகிய சிவபெருமானது திருமேனியையே என்று விளக்குவார் தேற்றேகாரந் தந்துங் கூறினர்.

34. **மெய்ப்பூசல்** - மெய் - உள்ள மெய்த் தன்மையாலே தம் நினைப்பினால் எடுத்த மனக்கோயிலில் இறைவனைத் தாபித்துப் பலநாட் பேணிய சிறப்புக் குறித்தது.

35. **வாழ் செங்கட் சோழனார்** - சிலந்தியா யிருந்தபோது தம் வாய்நூலாற் திருநிழற்பந்தர் செய்து, இறைவன் திருமேனிமேற் சருகுவிழாது காத்து, அப்பந்தரின் கீழ் இறைவனை வாழச்செய்து, வழிபட்டமையாலே, திக்கெல்லாந் தன் செங்கோல் முறை செல்லத் தமது ஆணைப்பந்தர் நிழற்கீழ் உலகமெல்லாம் வாழ நிறை பேரரசும், இறைவனுக்கு 78 மாடக்கோயில்கள் அமைத்து அவற்றிற்கு வேண்டும் நிபந்தமும் அமைத்த வாழ்வும், சோழனாய் உலகாண்டதே யன்றிப் பாண்டிநாடுங் கொண்டு தென்னவனாயும் உலகாண்ட வாழ்வும், மூவர் முதலிகளாலும் பாராட்டப் பெறும் வாழ்வும், அதுவேயுமன்றி, வைணவ ஆழ்வாராதியர்களாலுந் துதிக்கப் பெறும் வாழ்வும், என்று மழியாப் புகழ் வாழ்வும், பெற்ற சிறப்புக் குறிக்க வாழ் என்ற அடைமொழி தந்தோதினார்.

36. **பாண்மையார்** - பாண்மை-ஊழ். தன்மை என்றலுமாம். முன்னைப்பாண்மை வழியாற் பாணர் மரபிற் றோன்றினாரேனும், ஆளுடைய பிள்ளையார் திருவடிச் சார்பு பெறும் பாண்மையும், அவர் தேவாரங்களை யாழிலிட்டுப் பிரிவின்றிச் சேவிக்கப்பெற்றுடனிருந்து வரும் பாண்மையும், அதனாலே அவர் முன்னே பரமர் தாளடையும் பாண்மையும் பெற்றாராதலின் **பாண்மையார்** என்றார். புராணத்தில் "வரும்பாண்மையினிற் பெரும்பாணர்" (12) என்ற சேக்கிழார் திருமொழி இங்குப் போற்றப்பட்டது காண்க.

36-37. **மேன்மைச்சடையர்** - "குவலயத்தி னலம்விளங்கும்படி, நாம் விளங்கும்படி, நற்றவத்தின் பலன் விளங்கும்படி" என்று நம்பியாண்டார் நம்பிகளும், "ஞாலமெல்லாங் குடிவாழ" என்று சேக்கிழார் சுவாமிகளும், போற்றியுள்ள பயனை உலகுக்குத் தரும்பொருட்டுத் தாம் வரங் கிடந்து நம்பியாரூரரைப் பெற்றீந்த மேன்மை குறித்தார். இதனையே "தம்பிரானன்றோழராய எங்கள் பிரான் - தவநெறிக்கோரிலக்கு - எண்ணார் சிங்கம் - மங்கையர்க டொழும்பரவை மணவாள நம்பி - வந்துதிக்க மாதவங்கள் வருந்திச் செய்தார்" என்று போற்றினார் உமாபதிசிவனார்.

38. **தொடை** என்றது திருத்தொண்டத்தொகை.

39. **இந்தத் திருநாமக்கோவைதனை மந்திரமாக் கொண்டு** என்றது இக்கோவையின இயல்பு குறித்தது. இதிற் கண்ட திருத்தொண்டர் திருநாமங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வோர் மந்திரமாம். ஆதலின் இக்கோவை முழுதும் மந்திரமேயாம். "ஞானசம்பந்தரென்னு நாமமந்திரமுஞ் சொல்ல, ஆனபோ தயர்வு தன்னை யகன்றிட" (திருஞான - புரா - 721) என்றவிடத்து இத்திருநாமங்கள் மந்திரங்களாமாறும், அவற்றைக் கேட்டலின் பயனுங் குறித்தது காண்க. அப்பூதியடிகள் திருநாவுக்கரசு என்ற திருநாமமாகிய ஓர் "சொற்றுணைவேதியுங் கூறியுமே யென்றுந் துன்பில் பதம் பெற்றார்" என்றதுங் காண்க. இக்கோவையிலே முழுதும் திருத்தொண்டர் திருநாமங்களை அவ்வப்படியே தனித்தனியாகக் காணுமாறு கோத்தனர் ஆசிரியர்; அதுவும் திருத்தொண்டத்தொகையின் முறையிலே கோத்தனர்; அதுவும் கலிவெண்பாவாக யாத்தனர். செய்யுள் நோக்கி யின்றியமையாத இடத்து இடையிடையே தந்த மிகச் சில அடைமொழிகள் தாமும் மேலே கண்டபடி அவ்வச் சரிதங்களின் உள்ளுறையை நன்கு விளக்குவனவாய், முன்னோர்மொழி போற்றுந் திறத்தில், அணிபெற அமைந்துள்ளன. இத்தெய்வீக அமைப்பும் அழகும் எமது மாதவச் சிவஞான முனிவரது திருவாக்கின் சிறப்புக் காட்டுவன. இதனை **மந்திரமாக்கொண்டு** என்றருளியதன் காரணம் மேலே காட்டியபடியாம். **மந்திரம்** - எண்ணுவோனைக் காப்பது என்பதாம். ஆதலின் "இதனை விதிப்படி ஓதுவார் பெறும் பயனாவது அத்துவிதானந்தப் பரமுத்திப் பெருவாழ்வேயாம்! இது சத்தியம்!" என்று ஆணையிட்டுக் கூறியருளி முடித்ததும் காண்க.

40—41. **மயிர்சிலிர்த்து - நைந்து - உருகி - மெய்யன்பால் - என்றும்**-என்பன மந்திரங்களை எண்ணுவதும் ஓதுவதுமாகிய முறை வகுத்துக் காட்டியவாறு.

41. பெறுவார்கள் - இது முன்னைத் தவத்தளவாற் கிடைக்கும்பேறு - எல்லார்க்கும் எளிதன்று என்பதாம்.

42. கைதவம் - கீழ்மை ; புல்லறிவு - கைதவத்திற்குக் காரணமாகிய அறியாமை - ஆணவம் ; கற்பனை - பொருளல்லவற்றைப் பொருள் என்றுணரும் மருள். மையல் - மயக்கம் - திரிபுணர்ச்சி.

43. அத்துவிதம் - இரண்டறக் கலத்தல். ஆனந்தம் - நண்ணரிய சிவாநந்தமாகிய பரமசுகம். இறவாத பேரின்பம். அகண்டம் - அளவுட்படாதது. பரிபூரணம். குறைவிலா நிறைவு. நித்தியம் - அழிவில்லாமை. இவ்வாழ்வே முதநி நிலையாம். திருத்தொண்டர் திருநாமங்களை விதிப்படி யெண்ணின் அவை முத்திப் பேறளிப்பன எனப் பயன் கூறியவாறு.

44. நிசம் - உண்மை - சத்தியம் - உறுதி - நிச்சயம் - என்ற ஆணை.

இத் திருநாமக்கோவை மெய்யன்பர் என்று தொடங்கி, நிசம் என நிறைவு பெற்றது. உண்மையே ஆதி ; உண்மையே அந்தம் ; இதனுள் நிறைந்த முழுமையும் உண்மையே என்றதாம். சுத்தாதல் இறைவனதிலக்கணம். அவனை அணைந்தோர் தன்மையும் அஃதேயாம் என்றது குறிப்பு.

இதனை நாடோறும் விதிப்படி பாராயணஞ் செய்வோர் எல்லா நலன்களையும் பெறுவர் என்பது சதநியம் !

**திருநாமக்கோவை உரைக்குறிப்புக்கள் முற்றியன**

---

## சேக்கிழார் துதிகள்

அண்ட வாணர்தொழு தில்லை யம்பலவ ரடியெ டுத்'துலகெ லா'மெனத்
தொண்டர் சீர்பரவு சேக்கி ழான்,வரிசை துன்று குன்றைநக ராதிபன்,
தண்ட காதிபதி, திருந றுதலைமை தங்கு செங்கைமுகில், பைங்கழற்
புண்ட ரீகமலர் தெண்ட னிட்டுவினை போக்கு வார்பிறவி நீக்குவார்.

—உமாபதிசிவாசாரியார்.

தூக்கு சீர்த்திருத தொண்டத தொகைவிரி
வாக்கி னாற்சொல்ல வல்லபிரா னெங்கள்
பாக்கி யப்பய னுப்பதி குன்றைவாழ்
சேக்கி ழானடி சென்னி யிருத்துவாம்.

—மாதவச்சிவஞான முனிவர்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

திரிசிரபுரம் - மகாவித்துவான்

மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள்

இயற்றிய

# சேக்கிழார்சுவாமிகள்

# பிள்ளைத் தமிழ்த் திரட்டு

---

## பாயிரம்

### விநாயகக்கடவுள் வணக்கம்

க. மாமேவு வான்பிறை முடிப்பிறை யிரண்டென்ன
வாய்க்கடைத் தோற்றியவிரு
மருப்பிரண் டென்னவங் கைக்கோ டிரண்டென்ன
மார்பின்முத் தாரமென்னப்
பாமேவு பேருதா பந்தமென வரைசூழ்
படாமெனத் தாளின்முததம்
பதித்தகழ லெனவிரவ மேலோங்கு பேருருப்
பண்ணவனை யஞ்ச லிப்பாம்
ஏமேவு ஞானசபை யிறைவர்தம் மேனியி
னிணங்குற வெழுப்புலகெலா
மென்னுமறை யாதியாக் கொண்டவ ருயிர்க்கருளு
மியல்பனைத் துந்தெரித்து
நாமேவு மம்முதலோ டொன்றவினை யுருபுதொக
நான்கனடி யாதிசெய்து
நாற்சீரி னொன்றி விளக்கியோளிர் சேக்கிழார்
நற்றமிழ்க் கவிதழையவே. 1

## காப்புப் பருவம்

உ. மும்மைமறை யும்பரவு மும்மையுல கும்புகழு
மும்மையாப் பகரமாகி
மும்மையுயிர் குறிநெடி றனித்துமத சவ்வூர்த்து
முதலமையு நாமமுற்றூர்
செம்மைபெறு மும்மையாம் வருணத் துதித்துச்
சிறந்தோங்கு மூர்த்தியார்முற்
செறியுமிரு மும்மையார் செம்பொற் பதாம்புயஞ்
சென்னிவைத் தேத்தெடுப்பா

*நம்மையருள் சிவபாத விருதய ருளதனுவகை*
*நண்ணவொண் பொருளாதலா*
*ஞுடுமுழ வாரவல மியைதலா லியாவோரு*
*நாவலர் பிரானென்னலால்*
*வெம்மைதவிர் புகலியார் முதன்மூவ ரும்புகலும்*
*வேதத் தமிழ்க்கணுள்ள*
*மெய்ம்மையை விரித்துத் தெரித்தருள்செய் குன்றையூர்*
*வேந்தைப் புரக்கவென்றே.* 8

## செங்கீரைப் பருவம்

௩. *புண்ணிய முதலே! பொங்கொளி மணியே! பொய்யாப் பெருவாழ்வே!*
*பொன்னலின் முத்தே! கள்ளமில் வித்தே! புரையில் சுவைப்பாகே!*
*தண்ணிய வமுதே! மண்ணியன் மதியே! தமிழ்நா வலரேறே!*
*சத்துவ நிதியே! பொத்திய மலநோய் சாடு பெரும்பகையே!*
*யெண்ணிய வன்ப ருளத்தமு தூற வினிக்கு நறுந்தேனே!*
*யென்றும் பத்தி ரசங்கனி கனியே! யெங்கா ளினுமெங்கட்*
*கண்ணிய பொருளே! யாய்பவர் தெருளே! யாடுக செங்கீரை*
*யாரரு ளாகர! சேவையர் காவல! வாடுக செங்கீரை.* 7

## தாலப் பருவம்

௪. *சோறு மணக்கு மடங்களெலாந், தூய்மை மணக்குஞ் சிந்தையெலாம்,*
*சுவண மணக்கு மாடையெலாந், தொங்கன் மணக்குந் தோள்களெலாஞ்*
*சேறு மணக்குங் கழனியெலாஞ், செல்வ மணக்கு மாடமெலாந்,*
*தென்றன் மணக்கு மேடையெலாந், தெய்வ மணக்குஞ் செய்யுளெலா,*
*நீறு மணக்கு நெற்றியெலா, நெய்யே மணக்குங் கறிகளெலா,*
*நெருப்பு மணக்குங் குண்டமெலா, நேய மணக்கும் வீதியெலாஞ்,*
*சாறு மணக்குங் குன்றத்தூர்த் தலைவா! தாலோ தாலேலோ*
*சகலா கமபண் டித!தெய்வச் சைவா! தாலோ தாலேலோ.* 5

## சப்பாணிப் பருவம்

௫. *நாடிய விரிநூல் சொற்றிடு திறனு னன்னூ லாசிரிய,*
*னருபா சுரமுத லுரைசெய் தலினு னவிலுரை யாசிரியன்*
*நீடிய பாசம யக்குழி வீழ்ந்தவர் நீப்பப் போதனைசெய்*
*நிலையாற் போத காசிரி யன்,னிவை நிகழ்தொறு நிகழ்தோறும்*
*ஆடிய ஞானத் திறனுற லான்ஞா னாசிரி யனு,நீயென்*
*றான்றோர் பலரும் புகழப் படுபவ! வகில மெலாஞ்சென்று*
*கூடிய புகழ்சால் குன்றத்தூரன்! கொட்டுக சப்பாணி*
*கொற்றச் சேவையர் காவல! நாவல! கொட்டுக சப்பாணி.* 4

## முத்தப் பருவம்

௬. *நிலஞ்சார் தெய்வக் கற்பகமே! நிமல ஞான வாரிதியே!*
*நீடுஞ் சைவப் பெருவாழ்வே! நிலவா நின்ற குணக்குன்றே!*
*வலஞ்சார் பெருநா வலரேறே! மாறா வருட்சிந் தாமணியே!*
*மதிப்பார் மதிபு ளெழுஞ்சுடரே! வாழ்த்து வார்தம் பெரும்பேறே!*

புலஞ்சார் பத்தி விளைநிலமே! போக்கு வரவில் பூரணமே!
புந்திக் கினிக்குஞ் சுவையமுதே! போற்றி யினிமே லொருதாயர்
கலஞ்சார் முலைப்பா லருந்தாத கனிவாய் முத்தந் தருகவே,
கனகக் குன்றை யனக!செழுங் கனிவாய் முத்தந் தருகவே. 5

## வாரானைப் பருவம்

ஏ. நீடுமின் பரிவையர் புணர்ப்பென்ம ரும்,மைந்து
நிகழ்ந்த முங்கெடுதலே
நிலவுமின் பென்மருங், குணமூன்று மொழிதலே
நிரம்பலுறு மின்பென்மரு,
நாடுமின் பிருவினைக் கேடென்ம ரும்,மல
நசித்தலே யின்பென்மரு,
நவில்விக்கி ரகநித்த மின்பென்ம ருந்,தோன்று
ஞானமே யின்பென்மரும்,
பாடுமின் புயிர்கெடுத லென்மரும், பகுதிமேற்
கெடுதலே யின்பென்மரும்,
படுசித்தி யின்பென்ம ரும்,பிறரும் வாதம்
படர்ந்துவரு திறனற,வளங்
கூடுசெந் தமிழருமை யறிபெருஞ் சேவையார்
குலசிகா மணி!வருகவே
கொன்றைச் சடாடவியர் மன்றைப் பரவியெழு
குன்றைப் பிரான்!வருகவே. 8

## அம்புலிப் பருவம்

அ. துறையுடைய பாம்பொன் றெடுத்துண் டுமிழ்ந்திடக்
குலைகுலைந் துழலவை, யெங்கள்
கோமான் பெருங்கல்வி யாட்சியை யுணர்ந்துசெங்
குருமணிச் சூட்டுமோட்டு
நிறைவுகெழு துத்திப் பணுடைவிப் பாம்பொன்று
நேரடைய மன்றுணுறு ;
நினையீன்ற தொருபாவை ; யிலகுவே பாரமென
னென்னுனைத் தனையுமெண்ணேன்
முறையினொரு சிறுதூக்கி னேழுபாவை யும்புக
முடித்துற நிறுத்தானிவன் ;
மொழியெங்க டம்பிரான் வல்லபமுணர்ந் திலைகொன் ?;
முத்தமா ளிகைவானயாற்
றறைமணித் திடராய குன்றைநக ராளியுட
னம்புலீ ! யாடவாவே
யருளுருத் தேசுபொலி யருண்மொழித் தேவனுட
னம்புலீ ! யாடவாவே. 6

## சிற்றிற் பருவம்

௯. அலைக்கும் புனல்சூ ழம்பலத்தி லாடும் பெருமா னருள்பெற்று
லவன்செய் தொழிலோ ரைந்துண்டு, வமைந்த தொழிலோ மேற்கோட ?
னிலைக்குங் கடையென் றொழிதனையோ! நினையா திற்கு மனுக்கிரக
நீயே யதுசெய் யாவிடினெங் கிரப்பு நீக்கு பவரியாரே ?
மலைக்கும் பிறவிப் பிணிமருந்தே! வாழ்த்து வார்சிந் தாமணியே !
வயங்குஞ் சைவப் பெருவாழ்வே! மாறாக் கருணை மாக்கடலே !
சிலைக்குந் தமிழ்த்தண் டகநாடா! சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா! சிற்றில் சிதையேலே. 10

## சிறுபறைப் பருவம்

௧௦. கனிவி லெமைப்பொரு வார்களு நெஞ்சு கரைந்துகரைந் துருகக்,
காமரு பத்தியும் வயிராக் கியமுங் கவினக் குதிகொள்ளத்,
தனிவில்பொன் மேருவெ னக்கொடு திரிபுர தகனம் புரிபெருமான்
றயங்குபொ னம்பல நின்றுபல் லோரஞ் சலிசெய நடநவில
கனிவி லிடும்புகழ் மிகுசம் பந்தரு நாவுக் கிறையவரு
நாவலர் கோவுஞ் சிரகர கம்பித நன்கு புரிந்தருள
முனிவி றமிழ்க்கவி பாடிய புலவன! முழக்குக சிறுபறையே
முழுமணி மாடக் குன்றத் தூரன்! முழக்குக சிறுபறையே. 8

## சிறுதேர்ப் பருவம்

௧௧. மருவாய் நறுந்தா தகித்தொங்கல் வளவர்கோ மகனுட னிவர்ந்திரு கையு
மணிக்கவரி வாங்கிவீ சக்கற்ப கப்பூ மகிழ்ந்துவா னுடர் தூற்றப்
பெருவாய் திறந்துபட கம்பேரி முதலாம் பெரும்பணை யெலாமுழங்கப் [தக்
பிறங்குமூவா யிரவர் முதலியோர் மறையொலி பிறங்கத் தொடர்ந்துபோ
கருவா யுறுமற்றை யாருந் தலைக்குமேற் கைகுவித் தேத்தி மேவக்
கருதும் புராணமுடி விற்குஞ் சாதநில கடத்திவர்ந் தோங்கு தில்லைத்
தெருவா யுலாப்போது சேவையர் குலாதிபன! சிறுதே ருருட்டி யருளே
சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்தினோன்! சிறுதே ருருட்டி யருளே.



# சேக்கிழார் செய்யுளணிக் குறிப்புக்கள்

(எண்கள் பாட்டு எண்கள்)

அணி - அழகு என்பர். தமிழிலக்கணத்தை ஐந்தாகப் பகுத்து அவற்றில் இறுதியில் வைத்தெண்ணப்படுவது அணியிலக்கணம் என்பது மரபாம். உயர்ந்தோர் செய்யுட்கெல்லாம் இன்றியமையாதது அணி. "பொருட்கிடனாக உணர்வினின் வல்லோ ரணிபெறச் செய்வன செய்யுள்" என்பது சூத்திரம். எனவே தெய்வச் சேக்கிழார் பிரானருளிய - அன்று - அவருள் நின்று இறைவன் அருளிய - இப்புராணப் பெருங் காப்பியச் செய்யுட்கள் ஒவ்வொன்றும் ஒன்றும் பலவுமாகிய அணிகளுடையனவேயாம். வடமொழிக் காவியங்களுக்குப் பேருரை வகுக்கும் உரையாசிரியர்கள் ஒவ்வொரு பாட்டினும் அணிகள் எடுத்து வகுத்துக் காட்டுவர். ஆயின் இவ்வுரையில் மிகச் சில பாட்டுக்களில் மட்டும் அணிகள் காட்டப்பட்டுள்ளன. ஒவ்வொரு பாட்டுக்கும் அணிகள் காட்டிச் செல்வதற்குரிய அறிவும் ஆற்றலும் போதிய காலமு மிடமும் பெறாமையின் அம்மட்டிற் காட்டி மேற்செல்ல நேர்ந்தது. ஆயினும் சேக்கிழார் செய்யுளணிகளில் ஒரு சிலவேனும் இவ்வுரையில் ஓர் பாகத்தில் ஒருசேரக் காட்டுதல் நலமென்று பெரியோர் பணிக்க, அதனைச் சிரமேற்கொண்டு இங்குச் சில குறிப்புக்கள் எழுதத் துணிந்தேன்.

தமிழில் உவமையணி ஒன்றேகொண்டு, அதற்கு உவமவியல் என ஓரியலும் வகுத்தனர் ஆசிரியர்தொல்காப்பியர். பின்னுளிற் தமிழிற் பெரும்பாலும் வடமொழி கலந்து வழங்கியதாக, வடமொழி அலங்கார சாத்திரமும் அவ்வாறே தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு வழங்கலாயிற்று. தண்டியலங்காரம், மாறனலங்காரம் முதலியவை வடமொழி அலங்காரங்களின் மொழிபெயர்ப்புக்களே. பின்னர் வந்த இலக்கண விளக்க நூலாரும் அவற்றை ஒட்டியே " தன்மை உவமை உருவக தீவகம் " என்ற சூத்திரத் திலே 35 அணிகளை உடன்படுத்தினர். இவற்றுட் பின்வருநிலை முதலிய சொல்லணிகளும், தீவகம் - நிரனிறை முதலிய பொருள்கோணிலை பற்றியவைகளும், பிறவற்றையும் ஒழித்து எஞ்சியனவற்றிற் பெரும்பகுதி உவம விசேடங்களேயாம்.

சிலேடை, ஒப்புமைக்கூட்டம், தற்குறிப்பேற்றம் முதலியவை உவம இயல் பினையே தாங்கி நிற்கின்றன. ஆர்வம், விரோதம் முதலியவாகக்கூறப்படும் சுவைகளை மெய்ப்பாடுகள் என வைத்து மெய்ப்பாட்டியலிற் கூறினர் ஆசிரியர் தொல்காப்பியர். பெரிய புராணத்திற்கு இலக்கணமாவது தொல்காப்பியமே. ஆயினும் திருஞானசம்பந்த சுவாமிகள் காலத்திற்கு முன்பிருந்தே வடமொழி யாட்சிகள் பல தமிழில் விரவி வழங்கினவாதலின் ஆசிரியர் சேக்கிழார் அதனைப் பின்பற்றியே நூல்செய்து பல அணிவகைகளையும் மேற்கொண்டு கூறியருளினர். தண்டியலங்கார முடையார் தொல் காப்பியரைப்பெரும்பாலும் தழுவியே உவமைகளை வகுத்துள்ளார். அதனுட் கூறிய வற்றையும் உடன்பட்டு இப்பகுதியிற் கண்டவற்றுள் இங்குச்சில அணிகளுக்குமட்டும உதாரணங் காட்டபபடுகின்றது. இவ்வகையில் வல்ல பேரறிஞர்கள் பின்னும் முயன்றால் எல்லா அணிகளுக்கும் இந்நூலினின்றே உதாரணங் காட்டலாம். வல்லார் அது செய்து உதவுவார்களாக.

**சொல்லணிகளுட் சில :—**

1. கரும்பல்ல நெல்லென்னக் கமுகல்ல கரும்பென்ன—65.
2. பண்டரு விபஞ்சி—82.
3. மாடு போதகங்கள்—83.
4. வீதிகள் விழவினார்ப்பும்—(84) முதலிய பாட்டுக்களுட் காண்க.

**பொருளணிகளுட் சில:—**

I தன்மை:—(அ) பொருட்டன்மை. 1. உலகெலா முணர்ந் தோதற் கரியவன்—1. 2. வாரிசொரியும் கதிர்முத் தும்—492.

(ஆ) தொழிற்றன்மை:—எய்துமென் பெடை யோடு—304.

II உவமை:—1 தொழிலுவமம் - அல்லது வினையுவமம் -

1. மாக்கள் சிந்தையுட் சார்ந்து நின்ற, பொங்கியவிருளை யேனைப் புறவிருள் போக்குகின்ற செங்கதிரவன் போனீக்குந் திருத்தொண்டர் புராணம்—10.

2. திரிமுகக்கார்தஞ் சேர்ந்த வல்லிரும் பணையுமாபோல் வள்ளலுங் கடிது சென்றான்—196.

3. ஈன்றவான் கனைப்புக் கேட்ட கன்றுபோற் கதறி நம்பி—214.

4. கதிர்மணி பிறந்த தென்ன வுருத்திர கணிகைமாராம் பதியிலார் குலத்திற் றோன்றி—278.

5. மடவார் செய்த சைத்யோபசாரம் அழலின நெய்சொரிந்தாலொத்தன—319.

2. ஏதுவுவமம்:—இன்ன காரணத்தால் இது இதனை ஒக்கும் என்பது.

1. அண்ணல் வீற்றிருக்கப் பெற்றதாதலின்......புண்ணியந் திரண்டுள்ளது போல்வது—12.

2. வையகம் பல்லுயிர் வளர்த்து நாடொறும், உய்யவே சுரந்தளித் தூட்டு நீரதாதலின் காவிரி செய்ய பூமகட்குச் செவிலி போல்வது—53.

3. வரைதரவந்த மேன்மையால், எண்ணில் பேறறங்களும் வளர்க்கு மீகையால், காவிரி, ஆளுடைநாயகி கருணையின் ஒழுக்கம் போன்றது—56.

4. மலர் நீரால் வழிபட்டு, எண்ணில் சிவாலயத்து எம்பிரானை யிறைஞ்சலின் காவிரி, உம்பர் நாயகர்க் கன்பரும் ஒக்கும்—57.

5. நீற் றொளியால், நிறை தூய்மையால், அஞ்செழுத் தோசை பொலிதலால், தேவாசிரியன் ஆயிரம் பாற்கடல் போல்வது—138.

6. ஆர்த்த வெள்வளைகளாலும், குழைமகரத்தாலும், ஒளிமணிகளாலும், நீர்த்தரங்கத்தாலும், திருமண வெழுச்சி கடல் கிளர்ந்தது போன்றது—168.

7. உயிர்கட்கெல்லாந் தூய்மையும், இன்பமும், தண்மையும் தந்து போதலின் வெண்ணீற்றின் பேரொளி போன்றது நிலா—308.

3. உருவுவமம் அல்லது பண்புவமம்:—நிறம் முதலிய பண்புபற்றிய ஒப்பு.

1. பொன்னின் வெண்டிரு நீறு புனைந்தெனப் பன்னு நீள்பனி மால்வரைப் பாலது கயிலைத் திருமாமலை—11.

2. கண்ணிடை கரந்தகதிர் வெண்பட மெனச்சூழ், புண்ணிய நுதற்றிருநீறு பொலிவெய்த—175.

3. தண் மதி முதிர்ந்து கதிர் சாய்வதென மீதே, வெண்ணரை முடித்தது விழுந் திடை சழங்க—175.

4. மைபொதி விளக்கே யென்ன மனத்தினுட் கறுப்பு வைத்துப், பொய்த்தவ வேடங் கொண்டு—473.

4. ஐயவுவமம் :—உவமையும் பொருளுந் துணிவுறாது ஐயப்படக் கூறுவது. ஐயம் - பலதலையாயவுணர்வு.

1. மானினம் பிணையோ—280-என்ற பாட்டிற்காண்பன ஐயவுவமையின்பாற்படும்.

2. கற்பகத்தின் பூங்கொம்போ காமன்றன் பெருவாழ்வோ—286.

3. ஓவிய நான்முகனெழுத வொண்ணுமையுள்ளத்தான
மேவியதன் வருததமுற விதித்ததொரு மணிவிளக்கோ—287.

4. முன்னேவந் தெதிர்தோன்று முருகனோ?......மாரனோ? முதலியன—290.

(286—287—290-பாட்டுக்கள் ஐயம் என்ற அகப்பொருட்டுறையில் அமைந்தன. இவற்றை ஐயவுவம அணிபெற அமைத்த அழகும் காண்க).

5. சிலேடையுவமம்:—சொற் பொதுமையால் ஒப்புமை கூறுதல்.

1. மாலினுந் திச்சுழி மலர்தன் மேல்வருஞ், சால்பினுற் பல்லுயிர் தருதன் மாண்பினுற், கோலநற் குண்டிகை தாங்குங் கொள்கையால், போலுநான் முகனையும் பொன்னி மாநதி—54.

2. ஓங்கி - நிகரின்றி மிக்கு - வெண்மையுண்மைக் கருவினும் வளத்தவாகி - சுருள் விரித்து - அரனுக்கு அன்பர் ஆலின சிந்தைபோல அலர்ந்தன கதிர்கள்—71.

3. கலன்கள் விரவலால் - பேரொலியால் - பலவாறு மடுத்தலால் - ஆரூர் வீதிகள் அளக்கர் போன்றன—94.

4. நான்மறை நாதம்பயின்ற பண்புமிக - வெண்கொடியாடுஞ்சீர் - நாவொலி - திசைகளுன்கெதிர் புறப்படல் - இவற்றால், அயன் பொற் சதுர்முகங்கள் எனலாயின தில்லைத் திருவாயில்களுன்கு—248.

6. தற்குறிப்பேற்ற உவமம்:—

1. வித்தகர் தன்மைபோல விளைந்தனசாலி—72.

2. இஞ்சித் தண்கிடங்கு (அகழி) சூழுங்காட்சி, சிலம்பொலி போற்று நான்மறைப் பதியைநாளும் வணங்கக் கடல்வலங்கொள்வதுபோற் புடைசூழ்வது போன்றது—241.

3. அனங்கன்மெய் தனங்க ளீட்டங் கொள்ளமிக் குயர்வ போன்று கொங்கை மிக் குயர்ந்தன—282.

7. உண்மையுவமம்:—முதலிற் கண்டு கருதியது உண்மையன்று. இதுவே உண்மை - என்ற குறிப்புடன் ஒப்புமை கூறுவது.

1. கரும்பல்லநெல் - கமுகல்ல கரும்பு - அரும்பல்ல முலை - அமுதல்ல மொழி - என வருவன—65.

8. நிந்தையுவமம்:—உவமானப்பொருளின் உயர்வைத்தாழ்த்திக் கூறுவது போலக்கூறி உவமேயததின் உயர்வு தோன்றக்கூறுதல்.

1. சூதும் பங்கயமுகையுஞ் சாய்த்துப் பணைத்தெழுந்து—167.

2. கொங்கை கோங்கரும்பை வீழ்ப்ப—282.

9. இல்பொருளுவமம்:—அபூதவுவமை என்பர் வடநூலார்.

1. புண்ணியத்தின் புண்ணியமோ, புயல்சுமந்து விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ—286.

2. பொன்றிகழ் குன்று வெளளிப் பொருப்பின்மேற் பொலிந்ததென்ன—434.

3. அருகு நாப்ப ணறிவருங் கங்குற்ன, கருகு மையிரு ளின்கணங் கட்டுவிட்டுரு கின்றது போன்றது—454.

4. வண்ணநீடிய மைக்குழம்பாமென்று—455.

10. மெய்யுவமம்:—வடிவு பற்றிய ஒப்புமை.

1. காவிரி, மாதர் மண்மடந்தை பொன்மார்பிற் றூழ்ந்ததோர், ஓதநீர் நித்திலத் தாமமொக்கும்—52.

2. பஞ்சின் மெல்லடிப் பாவைய ருள்ளமும், வஞ்ச மாககடம் வல்வினையும்,அரன் அஞ்செழுத்துமுணரா அறிவிலோர், நெஞ்சுமென்ன இருண்டது நீண்ட வான்—305.

11. தொகையுவமம்:—பொதுத தன்மை மறைந்து நிற்க வருவது.

மயிலியலின் இன்றொண்டைச் செங்கனிவா யிளங்கொடி—293.

12. பலவிரவிய உவமம்:—"விரவியும் வரூஉ மாபின வென்ப" என்ற தொல்காப்பிய விதிப்படி உவமஞ் செய்யும்வழி மேற் காட்டியவாறு ஒன்றேயன்றி இரண்டும் மூன்றும் விரவி வருதலும் மரபாம்.

(அ) ஏதுவுவமமும் சமுச்சய உவமையும் சிலேடையும் விரவிய கலவையணி.

"ஐயர் வீற்றிருக்கும் தன்மையினாலும், அளப்பரும் பெருமையினாலும், மெய் யொளி தழைக்கும் தூய்மையினாலும்" அநபாயன் திருமனம் போல ஓங்குவது திருக் கயிலாயமலை—22.

(ஆ) மெய்யும் தொழிலும் பற்றிய உவமம்.

1. கைதை, துன்றுநீறுபுனைதொண்டர்களென்னத தூயநீறுபுனை மேனியவாகிச் சென்று சென்று முரல்கின்றன—242.

2. விற்புரை நுதலின் வேற்கண்—285.

3. எரிதளிர்த்த தென்ன நீண்ட மின்னொளிர்சடை—369.

4. எரிதுள்ளி னலென வெகுண்டான்—527.

(இ) மெய்யும் உருவும் தொழிலும் பற்றிய உவமம்.

எரியினிடைத தோய்ந்த செவவண்ணக் கமலம்போல் முகம்புலர்ந்து—124.

(ஈ) தொழிலும் பயனும் பற்றி வந்த உவமம்.

பாசப் பழிமுதல் பறிப்பார் போலக் குழிநிரம்பாத புன்செய்க் குறும்பயிர் தடவி பறித்தார்—460.

(உ) உவமமும் சிலேடையும் கலந்த கலவை யணி.

கங்கையாம் பொன்னியாங் கன்னி நீத்தம்—55.

III உருவகம்:—"உவமையும் பொருளும் வேற்றுமை ஒழிவித, தொன்றென மாட்டினஃ துருவகமாகும்" என்ப.

1. மறைச் சுரும்பு—241. 2. மின்னமுதத்தினை—304.

உவமஉருவகம்:—

கயிலை உலகமாகிய கொடியின் மேற்பூத்த வெண்மலர் போல்வது—18.

IV தற்குறிப்பேற்றம்:—1. கடலைக் கடந்து அமுதத்தினைக் காட்டுவன் என் பது போலச் சூரியன் கடல்புக—304.

2. சிறடிமே னூபுரங்க ளறிந்தனபோற் சிறிதளவே யொலிப்ப—316.

3. திருமணக் கோலங் காணக் - காமுறு மனததான் போலக் கதிரவ னுதயஞ்செய் தான—158.

4. வன்றொண்டர் வருகதினால், இருமருங்குலார்க்கியார் பிழைப்பாரென்று, கங்கு னங்கை முன்கொண்ட புன்முறுவல் என்ன - வெண்ணிலா முகிழ்த்தது—306.

இன்னும் இவை பற்றி எனது "சேக்கிழார்" என்ற நூலிற் (121-ம் பக்கம் முதல் 142-ம் பக்கம் வரை) கூறியுள்ளவையும் பார்க்க. அணிகள் எவையேயாயினும் சேக் கிழாரது கைப்பட்டபோது அவை சிவப்பொலிவுற்றுப் பததிச் சுவையே காட்டுவன.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## இந்நூலின்

## திருமலைச் சருக்கம் - தில்லைவாழந்தணர் சருக்கம் - இவைகளிற் கண்ட

# பெயர் விளக்கம்

(இலக்கங்கள் பாட்டின் வரிசை எண்களைக் குறிக்கும்.)

**அகத்தியர் (52)** - இப்பதத்திற்குப் பொருள் விந்தமலையை அடக்கியவர் என்பதாகும். சப்த இருடிகளுள்ளும் சிரேட்டர். கும்பதினின்றும் பிறந்தவர் என்ப. தேவர்களை வருத்திய விருத்திராசுரன் தேவேந்திரனுக்குப் பயந்து கடலில் ஒளித்துக் கொள்ளத் தேவர்களின் வேண்டுதலுக்கிணங்கிக் கடல்நீரை ஆசமனஞ்செய்து அவனை வெளிப்படுத்திக் காட்டியவர். தென்றிசை நோக்கி வருகையில், தாம் பொதியமலையடைந்து திரும்பி வரும்வரை விந்தமலையினைப் பணிந்தேயிருக்க எனப் பணித்து அதன் அகங்காரத்தை அடக்கியவர். இராமபிரானுக்கும், பல விருடிகளுக்கும் சிவதீக்கைசெய்து உண்மையுபதேசங்கள் செய்தவர். சிவபெருமான் பார்வதிதேவியாரைத் திருமணம் செய்தகாலத்துத் தேவர் முதலிய யாவரும் வடதிசையிற்சேரத் தென்றிசை உயரவே அதனைச் சமனுக்குதற்பொருட்டுச் சிவபெருமான் ஆணையின்படி தென்றிசை நோக்கிவந்து பொதிய மலையிலே தங்கியுள்ளார். காவிரியாற்றைத் தென்றிசைக்குக் கொணர்ந்தவர். முருகக்கடவுளிடமும் சிவபிரானிடமும் தமிழுபதேசம் பெற்றவர். தமிழ்த் தலைவர் - தமிழ்முனி - என்பர். தமிழ்ச்சங்க மிருந்து தமிழாராய்ந்தவர். இவர் செய்த நூல் அகத்தியம் முதலியன. இவர் பெருமை நோக்கி "ஆதிமாதவமுனி அகத்தியன்" என்றார் ஆசிரியர். "நீண்ட தமிழா லுலகை நேமியினளந்தான்" என்றார் கம்பர். மலையுருக இசைபாடியவர். இராவணனைக் கந்தருவத்தாற் பிணித்தவர்.

**அங்கம் - ஆறங்கம் (354)** - வேதாங்கங்கள் எனப் பெறும். அவை **சிக்கை - வியாகரணம் - கற்ப சூத்திரம் - நிருத்தம் - சந்தோவிசிதி - சோதிடம்** என ஆறும். இவற்றுள் சிக்கை எனபது பாணினியாலியற்றப் பெற்றது. இதனுள் வேத லோக சப்தங்களிரண்டுக்கும் இலக்கணம் கூறப்பட்டன. வைதிகப் பிரகரணம் ஒரு தனிப் பகுதி. **வியாகரணம்** - இதற்குப் பாணினி முதலியோர் கர்த்தாக்கள்; காத்தியாயனரும் பதஞ்சலியும் வியாக்யானம் செய்திருக்கின்றனர். இதனுள் வேத சப்தங்களின் பிரகிருதி பிரத்யய ஞானம் விரிவாகப் பேசப்பெற்றுள்ளதென்ப. **கற்ப சூத்திரம்** - ஆச்வலாயனர் - காத்யாயனர் - ஆபஸ்தம்பர் - போதாயனர் - வைகானஸர் - த்ராயாயனர் - பாரத்வாஜர் - சத்யாசாடர் - ஹிரண்யகேசி முதலியவர்கள் ஆசிரியர்களாவார். இது யஞ்ஞகர்மங்கள் ஆற்றும் வழியினைப் போதிக்கும். **நிருக்தம்** - இது வேத சப்த நிகண்டு. இதன் ஆசிரியர் பாஸ்கமரிஷி என்பவர். **சந்தோவிசிதி** - இதன் ஆசிரியர் பிங்கல முனிவர் என்பவர். வேதத்திற் கூறப்பட்ட காயத்திரி முதலிய சந்தங்களினிலக்கணங்களை விளக்கும். **சோதிடம்** - இதற்கு ஆதித்யாதியர் கர்த்தாக்கள். வைதிக கர்மங்களைத் தொடங்குவதற்கேற்ற காலநிர்ணயங்களையும் அவற்றின் பலன்களையும் தெரிவிக்கும்.

**அணுக்கன்றிருவாயில்** (250)-தில்லையில் நடேசப்பெருமான் சந்நிதியின் முற்றிரு வாயில். இஃது பேரம்பலத்தினின்று மேனோக்கிச் சிற்றம்பலத்துக்குக்கொண்டு சேர்க் கும் வாயில்களிலே சிற்றம்பலத்தினை அடுத்து நிற்கு நிருவாயில் என்ப.

**அதிகைவீரட்டானம்** (228 - 234) - இது நடுநாட்டுச் சிவத்தலம். கெடில நதி யின் வடகரையிலுள்ளது. வீரட்டானங்கள் எனப்படும் எட்டுத் தலங்களில் ஒன்று. இதில் திரிபுரதகனம் செய்த வீரம் நடைபெற்றதாம். அப்பர் சுவாமிகளை ஆட் கொண்ட தலம். விரிவு தலவிசேடம் (பக்கம் - உ௬க) காண்க.

**அநபாயன்** (8 - 22 - 83 - 98 - 404) - **பேரம்பலம் பொன்னணிசோழன்** (8)- **அபயன்** (22)-அநகபாயன்(திருக்குலம்)(404)-இவரது அமைச்சராகிய சேக்கிழார் பெரு மான் இவரது வேண்டுகோளின்படி இத்திருத்தொண்டர் புராணமியற்றினர். இதனை இவர் கேட்டு அரங்கேற்றுவித்துச் செப்பேடு செய்து 12-வது திருமுறையென வகுத்த னர். புராணம் பாடுவித்த நன்றியின் பொருட்டு இவர் ஆசிரியரால் புராணத்தினுட் பன்னிரண்டிடங்களிற் பாராட்டப்பெற்றுள்ளார். உமாபதிசிவாசாரியார் - மாதவச சிவஞான சுவாமிகள் முதலிய பல பெரியோர்களாலும் பாராட்டிப் போற்றப்பட்டவர். பேரம்பலமுந் திருவெல்லையும் பொன்மயமாக்கியவர். திருநீற்றுச்சோழன் முதலிய பெயர்களால் விளங்குபவர். இவர் காலம் 800 ஆண்டுகளின் முன் என்பர். இவர் சரித விரிவு திருத்தொண்டர்புராண வரலாற்றினும், அரசாங்க கல்வெட்டுப் பரி சோதன அறிக்கைகளினும், எனது "**சேக்கிழார்**" என்ற நூலினும் கண்டுகொள்க.

**அநிந்திதை** (34) - திருக்கைலாயத்தில் உமாதேவியாருக்குப் பணி செய்யும் இரண்டு சேடிமார்களில் ஒருவர். இவர் சங்கிலியாராக அவதரித்தது திருவொற்றியூரிற் கன்னிமாடத்திருந்து திருப்பணி செய்தவர். ஆளுடைய நம்பிகளிடம் பிரியா வகைக்கு ஒரு சபதம் பெற்று, மணந்து, மீண்டும் கயிலையடைந்தவர். திருமலைச் சிறப்பு, தடுததாட் கொண்ட புராணம், ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம், வெள்ளானைச் சருக்கம் முதலியவற்றுள்ளும், நம்பிகள் தேவாரங்களுள்ளும், இவர் சரித விரிவு கண்டு கொள்க.

**அரசு - உடைய அரசு - உழவாரப் படையாளி** (229) - அப்பர் சுவாமிகள்.

**அருட்டுறை** (211) - திருவெண்ணெய்நல்லூர்ச் சிவாலயத்தின் பெயர்.

**அரம்பையர்** (19 - 245) - தேவேந்திர சபையின் ஆடற்பெண்கள். தேவமாதர்.

**அரவுலகு** (284) - நாகலோகம்.

**அருந்ததி** (363) - கருதத முனிவர் புதல்வி. வசிட்டரது மனைவி. கற்பிற் சிறந்த வள். கருநிறம் இயைந்த செந்நிற முள்ளவளாய் யாவருங் காண நட்சத்திர பதம் பெற் றவள். உலகவர் மணஞ் செய்து கொள்ளுங்காற் கற்பிற்கு இலக்கியமாக மணமகன் மணமகளுக்கு இவளைக் காட்டுதல் மரபும் மணச் சடங்குகளில் ஒன்றுமாம்.

**அமர்நீதி நாயனார்** (501 - 526) - அறுபான்மும்மைத் தனியடியாருள் ஒருவர். அப்பர் சுவாமிகளாலும் பாராட்டிப் பேசப் பெற்ற பெருமை யுடையவர். சரிதச் சுருக் கம் காண்க. (பக்கங்கள - ௬அ௬ - ௬அஎ - ௬அஅ.)

**அம்பர் மாகாளம்** (262) - இது சோழ நாட்டுத் தலங்களி லொன்று. அரி சொலாற்றின் கரையிலுள்ளது. மாகாளர் பூசித்ததும் சூரபதுமன் தங்கையாகிய அச முகியைக் கைகுறைத்ததுமாகிய தலம். தலவிசேடம் (பக்கம் - ௩௯௩) காண்க.

**ஆரூர்** (43 - 126 - 254 - 274 - 297 - 496) - தலவிசேடங் காண்க (பக்கங்கள் - க௬௩ - க௬௪.)

**ஆரூரண்ணல்** (358) - திருவாரூரில் எழுந்தருளியுள்ள தியாகேசப் பெருமான.

**ஆலால சுந்தரர்** (32 - 146) - இப்பூவுலகில் அவதரிக்கு முன்னும், அவதாரத் தின் பின்னும் கயிலையில் உள்ள நிலையில் சுந்தரமூர்த்தி சுவாமிகளது பெயர். அங்குச் சிவபெருமானுக்குத் திருமாலை திருநீறு எடுத்தேந்தும் பணி செய்யும் அணுக்கத்

தொண்டர். தேவருமசுரரும் அமிர்தம் கடையுங்கால் எழுந்ததும் திருமால் முதலிய தேவரும் எதிர் நிற்க வியலாததும் ஆகிய கொடிய ஆலகால விடத்தைத தன் கையிலேந்திச் சென்று சிவபெருமானிடம் கொடுத்தவர்.

**இசைக்கலைப் பெயர்கள்** (221 - 222) - **இந்தளம் - முதல் - மும்மை - கிழமை - இசை - பாணி.**

**இசைஞானியார்** (149) - சுந்தரமூர்த்தி சுவாமிகளின தாயார். சடையனார் மனைவி. அறுபத்துமூன்று நாயன்மார்களில் பெண் அடியார்களுள் ஒருவர். கமலாபுரத்தில் (திருவாரூர்) சிவகோதம கோத்திரத்தில் ஞானசிவாசாரியார் குடும்பத்தில் அவதரித்தவர் எனப.

**இந்திரன்** (137) - **புரந்தரன்** (19—126) - (தேவர்களைக் காப்பவன்) - **இந்திர தெய்வதம்** (62) - **சதமகன்** (249) - தேவர்களுக்கு அரசன், மருத நிலத தெய்வம். வயல்களில் நாறு நடுவதற்குமுன தொழப்படும் பேறுடையோன். மழைக்காக உலகத்தவரால் செய்யப்படும் விழா வேற்பவன. நூறு அசுவமேதயாகம் செய்து இந்திர பட்டத்தை எய்தியவன். இந்திரன் - மேலான ஐசுவரியமுடையோன்.

**இயமன் - மறலி** (113) - **காலன்** (338) - அட்டதிககுப் பாலகர்களில் தென்றிசைக்குரிய தேவன். காலன் - காலம் அளந்து உரிய காலததில் வருபவன். தருமன் - தருமராசன் எனவும் பலவாறு பெயர் பெற்றவன்.

**இயற்பகை நாயனார்** (403 - 405 - 409 - 410 - 424 - 430) - அறுபான்மும்மைத தனியடியாருள் ஒருவர். பெருங்குடி வணிகர். அடியவர்கள் எது வேண்டினும் இல்லையெனாது கொடுப்பவர். தன் மனைவியையும் ஒரு சிவனடியாருக் கீந்த செயற்கரிய செயலினைச் செய்த தீரர். சரிதச் சுருக்கங் காண்க (பக்கம் - ௱௪௧).

**இயற்றமிழ்** (51) - இயலிசை நாடகம் என்னும் முத்தமிழின் ஒன்று. தமிழிலக்கியங்களிற் செய்யுளும உரைநடையுமாக இயல்வது, (பக்கம். ௯௩ - பாக்க.)

**இலக்குமி - மாமலராள்** (86) - **வரமலர் மங்கை** - (279) - **திரு** - (364) - மகாவிட்டுணுவின தேவியார். திருவாரூரில் சிவபெருமானை நோக்கித் தவங்கிடந்து மங்கிலியங் காததுக் கொண்டவர்.

**இளையான்குடி** (440) - **இளசை** (439) - இது மாற நாயனார் அவதரித்த திருத தலம். இதனாலே அவருக்கு இளையான் குடிமாற நாயனார் என்ற திருநாமமும் வந்தது. தலவிசேடங் காண்க (பக்கம் - ௱௪௮, ௱௯௭).

**இளையான்குடி மாற நாயனார்** (440) - அறுபான்மும்மைத் தனியடியாருளொருவா. சரிதச் சுருக்கம் காண்க (பக் - ௱௭௯.)

**உபமன்னிய முனிவர்** (23 - 24 - 25 - 29 - 47) - சிறநத முனிவர். வியாக்கிரபாத முனிவரது புதல்வர். இவர் பாலனையப் பாலுக் கழுதபோழ்து சிவபெருமான் தந்த பாற்கடலுண்டு வளர்ந்தவர். சிவன்றன்னையே தொழும் பான்மையர். கண்ணனுக்குச் சிவதீக்கை செய்தவர். ஆரூரர் வெள்ளையானையிலமர்ந்து மாலொடயனும் தேவர் முனிவரும் சூழக் கைலைக்குச் செல்லுங்கால் பேரொளியாகக் கண்டு தரிசித்துச் சுந்தரமூர்த்திகளது முன் பின் வரலாறுகளையும், அடியார் சரிதங்களையும் கயிலையில் முனிவர்களுக்கு அருளியவர். இவர் அருளிய வரலாற்றின்படியால் இததிருத்தொண்டர் புராண மியற்றப்பெற்றதாம். திருமலைச் சருக்கம் (47) பார்க்க.

**உமாதேவியார் - ஆளுடைய நாயகி** (32 - 57) - **மெய்த்தவக் கொடி** (42) - **எம்பிராட்டி** (44) - **ஏழுலகீன்றவள்** (44) - **தனிநாயகி** (241) - **அறம்பயந்தாள்** (257) - **பார்ப்பதி** (271) - **மலைவல்லி** (281) - **மாமலையாள்** (338) - **உம்பர் நாயகி** (407) - **இமக்குலக்கொடி** (405) - சிவபெருமானாது சத்தி. அவர் திருவுருவில் பாதியுருக் கொண்டவர். பற்பல வன்பர்களிடததுக் குழவியாய்த் தோன்றி, வளர்ந்து, பின்னர் இறைவனை மணந்து கொள்ளப் பெறறவர். இறைவனது அருள் சுரககும் கூறு. ஒருகாலததில்

பர்வத ராசனும் அவன் மனைவி மேனையும் புத்திரப் பேற்றிற்காகத் தவஞ் செய்தபோது இறைவனாணையின்படி குழந்தையுருக் கொண்டு சென்று அவர்களிடம வளர்ந்து வந்தமையால் " ஐமவதி " என்றும், பர்வதராசன மகளாக உபசரிக்கப் பெற்றமையின் " பார்ப்பதி " என்றும் அழைக்கப் பெற்றார். " குழந்தையாகி ஐந்து வயது நிறைந்த பருவத்திற் றவத்தில் விருப்பமுற்று அதனைத தாய் தந்தையர்க்குக் கூறியபோது (உ=ஓ, பெண்ணே !, மா=வேண்டாம் என்று) தடை செய்யப்பட்டமையின் இவருக்குப், பிரணவத்தின் (வியஷ்டி ரூபமாய் - வர்ணவியத்தியயத்தினால் எய்திய உ+ம்+அ) சொரூபமாகிய, உமை என்னுந்திருநாமம் எய்திற்று " - என்று ஸ்காந்தம் - சமபவகாண்டம் கூறும். மணப்பருவம் வரச், சிவபெருமான் அம்மையார் " கொண்ட தவங்கண்டு, குறிப்பினொடுஞ் சென்றவள் தன் குணத்தினை நன்கறிந்து விரும்பும்வரங் கொடுத்தருளி - வேட்டருளிச் செய்த"னர். மற்றும் பல சரிதங்கள் புராணங்கடோறும் காண்க. அடியார்களுக்கு வெளிப்படும்போதெல்லாம் உமையொரு பாகமாகவே இறைவன் வருவர். ஆசிரியர் சேக்கிழார் பெருமான் " ஆரணமு மூலகேழு மீன்றருளி - யனைத்தினுக்குங் காரணமாய் வளம்பெருகு கருணைதிரு வுருவான சீரணங்கு " எனவும், " அருட்கருணை தானுய திருவுள்ள முடைய தவவல்லி " எனவும் இன்னும் பற்பல படியும் வாழ்த்தியவற்றானும் பிறவாற்றானும் இவர் தன்மைகள் அறிக.

**எரிமூன்று** (354) - ஆகவனீயம், காருகபத்தியம், தட்சிணாக்கினி - எனும் வைதிக அக்கினி மூன்று.

**ஐந்தெழுத்து** (84) - **அஞ்செழுத்து** (305) - ஸ்ரீபஞ்சாக்கர மகாமந்திரம். இதனியல்புகள் நல்லாசிரியர்களை யடுத்து அறியத்தக்கன.

**ஐம்பூதம்** (16) - **பூதம்** (43) - **பூதமைந்து** (142) - நிலன் - நீர் - நெருப்பு - உயிர்ப்பு (காற்று) - விசும்பு எனபன.

**ஐந்துபேறிவு** (252) - ஐந்துவகையாக - ஐந்துவகைகளிலே - பெயர்கின்ற அறிவு. ஐம்பொறிகளின் வழியே சென்று ஐந்து புல(விடய)ங்களை அறிவதாதலின் ஐயறிவெனப்படும்.

**ஐயாறு** (45) - இது சோழநாட்டுக் காவிரியின் வடகரையிலுள்ள சிவதலங்களுளொன்று. நங்கள் காதலும் நந்திதவஞ் செய்தது. முனிவரும் தேவரும் பஞ்சாக்கர செபஞ் செய்து பேறு பெற்றதாற் "செப்பியேசம்" என்ற காரணப் பெயர் பெற்றது. வடமொழியிற் பஞ்சநதம என்று சொல்லப் பெறுவது. காவிரி, சுவாமிபாத கங்கை, தேவிகங்கை, இடபகங்கை, நந்திதேவருவகை இவ்வைந்து நதிகள் சேருமிடம். அப்பர் சுவாமிகள கைலைக காட்சி கண்ட தலம்.

**ஓசை ஐந்து** (215) - **ஐந்து** (245) - பஞ்சநாதம். தேவவாத்திய முழக்கு. தேவதுந்துபி என்பர். முதலிற் காளத்தி மலையேறும்போது திண்ணனார் இவை கேட்டனர். இக்காலத்தும் கொங்கு நாட்டில் வெள்ளிமலையின்மேல் தேவபூசை நடைபெறும் போது இரவில் இம்மலை உச்சியில் தங்கும் அன்பர் கேட்க முழங்குவன.

**கங்கை** (55 - 147 - 311 - 388 - 516 - 518) - பெருநதிகளில் ஒன்று. தேவருலகத்திலுள்ள எழு தீர்த்தங்களில் ஒன்று. மிகப் புனிதமுடையது. தனனுட் படிந்தாரைப் புனிதமாக்குவது. சிவபிரான முடியிலணிவது. பகீரதன் வேண்டப் பெருமானால் உலகிற்றரபபட்டது.

**கடவுள்** (76) - **பேதம்பேயர்(ச்சாலை)** (77) (பெரும் பெயர் - மகாவாக்கியம்)

**கமலாலயம்** - திருவாரூரிலுள்ள திருக்குளம். இது இலக்குமியால் உண்டாக்கப் பட்டதால் இப்பெயர் பெற்றது. திருமுதுகுன்றில் மணிமுத்தா நதியிலிட்ட பொன்னை ஆரூரர் சிவபெருமானருளினாலே இக்குளத்தின் வடகிழக்கு மூலையிலெடுத்துப் பரவை நாச்சியாருககுக் கொடுததனர். ஐநது வேலிப் பரப்புடையது.

**கமலினி** (34 - 277) - திருக்கயிலாயத்தில் உமாதேவியாரது இரண்டு சேடியரு ளொருவர். திருவாரூரில் பரவையாராக அவதரித்துச் சிவபெருமா னருளாற் சுந்தர மூர்த்தி சுவாமிகளை மணந்தவர். (பரவையார் காண்க.)

**கம்பையாறு** (44) - காஞ்சிபுரத்தின் தல நதி. இதன் கரையில் உமாதேவியார் சிவபூசை செய்தபோது திருவிளையாட்டாலே ஆறு பெருக, அம்மை முதல்வரைத் தழுவிக் கொள்ள அதனால் அம்மையாரது முலைத்தழும்பும் வளைத்தழும்பும் கொண்டனர் என்பது புராணம். இதன் கரையில் எழுந்தருளியவர் கம்பர். அவர் கோயில் "கம்பம்" எனப்படும். இந்நதி இப்போது நிலத்தின்கீழ் ஓடுகின்றது. (திருக்குறிப்பு - புரா - பார்க்க.)

**கயிலாயமலை** (11—22) - **கயிலை** (174) - **முதற் பெருங் கயிலை** (277) - சிவபெருமான் என்றும் எழுந்தருளி யிருக்கும் திருமலை. பனிவரை - திருமலை - பொன்மலை - வெள்ளிமலை - நொடித்தான்மலை - இமாலயம் என்றுஞ் சொல்லப் பெறுவது. பனியுறைந்து "பொன்னின் வெண்டிருநீறு புனைந்தென"த் திகழ்வது.

**கலுழன்** (18) - கருடன். விட்டுணுவுடன் செய்த போரில் தமது தவ வலிமையால் அவரைச் செயித்தவர். செயித்தபின் நீ கேட்ட வரம் நாம் கொடுப்போம் என்று பெருமிதங் கூற, விட்டுணு தமது ஊர்தியாக இருக்க வேண்ட, அவ்வாறே அவரது வாகனமாகியவர். மிக்க வலிமையுடையவர். புள்ளரசு எனப்படுவர்.

**கழுமலம்** (257) - சீகாழி காண்க.

**களிற்றுப்படி** (251) - யானைத் துதிக்கை வடிவினவாகிய திரணைகள் இரண்டு புறமும் அமைந்துள்ள ஐந்து படிகள். களிற்றுக்கை பிரணவத்தையும் ஐந்து படிகள் திருவைந்தெழுத்தையும் குறிப்பன. தில்லைத் திருச்சிற்றம்பலச் சபையில் நடராஜ மூர்த்தியைச் சாரச் செல்வதற்கு அமைந்த படிகள். திருவணுக்கன் றிருவாயிலைக் கடந்து சென்று அடையத்தக்கனவாய் நடராசருக்கு அடுத்துள்ளன. யானைத் துதிக்கை வடிவமுள்ள அத்திரணைகள் உயிர்ப்புற்றெழுந்து திருக்கடவூர் உய்யவந்த தேவ நாயனாருளிய திருக்களிற்றுப்படியார் என்னும் சைவ சித்தாந்த சாத்திர நூலினை நட்டப்பிரான் திருவடியிற் சேர்ப்பித்தன.

**கற்பகம்** (15 - 270 - 286) - தேவ உலகத்துள்ள தேவமரம். கேட்டது கொடுக்கும் தன்மை வாய்ந்த தென்பர்.

**காஞ்சி** (44) - காஞ்சிபுரம். திருவேகம்பம் என்று கூறப்படுவது. உமாதேவியார் தனித் தவஞ் செய்து வெளிப்படக்கண்ட திருக்கோயிலுடையது. பிரமனும் சரசுவதியும் பூசித்தது. இதன் விரிவு திருக்குறிப்புத் தொண்டர் புராணத்திற் காண்க.

**காவிரி** (52 - 59) - **பொன்னி** (54 - 404 - 502 - 516 - 518) - தென் இந்தியாவை வாழ்விக்க வந்த பெரியநதி. "பொன்னி" என்றும் அதற்குப் பெயருண்டு. கவேர ஆச்சிரமத்தின் வழிவந்தமையால் காவேரி என்னும் பெயராயிற்றென்ப. மேற்குத் தொடர்ச்சி மலைகளிற் குடகு நாட்டில் சையமலையில் உற்பத்தியாவது. தென்னாடு போந்த அகத்திய முனிவரது கமண்டலத்திருந்த இஃது, இந்திரன் வேண்டுகோளுக்கிணங்கிய விநாயகர் காக வுருக்கொண்டு வந்து கமண்டலத்தைக் கவிழ்க்கவே, நதியாய்ப் பெருகியது. அகத்தியர் வரத்தால் எல்லாத் தீர்த்தங்களும் வணங்கும் வரம் அடைந்து அகண்ட காவேரியெனப் பெயர் பெற்றது. உலகத்தார் பாபங்களைப் போக்குவது. "பொன்னி நன்னதி மிக்க நீர் பாய்ந்து புணரி தன்னையும் புனிதமாக்குவதோர் நன்னெடும்பெருந் தீர்த்தம்" என்று பாராட்டப்பட்டது.

**கிரியை** - சைவபாதங்கள் நான்களுள் ஒன்று. இது சற்புத்திர மார்க்கம். இதனியல்புகளைக் "கந்த வர்க்கமும் கிளர்மணப் புகையும் கவின்கொ ளுபமும் புனிதமஞ்சனமும், கொந்த விழ்ந்தநன் மலருமற் றுளவுங் கொண்டு மாயையின் குணங்களொன் றிலராய், ஐந்து சுத்திசெய் தகம்புற மிறைஞ்சி யங்கி யின்கடன் முடித்தருள்

வழியின், றிகத நற்பெருங் கிரியையன புடனே யியற்ற வல்லவ ரேம்மநுங் கிருப்பார்"- திருவாதவூரர் புராணம்.

**குபேரன் - நிதிமன்னவன் (246) - நிதிக்கிழவன் (465)** - சிவபெருமான்றோழர். அட்டதிக்குப் பாலகரிலொருவர்.

**குறட் பூதம் (16)** - சிவகணங்களாகிய பூதங்கள். "குண்டைக் குறட்பூதங் குழும" எனபது ஆளுடைய பிள்ளையார் திருவாக்கு. இவை என்றும் சிவபெருமானைச் சூழ்ந்து கொண்டு ஆடியும் பாடியும் திளைப்பன. அளவில்லா வலிமையுடையன. சிவபெருமான் இவைகட்கெல்லாம் நாதரானமையின் "பூத நாதன்" எனப் பெறுவர்.

**கெடிலம் (230—235) - தென்றிசையிற் கங்கை (235)** - நடுநாட்டில் ஓடும் ஒரு நதி. ஜீவநதி யெனப. தென்றிசையிற் கங்கையெனப் போற்றப்படுவது. இதன் வடகரையிலே திருவதிகை வீரட்டானம் உள்ளது.

**கொள்ளிடம் (230—256)** - ஒரு நதி. ஆங்கிலத்தில் Coleroon என்பர். சோழ நாட்டில் பாயவது. திருப்பராய்த்துறைக்குச் சமீபத்தில் காவிரியினின்றும் பிரிவது. இதற்குக் கலங் கொள்ளிடம் என்ற பழம் பேர் கல்வெட்டுக்களில் காணப்பெறு கின்றது. சோழ மன்னர்கள் கடலிலிருந்து தமது நாட்டிற்குள் மரக்கலங்கள் வரு வதற்காகக் கலம் கொள்ளத் தக்க அகலமும் ஆழமும் பெற அமைத்தனர் என்ப.

**கோலக்கா (260)** - இது சோழ நாட்டுத்தலம். சீகாழிக்கு மேல்பால் அரை நாழியளவிலுள்ளது. திருஞான சம்பந்தப் பெருந்தகையார் ஓசையுடைய பொற்று ளம் பெற்றுப் பதிகம் பாடிய திருத்தலம். தலவிசேடங் காண்க (பக் - ௩௧௧).

**கோவலூர் வீரட்டம் (467—472)** - இது நடுநாட்டுத் தலங்களிலொன்று. அந்தகாசுர சங்காரம் நிகழ்ந்தது. வீரட்டங்களிலொன்று. மெய்ப்பொருள் நாயனர் ஆட்சி செலுத்திய நகரம். கிருக்கு + ஓவல் + ஊர் = அறியாமையை ஒழித்து (உயிர் களுக்கு அருளபுரியும்) தலம் என்று தலமான்மியம் கூறும். தலவிசேடங் காண்க (பக் - ௬௦௩).

**சடங்கவி சிவாசாரியார் (153—154)** - சிவமறையவர். இவரது ஊர் புத்தூர். இவரது புதல்வியைச் சுந்தரமூர்த்திகட்குத் திருமணஞ் செய்து கொடுக்க இசைந்து பின்னர்ப் பெருமானல் தடுத்தாட் கொள்ளப் பெற்றமையால் மணம் தவிரவே, வன றொண்டர் திருவடிகளைத் துதித்துக் கதியெய்தினர். தடுத்தாட்கொண்ட புராணத்துச் சரிதங் காண்க.

**சடையனர் (149—153)** - அறுபான்மும்மைத் தனியடியாரு ளொருவர். சிவ மறையவர். ஆரூரருக்குத் தந்தை. இசைஞானிப் பிராட்டியாருக்குக் கணவர்.

**சாகுவதி - வெண்கொடி (243)** - பிரமனது தேவி. வெள்ளை நிறமும், வெண் கலையும் கொண்டு வெண்டாமரையில் வீற்றிருப்பவள். சகல கலாவல்லி.

**சரியை** - சைவ நாற்பாதங்களுள் ஒன்று. தாசமார்க்கம். "ஆவ லாலெமக் காமலர் மாக்க ளாக்க லம்மலர் பறித்தலம மலராற், றூவி லாவகை தார்பல சமைத்த றணைப்பி லெம்புகழ் சாற்றலன் புடனு, மேவு மாலய மலகிடன் மெழுகல் விளக்க னல்விளக் கிடுத லெம் மடியார்க், கேவ லானவை செய்தலிச் சரியை யியற்ற வல்லவர்க கெம்முல களிப் போம்" - திருவாதவூரடிகள் புராணம்.

**சாய்க்காடு (429)** - சோழநாட்டுத் தலங்களுளொன்று. காவிரிப்பூம்பட்டினத் திற் கருகிலுள்ளது. தலவிசேடங் காண்க (பக் - ௬௪௩).

**சிதம்பரம்** - காவிரிநதியின் வடகரையிலுள்ள தலங்களுள் முதன்மை பெறறது. "கோயில்" எனப் பெறுவது. புலிக்கால் முனிவர் - வியாக்கிரபாதர் - பூசித்தமையின் புலியூர் எனப் பெற்றது. தில்லையென்னும் மரமடர்ந்த காடாயிருந்தமையின் தில்லை வனம் எனவும் பெறும். சிவகங்கை, பரமானந்த கூபம், புலிமடு, வியாக்கிரபாத

தீர்த்தம் (இளமை யாக்கினுர் குளம்), அனந்ததீர்த்தம், நாகசேரி, பிரமதீர்த்தம், சிவப்பிரியை, திருப்பாற்கடல், குய்யதீர்த்தம் எனும் பத்துத் தீர்த்தங்களுடையது. "தில்லைவாழந்தணர்த மடியார்க்கு மடியேன்" என்று தியாகேசப்பெருமான் தமது திருவாக்கினுற் சிறப்பித்தருளிய அந்தணர்கள் வசிக்கும் தலம். பரம ஆசாரியமூர்த்திகளாகிய மணிவாசகப் பெருமான் பலகாலம் தங்கித் தவஞ்செய்து நடேசப் பெருமானுடன் இரண்டறக் கலந்தருளியதும், நந்தனுரெனுந் திருநாளைப்போவார் முத்திபெற்றதும், சமயாசாரியர்களும், சந்தானசாரியர்களும், நாயன்மார்களும் தொழுது பாடியதும் ஆகிய பல விசேடங்கள் கொண்டது. விராட்புருடனுடைய இருதயத்தானமாகியது. மற்றும் இதன் அளவிடற்கரிய பெருமைகளை இப்புராணத்தினுள் ஆங்காங்கு வருமிடங்களிலும், பல புராணங்களிலும், தக்கார்வாய்க் கேட்டும் தெளிக. தலவிசேடமுங் காண்க.

**சித்தவடமடம்** (229) - நடுநாட்டில் திருவதிகைவீரட்டானத்திற்கு வடமேற்கில் 3 நாழிகை யளவிலுள்ளது. பழமையாகிய பொதுமடம். இப்போது அவ்விடத்திலொரு சிவாலயமுண்டு. சிவபெருமான் நம்பியாரூரருக்குத் திருவடி தீக்கை செய்த மடம். அப்பர் சுவாமிகள் தேவாரத்திற் பாராட்டப்பெற்றது.

**சிவபெருமான் - சேயவன்** (8) (தழல்போற் சிவந்த திருமேனியுடையவன். செம்மை தருபவன். சிவன.) - **ஆதிதேவர்** (20) - **தம்பிரான்** (21 - 44 - 368) **பிஞ்ஞகன்** (21) (தலைக்கோலமுடையான்) - **சடையான்** (21) - **ஐயர்** (22 - 38 - 251); **சிவன்** (23 - 325 - 255) - **பூதநாதன்** (24) - **சம்பு** (29 - 90) (இன்பமாகுபவன்) - **மெய்ப்பொருளாகிய வள்ளல்** (31) - **ஈசன்** (36) - **ஆதிமூர்த்தி** - (37) - **அங்கணாளன்** (39) (அழகிய அருட்கண்ணுடையவன்) - **நித்தன்** (42); **மாதொர்பாகன்** (43 - 142) - **புராணன்** (48) - **எம்பிரான்** (58) - **பரமன்** (72) - **அரன்** (72) - **அகில காரணர்** (135) - **பூதநாயகர்** (136)-**அத்தர்** (140) - **தாண்டவப் பெருமான்** (145)-**அங்கணர்** (147 - 533) - **நாதன்** (164) - **மாலுமயனுக்குமரியார்** (174) - **நெற்றிவிழியான்** (182) - **யாவரையும் வேறடிமையாவுடைய எம்மான்** (183)-**பித்தன்** (186-187-219) **பேயன்** (187)-**துணைவனுர்** (188)-**அந்தணாளன்** (189) - (அந்தணன)-**பூவணத்தவர்** (189) - **இறைவன்** (191) - **பிறைசூடி** (220)-**தேவர்பிரான்** (224) - **நிருத்தனுர்** (227-352) - **தம்மான்** (234)-**கைம்மாவினுரியான்** (234)-**வந்தருவான்** (237) - **ஆடுகின்றவர்** (255)-**விடையான்** (258) - **பிரான்** (271) - **பரம்பொருள்** (271) - **பார்ப்பதிபாகன்** (271) - **கண்ணுதல்** (291) - **திருநடம் புரிவார்** (354) - **மலைமகள் கேள்வன்** (381) - **புண்ணியப் பொருளாயுள்ளான்** (385) - **எல்லையிலான்** (390) - **வேத முதல்வர்** (399) - **தேவர்கடேவர்** (401) - **சாதி வேதியர்** (413) - **வழித்துணை** (418) **சங்கரன்** (464)-(இனபம் செய்பவன்); **இடபவாகனன்** (464) - சைவ சமயத்திற் பேசப்படும் முழுமுதற் கடவுள். நிவிர்த்தி கலை முதலிய பஞ்சகலைகளுட்பட்ட ஐவகைச் சங்காரத்துள் இறுதிக் கண்ணதாகிய மா சங்காரத்தைச் செய்யும் வினைமுதலா யுள்ள முதல்வர். அவனவளது வென்று பகுதப் பலவாய்ச் சுட்டி யுணரப்படுஞ் சொல்லும் பொருளுமாய இருகூற்றுப் பிரபஞ்சத் தொகுதி சங்கார காலத்தில் ஒடுங்குதற்கு ஏதுவாய் நின்ற தன்னிடத்தினின்றும், சகசமல நீங்காமையால், அது நீங்குதற் பொருட்டுமீளத் தோன்றுமாறு நிற்பவர். அவரே திதிக்கடவுளும் படைப்புக் கடவுளும் தோன்றுதற்குக் காரணமானவர். இது அவரது பொது வியல்பாம். இப்பொருள் சிவசத்தா மென்பது ஞானநூல். பசுஞான பாச ஞானங்களால் அறியப்படாமையிற் சிவமாம். பதிஞானத்தா லறியப்படுதலிற் சத்தாம். சிவசத்து என்பது சத்துச்சித்து என்னும் பொருளில் வந்தது. இவ்விரு தன்மைகளும் சச்சிதானந்தம் என மூன்றாயும், முற்றுணர்வு முதலிய ஆறாயும், எட்டாயும் விரியும். இவை இப்புராண முதற் செய்யுளில் வைத்தோதினுர் ஆசிரியர். விரிவு சிவஞானபாடிய 1 - 6 - சூத்திரங்களுட் காண்க. இவர் மும்மூர்த்திகளில் ஒருவரல்லர். நான்காவதாகிய பொருள் - துரியமூர்த்தி - என்பது வேதம். "துரியங் கடந்த சுடர்த்தோகையுட

னென்றும் பிரியாதே நிற்கின்ற பெம்மான்" என்பது திருக்களிற்றுப் படியார். ஒரு நாம மோருருவ மொன்றுமில்லார். ஆயினும் அன்பர்க்கருளும் பொருட்டுப் பல நாமங் களும் பல உருவங்களும் தாங்கி வருவர். முக்குணங்களுக்கும் அப்பாற்பட்டவர். தன வயத்தனாதல், தூய உடம்பினனாதல் இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களி னீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பி லின்பமுடைமை என்ற எண்குணங்களுந் தமக்கேயுரியவர். நிலம், நீர், நெருப்பு, கால், விசும்பு, நிலா, பகலோன், உயிர் என்ற அட்டமூர்த்தமாய் நிற்பவர். இவர்க்குத் தடையிலா ஞானமாகிய மேனி ; அருளே உரு. சத்தியே திருமேனியாகக்கொண்டு வருவது உயிர்கட்கருளாற் பேரின்ப முத்தியளித்தற் பொருட்டேயாம் பேரின்ப முத்தியாவது தன்னிலையினுள்ள எண் குணங்களாகிய சிவத்துவ விளக்கமேயாம். "தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத்தருஞ்சத்தி, பின்னமிலா னெங்கள் பிரான்"—திருவருட்பயன். யார்க்குமருள வெளிப்படும் உருவங்கள் உருவமில்ல. ஊர்தி வெள்ளேறு. உமையொரு பாக முடையார். என்றும் மன்னி வாழ்வது கயிலைத் திருமாமலை. தேவர்கடேவர் திருவாரூரில் மனுச்சோழர்க்கு ஆவின் கன்று மூலம் அருள் புலப்படுத்தினர். நம்பி ஆரூரரைக் கிழவேதியராக வந்து தடுத்தாட் கொண்டவர். தில்லைவாழந்தணர்க்கு அம்பலத்தே ஆனந்தக் கூத்தராக நின்று அவர்தம் பூசையினை ஏற்பவர். திருநீலகண்டர் பால் ஓடு வைத்து மாற்றி, அவர் அயலறியாத வண்ணம் ஆணையுய்த்த செய்தியை உலகறியச் செய்தருளியவர். இயற்பகையார்பாற் றூயநீறு பொன்மேனியில் விளங்கத் தூர்த்த வேடமுந் தோன்ற வேதியராய் வந்து, அவர், இன்புறுதாரந் தன்னை ஈசனுக் கன்ப ரென்றே துன்புறா துதவுந் தொண்டராம் பெருமையை, உலகில் விளக்கியருளியவர். அன்புறு மனத்தா னுதனடியவர்க் கனபுநீடிய மாறநாயனார், நல்குரவான போதிலும் அவ்வாறே செலுத்த வல்லவர் என்பதை, ஒரு அடியவராய் வந்து உலகிற்குக் காட்டியருளியவர். தமது இன்னுயிர் செகுக்கக்கண்டும "திருவேடமே மெய்ப்பொருள்" எனத் தொழுது, "தத்தா நமர்" எனத் தடுத்த மெய்ப்பொருளார்க்குக் காட்சி கொடுத்துத் தம் அருட்கழ னீழல் சேரக்கொண்டவா றிடையறாமற் கும்பிடுங் கொள்கை யீந்தவர். அடியவர்தந் திண்மை யொழுக்க நடை செலுத்தித், தம்மையும் புறகு என்ற, விறன் மிண்டர்க்குத் தந்தாணிழற்கீழ் மிக்க கணநாயகராகும் தன்மை தந்தருளியவர். மறைகுலப் பிரமசாரியாய் வந்து, அமர்நீதியாரிடம் கோவணங் கொடுத்து, அதனை மறைத்து, அதற்கீடாக அவர் பொருள்க ளனைத்தையும் அவர் குடும்பத்தையும் அவரையும் துலையிலேறச்செய்து, அத்துலையினையே விமானமாக்கி, அவரைச் சிவபுரியினிற் சேர்த்தருளியவர். இவ்வாறே மற்றை நாயன்மார்கள் சரிதங்களாலும் அறிக. இவரது இயல்பு சொல்லுக்கடங்காமையின் இப்புராணத்துப் பலவிடத்தும் கூறிய தன்மைகளின் வைத்து ஒருவாறு உணரத்தக்கது.

**சிவலோகம்** (223) - **வீடு** (402) - **பேரின்பம்** (402) - இறைவனுலகம்.

**சிற்றம்பலம்** (250 - 351 - 360)-**திருஅம்பலம்** (248) - **சிற்பரவியோமம்** (351)- **தில்லையம்பலம்** (435) - **தில்லைமன்று** (470) - கனகசபை, பொன் மாளிகை என்று பலவாறும் போற்றுவர். சிவபெருமான் நித்தியானந்தத் தாண்டவம் புரியுமிடம்.

**சீகாழி** - **தோணிபுரம்** (46-259) - **புகலி** (258) - **புறவம்** (260) - சோழ நாட்டுத் தலங்களி லொன்று. பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, காழி, கொச்சைவயம், கழுமலம் என்னும் பன்னிரு பெயர்களையுடையது. இது பிரம புரீசுவரர் ஆகிய இலிங்கம், தோணியப்பராகிய குரு, சட்டைநாதராகிய சங்கமம் என்னும் மூவுருவோடும் இறைவன் விளங்குகின்ற பெருமையுடையது. திருஞானசம்பந்த சுவாமிகள் அவதரித்து அம்மையார் திருமுலைப்பா லுண்டருளிய தலம். ஆளுடைய பிள்ளையார் அவதரித்த தலமாதலின் "உள்ளு நான் மிதியேன்" என்று அஞ்சி நம்பியாரூரர் இதனை வலம் வந்தபோது சிவபெரு

மான் எதிர்காட்சி கொடுக்கத் தரிசித்துக் ''கயிலையினில் வீற்றிருந்தபடி கண்டுகொண்டே''னெனப் பதிகம் பாடியருளிய தன்மை வாய்ந்தது. தலவிசேடம் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் புராணத்துட் காண்க. இதன் பெயர்கள் ஊழிக்காலக்கிரமத்தில் வருதன.

**சுந்தரமூர்த்தி சுவாமிகள் - வன்றொண்டன் - (47 - 48 - 216 - 274 - 293 - 306 - 315 - 340 - 346 - 358 - 407) - நாவலர்கோன் - (27 - 224 - 271 - 325 - 326) - நம்பியாரூரன் - 29 - 50 - 150 - 165 - 201 - 209 - 348 - 349) - நம்பி - (39 - 179 - 188) - ஈசனுக்கினியான் - (161) - நாவலர் பெருந்தகை (181) - நாவனகரூரன் (184) - திருநாவலூரான் - (184 - 188) - ஆரூரர் - (194 - 197 - 232 - 273) - நாவலூரர்கோ (208) - நாவலர் பெருமான் (220) - நாவலர் தனிநாதன் (223) - தமிழ்நாதன் (232) - திருநாவலூராளி (233) - நாவனகரார் பெருமான் (244) - வள்ளலார் (258) - தம்பிரான் தோழர் - (275 - 317) - தமிழ் நாவலர்தம் பெருமான் - (276) - ஆளுடைய நம்பி (285) - நாவலர் காவலர் - (287) - உடையநம்பி (295) - நாவலூரன் - (303) - நாவலூர் மன்னன் (327) - திருமுனைப்பாடி நாடர் (344) - ஊரன் (498) - ஆரூரன் (825).**

சைவ சமயகுரவர் நால்வரி லொருவர். தோழ மார்க்கத்தை அநுட்டித்துக் காட்டிய ஆசாரியர். திருத்தொண்டர் புராணம் என்னும் இப்பெருங் காப்பியத்திற்குத் தலைவர். கயிலாயத்தில் சிவபெருமானது அழகே உருவாய் வெளிப்பட்டுத் தோன்றியவர் என்பர். திருப்பாற்கடலினின்று மெழுந்த ஆலகால விடத்தைத் சிறிதளவாகத் திரட்டி வந்து சிவபெருமானிடம் தந்தமையால் **ஆலாலசுந்தரர்** என்னும் பெயர் பெற்றவர். மாதவஞ்செய்த தென்றிசை வாழ்ந்திட இவர் மண்ணுலகிற் போந்த காரணம் திருமலைச் சிறப்பிலும் (61), இவர் வாழ்க்கை தடுத்தாட்கொண்ட புராணத்திலும் (424), ஏயர்கோன்கலிக்காம நாயனார் புராணம், கழறிற்றறிவார் நாயனார் புராணம், வெள்ளானைச்சருக்கம் இவற்றிலும் காண்க. இவர் கயிலையினின்றும் பூவுலகிற் போந்து திருத்தொண்டத்தொகை யருளி மீளக் கயிலையடைந்த வரலாற்றின் விரிவே இப்புராணமாம்.

**சூரியன் - ஞாயிறு (26) - செங்கதிரவன் (10) - வெங்கதிரோன் (98) - கதிரவன் (159) - இரவி (228) - ஏழ்பரித்தேரோன் (303) - பகல் (307) - கதிரோன் (326) -** ஒன்பது கோள்களில் இராச கிரகம் எனப்படுவர். உலகிற்கு ஒளியும் சூடும் தந்து தழைக்கச் செய்து காப்பவர். சிவபெருமானது வலது கண்ணானவர். இவரினின்றும் வருவது சோழ மரபு.

**செங்குன்றூர் (492)** - இது மலைநாட்டு வைப்புத் தலம். **செங்கண்ணூர்** என்று தற்காலம வழங்கப் பெறுகின்றது. விறன்மிண்ட நாயனார் திருவவதாரஞ்செய்த திருத்தலம். சிலப்பதிகாரக் கதாநாயகியாகிய கண்ணகி இங்கு நின்றும் கோவலனுடன் விமானத்தில் ஏறி விண்ணுலக மடைந்தாளென்று கூறப்படுகின்றது. தில்லை மூவாயிரவர்போன்று இங்கு மூவாயிரம் வேதியர்கள் வாழ்ந்தனரென்று நம்மாழ்வார் பாசுரத்தானறியப்படும். தலவிசேடம் காண்க (பக - கூகஉ).

**சேதிநாடு (466 - 467 - 490) - சேதியர் (474)** - நடுநாட்டின் ஓர் உட்பிரிவு. மலாடர் நாடு என்றும் கூறுப. தற்காலம் திருக்கோவலூர் தாலூகா இதன் பரப்பாகும். மெய்ப்பொருளனார் ஆண்ட திருநாடு.

**சேர நாடு (492)** சேர மன்னர்களால் ஆளப்பட்டது. மலைநாடு-முன்னாளில்தமிழ் நாடா யிருந்தது. சென்ற 600 ஆண்டுகளாக மலையாளநாடாயிருந்து வருகின்றது.

**சேரர் (492)** - தமிழ் மூவேந்தர் மரபுகளில் ஒரு மரபு.

**சைய மால்வரை (53)** - பாரத கண்டத்தின் மேற்குத் தொடர்ச்சி மலையில் காவிரி நதிக்குப் பிறப்பிடமாயுள்ள ஒரு மலை. குடகு நாட்டிலுள்ளது.

**சைவம்** (50) - *சிவசம்பந்தமுடையது. இராஜாங்கத்தமர்ந்த வைதிக சைவசமயம். மற்றைச் சமயங்கள் யாவும் இதனங்கங்களாம். பலதிறப்பட்ட ஆன்மாக்களுக்கு உய் வினைத் தருவதோருயர்ந்த நெறி. "வேதப்பயனும் சைவம்" - சண்டீசர் - புரா* - (9).

**சோழ நாடு - புனனாடு** (50) - **காவிரி நாடு** (51 - 62) - **நீர்நாடு** (67) - **பொன்னி நாடு** (502) - *சோழ மரபில்வந்த மன்னர்களால் ஆளப்பட்டது.*

**சோழர்** (51) - **செம்பியர்** (97) - **வளவன்** (116) - **சென்னி** (404) - **செம்பியர்** (502) - *தமிழ் மூவேந்தர் மரபுகளில் ஒன்று. திருநீற்றின் உரிமை பெற்றோராய்ச் சைவத் துறையின் வழிவழிக் குடியாக வந்த அரசர்கள்.*

**ஞானம் - ஞானமே முதலா நான்கு** (356)-*சைவ நாற்பாதங்களுளொன்று. "பாரத வான்கலை முழுதுமா கமனூற் பகுதி யும்பல சமயசாத திரமுந், தெரிந்து தேர்ந்ததில் வாய்நதமுப் பொருளின் செய்தி யேபொரு ளெனமனந் தெளிநது, புரிந்து போந்துள சிற்றறி வினைத்தும் போக்கி யவ்வறி வெனச்சிவ போதம்,விரிந்து தோன்றுநெஞ் சுடைய வித் தகரே மேன்மை யானநம் மெய்ப்பதம் பெறுவார்." - திருவாதவூரடிகள் புராணம்.*

**நந்தன்** (475—482—484) - *மெய்ப்பொருணாயனாரது மெய்க்காவலாளன். தன் தலைவரான நாயனார் சொற்கடவா தொழுகும் பணியாளன். சரிதச் சுருக்கம் (பக் - கoக) காண்க.*

**தமிழ் வரைப்பு** (85) - *தமிழ் உலகம். தமிழ் நாடு. செந்தமிழ் நாடென்றும், கொடுந்தமிழ் நாடென்றும், இலக்கணங்களில் வரையறுத்த எல்லைக்குட்பட்ட தமிழ் வழங்கும் நிலம். இது ஒரு காலத்து வடக்கு இமயமலைவரையும் தெற்குக் கடலின் மேலும் பல்லாயிரங்காத அளவும் பரவியிருந்ததென்று சரிதங் கூறும். கடல்கோள் களினாலும் அன்னிய மொழியாளர் படையெடுப்புக்களினாலும் இதனெல்லை இஞ் ஞான்று குறுகி நிற்கின்றது என்ப.*

**தருமம்** (107—129) - *அறக்கடவுள். இஃது இறைவன் மேற் கொள்ளும் நீதி யுருவம். "இன்னவுரு வின்னநிற மென்றுணர்வ தேலரிது நீதிபலவுந் தன்னதரு வாமென மிகுத்ததவ நீதியொடு தானமர்வு" என்ற ஆளுடைய பிள்ளையார் தேவாரங் காண்க. இறைவனது விடை தருமசொரூபமானதென்பர்.*

**திருக்கூட்டம்** (347 - 349 - 495 - 498) - *திருத்தொண்டர்கள் சேர்ந்து கூடி யுள்ள தொகுதி.*

**திருத்தொண்டத் தொகை** (85 - 47 - 48 - 358 - 489 - 501) - **திருத்தொண்டத் தொகைத் தமிழ்** (146) - **திருத்தொண்டத் தொகைப் பதிகம்** (340 - 347) - **"தென்ற மிழ்ப்பயன்"** (357) - "*தில்லைவா ழந்தணர்த மடியார்க்கு மடியேன்*" என்று திருவாரூர்ப் பெருமான் அடியெடுத்துக் கொடுக்க ஆரூரர் பாடியருளிய பதினொரு திருப்பாசுரங் கள் கொண்ட பதிகம். *அறுபான்மும்மைத் தனியடியார்களையும் ஒன்பது தொகை யடியார்களையும் போற்றுவது. இதுவே இப்புராணத்திற்கு முதனூலும் பதிகமுமாக வுள்ளது. திருமலைச் சிறப்பு, தடுத்தாட் கொண்டபுராணம் முதலியவற்றில் இதன் விரிவு காண்க.*

**திருத்தொண்டர் - புனிதர்** (141) - *சிவபெருமானது அடிமறவாத பெரியோர். இவர்களது வரலாறு பண்பும் இப்புராணங்கூறும். சிறப்பாகத் திருக்கூட்டச் சிறப்பு என்ற பகுதியிற் பேசப் பெறுவர்.*

**திருத்தொண்டர் புராணம்** (10) - *ஆசிரியர் சேக்கிழார் சுவாமிகள் இப்புராணத் திற்கு இட்ட பெயர்.*

**திருநீலகண்டம்** (363 - 365 - 366) - *விடமணிந்து தேவர்களைக் காத்த இறைவ னது கண்டம். இதன்பேரால் ஆணை நிகழ்ந்த வரலாறு திருநீலகண்டநாயனார் சரிதத் திற் காண்க. இப்பெயரால் அமைந்து, கொங்குநாட்டிற் பனிநோய் தீர்த்த ஆளுடைய பிள்ளையார் திருநீலகண்டப்பதிக வரலாறு அவர் புராணத்தினுட் காண்க.*

**திருநீலகண்ட நாயனார்** - **திருநீலகண்டக்குயவனார் (359)** - அறுபான்மும்மைத் தனியடியாருளொருவர். "மாது சொன்ன சூளால் இளமை அறக்க வல்லேனல்லன்" என்று மூற்றத்துறந்த பட்டினத்தடிகளாற் பாராட்டப்பெற்றவர். சரித சுருக்கம் காண்க (பக - ௪௬௨).

**திருவெல்லை** - **எல்லை (238 - 256)** - தில்லைக்கோயிலுக்கு நாற்புறமும் ஒரு காத தூரத்தில் அமைந்தது. ஆசாரியர்கள் ஒவ்வொருவரும் இத்திருவெல்லையைப் பணிந்து போற்றியே உட்சென்றனர்.

**தில்லைவாழந்தணர் (345)** - **தெய்வவேதியர் (357)** - **தில்லையந்தணர் (359)** - **மும்மையாயிரவர் (357)** - **(தில்லைவாழந்தணர்கள்) சபை - (389 - 390)** - சிதம்பரத்தில் ஸ்ரீ நடராச மூர்த்திக்கு அகம்படித் தொண்டு புரிவோர். தீட்சிதர் என்று அழைக்கப் பெறுபவர். நட்டப்பிரான் ஆராதனையில் விருப்புற்றுத் திருக்கயிலையிலிருந்து எழுந்தருளிய சிவகணத்தவர். இவர்கள் தொகை மூவாயிரம் என்ப. "முட்டாத முச் சந்தி மூவாயிரவர்" முதலிய திருவாக்குக்கள் காண்க. நட்டப்பிரானும் "நாமிவரிலொருவன்" எனத் திருவாய் மலர்ந்தருளினர். விதிமுறை அக்கினி காரியம் வழுவின்றிச் செய்வோர். தேவாரத் தமிழ் முறைகளிற் றுதிக்கப்பெற்றோர். திருஞானசம்பந்த சுவாமிகள் கணநாதர்களாகக் கண்டு பதிகமோதியுள்ளார். இவர்கள் ஒன்பது தொகையடியார்களுள் ஒரு கூட்டத்தவர். சுருக்கம் காண்க (பக் - ௪௪௪.)

**தில்லை (2 - 350 - 445)** - **பெரும்பற்றப்புலியூர் (41)** - **புலியூர் (227)**-**சிதம்பரம்** பார்க்க.

**தீனநகர் (237)** - இது நடுநாட்டுத் தலங்களுளொன்று. தீர்த்தனகரி என்றழைக்கப் பெறுவது. தலவிசேடங் காண்க (பக் - ௨௪௬).

**துந்துபி (14)** - தேவவாத்திய வகைகளிலொன்று.

**துதிக்கையோன் (18)** - **தாழ் செவி நீண்முடிக் கடக் களிறு (3)** - விநாயகக் கடவுள். துதிக்கையினையுடைய யானைமுகமுடையவர். சிவபெருமானது மூத்தகுமாரர். இவரது வரலாறு கந்தபுராணத்துட் காண்க.

**துவரை (24)** - துவாரகை. கண்ணனது தலைநகரம். வடநாட்டிலுள்ளது.

**துறையூர் (225)** - இது நடுநாட்டுத் தலங்களுளொன்று. சந்தானகுரவருள் ஒருவராகிய சகலாகம பண்டிதரெனனும் அருணந்தி சிவாசாரியார் அவதரித்த தலம். நம்பியாரூரர் தவநெறி வேண்டிப் பெற்ற தலம். தலவிசேடங் காண்க (பக் - ௨௪௪).

**தென்திசை - (35)** - **தென்புவி (37)** - பரதகண்டத்தின் தென்பாகம். சிவபெருமானது பூசனைக்குப் பொருந்தும் இடம் பலவும், புண்ணிய நீர் பலவும் தனனிடம் அமைய மாதவஞ் செய்து பெற்றது.

**தேவர்** - **சோதிவானவர் (87)** - **உம்பர் (265 - 301)** - **விண்ணவர் (20)** - **அண்டர் (60)** - திவ் என்ற ஒளிகொண்ட உடம்பையுடையவர்களாதலின் தேவர் எனப்படுவர்.

**தேவாசிரியன் (137 - 270 - 497)** - **தேவாசிரியனும் காவணம் (335)** - இது ஒரு மண்டபம். இப்போது ஆயிரக்கால் மண்டபம் என்பர். திருவாரூர்ப்பூங்கோயிலுள் திருவாயின் முன்னால் உள்ளது. அடியார் கூட்டம் நிறைந்துள்ள சபை. இங்கு நம்பியாரூரர் திருத்தொண்டத்தொகைப் பதிகத்தைப் பாடியருளித் திருக்கூட்டத்தினடி வணங்கினர். திருமால் முதலிய தேவர்கள் தரிசனத்துக்குக் காலம் பார்த்தும் அடியார்களை ஆசிரயத்துமிருக்குமிடம். திருக்கூட்டச் சிறப்புக் காண்க (பக் - கஅ௩).

**நந்தி(தேவர்) (20 - 45)** - சிவபெருமான் சன்னிதியில் அதிகாரியாக இருந்தப் பெற்றவர். சிவஞானது முதற்சீடர். சிவாகமம் முதலான எல்லாச் சாத்திரமும பயின்றவர். முக்கண், நாற்றோள், நீலகண்டம் முதலியவற்றுடன பெருமானது சாரூபம் பெற்றவராய்க் கைகளிலே உடைவாளும் பிரம்புந் தாங்கியவர். துவிதீய சம்பு, அபரபரமேசுவரன் எனறு அழைக்கப்பெறுபவர். இவர் சிலாத முனிவருக்குப் புதல்வராகச் சிவாஞ்

ஞைப்படி படைச்சாலில் மாணிக்கப் பெட்டியில் நான்கு கரங்களும் சடைமுடியுமாக அவதரித்தனர். திருவையாற்றிலே தவஞ்செய்து, மகா உருத்திரத்தை எட்டுக் கோடி உருச்செபித்துச், சிவனருள் பெற்றுச், சுயசை என்னும் தேவியை மணந்து, திருக் கயிலை யடைந்தவர். திருப்பேரூரில் இவரது திருவுருவச் செப்புப் படிமத்தில் " பட்டீசுவர சாமியார் வாசற் பிரதானி" என்று எழுதப் பெற்றுள்ளது. கோவிற் சன்னதியில் முன்னிருக்கும் இடபதேவர் வேறு. நந்திதேவர் வேறு. சிலர் இவ்விருவரையும் ஒருவரேயாகக் கொண்டு மயங்குவர்.

**நம்பி** (317) - (1) சுந்தரமூர்த்தி சுவாமிகள திருநாமங்களில் ஒன்று. (2) ஆதி சைவர் மரபு குறிக்கும் பெயர். நம்பியாண்டார் நம்பி முதலியவை காண்க. (3) நம்பி - நம்பி அடையப்படுபவன் - சிவபெருமான். இவர் பெயர் குறிக்கும் "நம்பி" யென்ற திருப்பதிகம் (சுந்தரமூர்த்திகள் தேவாரம்) காண்க. நம்பி - குணபூரணன் என்பர்.

**நம்பியாண்டார் நம்பி** (49) - திருநாரையூரில் ஆதிசைவர் குலத்துதித்தவர். இவர் தந்தையார் ஒரு நாள வேற்றூர் செல்லத், தாயார் நிவேதனம் முதலியன செய்து கொடுத்துப் பொல்லாப் பிள்ளையாரைப் பூசிக்க ஏவினள். நம்பிகள் ஆலயஞ் சென்று பிள்ளையாருக்குத் திருமஞ்சன மாட்டி, அவரது திருமுன்பு அன்னம் முதலிய நிவேதனங்களைப் படைத்துப், புசிக்க வேண்டினர். பிள்ளையார் புசிகாது வாளா விருக்க, நம்பிகள சோர்ந்து தமது தலையைச் சிலைமேல் மோதப் புகுதலும், பிள்ளையார் தடுத்து நம்பி படைத்த யாவும் உட்கொண்டருளினர். பள்ளிக்குச் செல்லுங் காலம் தாழ்த்தமை அறிவிக்கவும், பிள்ளையார் அவருக்குச் சகல கலைகளையும் தாமே ஓதுவித்தருளினர். இவ்வற்புதம் அறிந்த அபயகுல சோழர் திருநாரையூர் வந்து, நம்பிகளை வணங்கிப், பிள்ளையாருக்கு விசேட பூசைகள் ஆற்றுவித்து, மூவரோதியருளிய தேவாரத் திருமுறைக ளிருக்குமிடத்தை அறிய விரும்பி விநாயகர்பாற் கேட்டறிவிக்கும்படி வேண்டினர். நம்பியார், பிள்ளையார்பாற் கேட்டறிந்தபடி, அத்திருமுறைகள் தில்லை மேற்குக் கோபுரத்தை யடுத்த திருமதிலில் சேமித்திருக்கிறதாகக் கூறி, அச் சோழனுடன் திருத்தில்லை சென்று, திருமுறைகளை வெளிப்படுத்திச், சிதல் அரித்ததுபோக எஞ்சியவற்றைத் திருமுறைகளாக வகுத்தார். சைவத் தெய்வத் திருமுறைகளில் முதற் பதினொரு திருமுறை வகுத்தவர் இவரே. இவர் பாடிய பிரபந்தங்கள் பதினோராந் திருமுறையிலுள்ளன. அவை :—விநாயகர் திருவிரட்டைமணிமாலை - கோயிற்றிருப் பண்ணியர் விருத்தம் - திருத்தொண்டர் திருவந்தாதி - திருநாவுக்கரசர் திருவேகாதச மாலை எனபனவும், - ஆளுடைய பிள்ளையார் பேரில் திருவந்தாதி, சண்பைத் திரு விருத்தம், மும்மணிக்கோவை, திரு உலாமாலை, திருக்கலம்பகம், திருத்தொகை என்ற இவைகளுமாம். இவர் அருளிய திருத்தொண்டர் திருவந்தாதியே திருத்தொண்டத் தொகை யென்னும் முதனூலுக்கு வழிநூலாக, அதன் விரிநூலாகி இத்திருத்தொண்டர் புராணம் திகழ்கின்றது. இவர் சரிதவிரிவு திருமுறை கண்ட புராணத்தும் ஏனைய நூல்களிலும் காண்க. இவர் ஆளுடைய பிள்ளையாரிடத்து உபாசனை வழியே மிக்க அன்பு பூண்டொழுகி அவர்பால் விசேடித்த அருள் பெற்றவர். திருமுறை வகுப்பு விவரம், திருத்தொண்டர் புராண வரலாறு 96-ம் பாட்டினும் அதன் உரைக் குறிப்பினுங் காண்க.

**நரசிங்க முனையரையர்** (151) - திருமுனைப்பாடி நாட்டரசர். சுந்தரமூர்த்தி சுவாமிகளை மகன்மைகொண்டு வளர்த்தவர். பெரியபுராணத்துட் பேசப்பெறுந் தனியடியாரு ளொருவரென்ப. இவர் சரிதம் இவரது புராணத்துட் காண்க.

**நல்லூர்** (505 - 506 - 507) - இது சோழநாட்டுத் தலங்களுளொன்று. அமர்நீதி நாயனர் திருத்தொண்டு செய்தருளிய தலம். வாகீசப் பெருந்தகையாருக்குத் திருவடி தீக்கை செய்த திருத்தலம். தலவிசேடங் காண்க (பக் - கூ அக).

**நாயன்மார் (4 - 470 - 534)** - தலைவர்கள். தலைமைபற்றிச் சிவபெருமானது பெயர். அவரது பேரடியார்களான அறுபத்துமூவர்முதலியோர்க்கும் வழங்கும்.

**நாவலூர் (148 - 224 - 309 - 332)** - இது நடுநாட்டுத தலங்களுளொன்று. திருநாமநல்லூர் என்று வழங்கப்பெறும். சுந்தரமூர்த்தி சுவாமிகள் அவதரித்த தலம். சடையனார், இசைஞானியார், நரசிங்க முனையரையர் முதலியோர் முத்திபெற்ற தலம். தலவிசேடங் காண்க (பக் - உடுஅ).

**நான்முகன் (17) - அயன் (126 - 243) - திசைமுகன் (137) - நான்முகன் (287)** - பிரமதேவன். சிவனாணையின் வழியே படைத்தற்றொழில் செய்யும் தேவர். இவர் முகங்களைந்தில் ஒன்றினைச் சிவபிரான் கிள்ளிவிட்டதினால் நானமுக முடையராயினர். வேதங்களை சிவபிரானால் உபதேசிக்கப்பெற்றுத தேவர் முனிவர்களுக்கு உபதேசிக்கும் போதகாசிரியர். திருமாலின் உந்திச் சுழியினின்றும் தோன்றியவர். மும்மூர்த்திகளுளொருவர். அன்னவூர்தி யுடையார். இவர் பொானனிறததராய்த தாடி, மீசை, நான்கு முகம், கைகளில் செபமாலை - தண்டாயுதம் - ஸ்ருக் - ஸ்ருவம் - கமண்டலம் உடையவர்; சரசுவதி - சாவித்திரி - காயத்திரி என்பவர்கள் இவரது தேவியர். பல சரிதங்கள் இவரைப் பற்றி நிகழ்வன. புராணங்கள் பார்க்க. பதினெண் புராணங்களுட் பிராமம், பதுமம் என்னுமிரண்டும் இவரைப் பற்றியன.

**நீதிவழக்குக்கலைப் பெயர்கள் - ஆட்சி - ஆவணம் - காட்சி - மூலவோலை - படியோலை - மாட்சி - (201 - 202) ஆளோலை (185) - கரணத்தான் (204) - சபையோர் (204) - வழக்கு (390)** - (இவை இப்பகுதியிற் காணப்பட்டன).

**நீர்நாடு (54)** - சோழ வளநாடு.

**பதிகம் (48)** - புராண உறுப்புக்களில் ஒன்று. புராணப் பொருளைச் சுருக்கி முகப்பிற் கூறுவது. இப்புராணததிற்குப் பதிகம் திருததொண்டததொகை.

**பதியிலார் (குலம்) (90—278) - உருத்திர கணிகைமார் (278)** உருததிர கணிகையர் மரபு.

**பரசிராமன் (491)** - பிருகு வம்சததில் வந்த சமதக்கினி முனிவருக்கு இரேணுகையிடம் பிறந்த குமாரர். இவர் விட்டுணுவின் அமிசாவதாரம். இவர், தம் தநதையைக கொனற கார்த்தவீரியன் வழிவரும் க்ஷத்திரியர்களை நாசம் செய்யும் பொருட்டுச் சிவபெருமானை நோக்கித் தவம் புரிந்து பரசு ஆயுதம் பெற்றவர். அவ்வாறு கொனற பாவம் நீங்கும் பொருட்டுத் தென்றிசையில் ஒரு நாடு கண்டு, அந்நாட்டை வேதியர்க் கீநதனர். அந்நாடே மலையாள நாடாகும். காஞ்சிப்புராணமும் பிறவும் காண்க.

**பரவையார் - (90 - 278 - 289 - 294 - 296 - 315 - 325 - 326 - 327 - 328) நங்கை பரவையார் (293 - 309)** - கயிலையில் உமாதேவியா ரிருசேடியருட் கமலினி யென்பவர் பரவையாராகத திருவாரூரில் திருவவதாரஞ் செய்தார். பதியிலார் குலமாகிய உருததிர கணிகையர் குலததிலுறபவித்தவர். சிவபெருமான் ஆணையால் சுந்தரமூர்த்தி சுவாமிகளைத திருமணம் செய்துகொண்டவர். கண்ணுதலைத் தொழுமன்பே கைக்கொண்டவர். "நங்கை பரவை" என்று இராசராசேச்சரத்திற் செப்புப் படிமததில் இவர் பெயர் காணப்பெறும். வீதிவிடங்கப் பெருமான் திருவோலகததிற் பாடலாடல்களுக் குரியவர். இறைவன் ஓரிரவில் இருமுறை தூது நடந்த இவரது திருமாளிகை யிருந்த இடத்தில் இப்போது இவரது கோயில் உள்ளது. தடுத்தாட் கொண்ட புராணச் சுருக்கததும (பக் - சஉச),ஏயர்கோன்கலிக்காம நாயனார் புராணததும், கழறிற் றறிவார் புராணத்தும், வெள்ளானைச் சருக்கத்தும் இவர் சரிதங் காண்க.

**பழையாறை (502) - ஆறை (501)** - இது சோழநாட்டுத் தலங்களுளொன்று. அமர்நீதி நாயனார் அவதரித்த தலம். தலவிசேடங் காண்க (பக் - கூஅஅ).

**பனிவரை (11 - 51) - இமயம் (74)** - இமயமலை. பனியால் மூடப்பட்டது.

**பாற்கடல்** (25 - 138) - பெருஞ் சமுத்திரங்கள் ஏழனுளொன்று. திருமால்பள்ளி கொண்டுள்ளது. தேவாசுரர்கள் அமிர்தம் பெறக் கடைந்தபோது இதனினெறெழுந்த விடத்தைச் சிவபெருமான் உண்டு கண்டத்தில் நிறுத்தி உலகைக் காத்தனர். உபமன்னிய முனிவர் பாலுக்கு அழுதபோது சிவபெருமான் இக்கடலினை வரவழைத்து அவருக்கு உண்ணும்படி அளித்தனர். அமுதசொரூபமானது இதனைக் கடைந்தெடுத்த அமுதத்தைத் தேவர்கள் உண்டு நீண்ட வாழ்நாள் பெற்று அமரராயினர்.

**பிரணவம் - வேதமூலம்** (43) - எல்லா மந்திரங்களுக்கும் முதலாயது. மறைகட்குப் பிறப்பிடமாவது. சமட்டி - வியட்டி என இருவகைப்படும். இதனால் அறிவிக்கப்படும் பொருளாய் - இதற்கு வாச்சியனாய் - உள்ளவர் சிவபெருமான். இதன் வடிவமாயுள்ளவர் விநாயகக் கடவுள். இதனுள் விளங்குபவர் ஆனந்தக் கூத்தராகிய நடேசப் பெருமான். கொன்றைமலர் இதன் வடிவமா யமைந்ததாதலின் அது சிவபெருமானுக்குத திருவடையாளமாலையாயமைந்த தென்பர்

**பிள்ளையார்** (258) - திருஞானசம்பந்த சுவாமிகள். ஆளுடைய பிள்ளையார். உலகத் தாய் தந்தையரால் பிள்ளையாகக் கொண்டு பாலூட்டப் பெற்றமையால் இப் பெயர் பெற்றார். இவர் வரலாறு இவரது புராணத்துட் காண்க.

**பிள்ளைப் பருவங்கள் - பருவம்** (279) - **காப்பு** (279) - **தளர்நடைப் பருவம், பிள்ளைமைப் பருவம்** (282) - **பேதைமைப் பருவம்** (282) - **கழங்கு - பந்து - அம்மனை - ஊசல்** (281) - காப்பு - செங்கீரை - தால் - சப்பாணி - முத்தம் - வாரானை - அம்புலி - சிறுபறை - சிற்றில் - சிறுதேர் - என்பனவாக வகுத்துப் பிள்ளைக்கவிப் பிரபந்தம் பாடுதல் மரபு. பெண்பாற் பிள்ளைக்கவியில் மேற்கூறியவற்றில் கடைமூன் றொழித்துக் கழங்கு - அம்மனை - ஊசல் - என்பவற்றைக் கூட்டிப் பாடுதல் மரபு. " கருந்தடங்கண்ணார்கழல்பந் தம்மானைப் பாட்டயருக் கழுமலமே" - எனபது ஆளுடையபிள்ளையார் தேவாரம். (பக்கங்கள் - ௩௪௦ - ௩௪௧ - பார்க்க.) (தளர்நடை - ஒருவகைப்பருவம் போலும் )

**புகலூர்** - சோழநாட்டுத் தலங்களுளொன்று. அப்பமூர்த்திகள் திருவடியடைந்த தலம். நம்பியாரூரர் செங்கல் செம்பொன்னாகப் பெற்ற தலம். சரண்யபுரம் எனறு வடமொழியில் கூறுப. தலவிசேடங் காண்க (பக் - ௩௧௪).

**புகார்** (403 - 404 - 408) - காவிரிப்பூம்பட்டினம்.

**புத்தூர்** (153) - **மணம் வந்த புத்தூர்** (169) - சடங்கவி சிவாசாரியாரது ஊர். "மணம் வந்த புத்தூர்" எனப் பனனுள் வழங்கியது இப்போது மணம் தவிர்ந்த புத்தூர் என வழங்கப் பெறுகின்றது. இது சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு முதலிற் குறித்த திருமண திருமணம் தவிர்ந்ததைக் குறிப்பதாகும். நம்பியாரூரரது ஒரு மணத்தைச் சிதைவு செய்து வல்வழக்கிட்டு இறைவன் தடுத்தாட் கொண்டருளிய தலம்.

**புலீச்சரம்** (396) - இது சிதம்பரத்திலுள்ளதோர் சிவாலயம். வியாக்கிரபாதரால் பூசிக்கப் பெற்றது. திருநீலகண்டக் குயவனருக்கு அனுக்கிரகித்த திருத்தலம். இளமை யாக்கினார் கோயில் என்ப. தலவிசேடங் காண்க (௪௮௨).

**புற்றிடங் கொண்டவர்** (100—136) - **புற்றிடங் கொண்ட புராதனர்** (271) - திருவாரூர்த் திருமூலத்தானத்தே புற்றினை இடமாகக் கொண்டு எழுந்தருளியிருக்கும் இறைவர். வடமொழியில் வன்மீகநாதர் என்பர். வனமீகம் - புற்று.

**புனல் நாடு** - சோழ நாடு.

**புன்கூர்** (261) - இது சோழ நாட்டுத்தலம். திருநாளைப்போவார், ஏயர்கோன் கலிக்காம நாயனர் தொண்டாற்றிய தலம். தலவிசேடங் காண்க (பக் - ௩௧௨ ).

**பூங்கோயில்** (134—135) - **பூங்கோயில் மேயபிரான்** (271) - திருவாரூரிலுள்ள சிவாலயத்திற்குப் பெயர்.

**பூமகள் (58) - நிலமகள் (97)** - பூமிதேவி எனவும், விட்டுணுவின் இருதேவிய ரில் ஒருவரெனவும் பெறுவர்.

**பெண்ணை (228)** - ஒருநதி. நடுநாட்டிற்கு வளந்தருவது. சிவபெருமான் பிரா கத்தின் வழி வந்தபடியால் பிணாகினி யென்று பெயருடையது. இதனதென்பால் திருவெண்ணெய் நல்லூர் உள்ளது. வடபால் திருததுறையூரிருந்தது. அது கால பேததால் இப்போது தென்பக்கமாயது.

**பேரம்பலம் (8) - பேரம்பல மேரு (250)** - சிதம்பரததில் ஐந்து சபைகளில் (அம்பலங்களில்) ஒன்று. சிற்றம்பலததிற்குக் கீழ்பாலின் உள்ளது. சோமாஸ்கந்த மூர்ததி முதலிய உற்சவமூர்த்திகள் எழுந்தருளியுள்ள இடம். முன்னர் அநபாயச் சக்கரவர்த்தியால் பொனவேயப்பட்டது.

**பொன் மாளிகை (250)** - தில்லையில் நடராசர் எழுநதருளும் ஐந்து அம்பலங் களுள் ஒன்று. பொன்னம்பலம் என்பதும் வழக்கு.

**மதி (27 - 307 - 311) - நிலா (253 - 308) - திங்கள் (55 - 245 - 280) - இந்து (252) - மதியம் (321)** - சந்திரன். நவக்கோள்களில் ஒனறு. உலகுக்குத் தூய்மையும் இன்பமும் தண்மையும் தந்து காப்பவன். அமிர்த சொரூபமானவன். சிவபெருமானது இடது கண். பாற்கடல் கடைந்ததில் எழுந்ததென்பது புராணம். இறைவன் மதிசூடிய வரலாறு புராணங்களுட் டேற்றம்பெறக் கேட்கப்படும்.

**மயிலாடுதுறை (262)** - சோழநாட்டுத தலங்களுளொனறு. அம்பிகை மயி லாக வுருக்கொண்டு இறைவனை வழிபட்ட தலம். இப்போது மாயவரம் என்பர். தல விசேடங் காண்க (பக் - ௩௧௩).

**மருதம் (75)** - வயலும் வயல்சார்ந்த இடமும் விலனுக அமைந்த திணை. நானி லத்தொன்று. ஐந்திணைகளிலொன்று.

**மலயம் (313)** - பொதிகை மலை. அகத்தியர் திருக் கைலாயததிலிருந்து தென்திசை போந்து தங்கி யிருக்கும் மலை. தெனறல் பிறக்குமிடம். திருநெல் வேலிச் சில்லாவிலுள்ளது.

**மலாடர் (467)** - மலையமானுட்டில் வாழ்பவர். மலையமான் நாடு மலாடு என மருவி வழங்கும்.

**மலைநாடு (491 - 496)** - சேரர்களது நாடு. மலைவள மிக்குடையது. சேரமான் பெருமாள நாயனுர் அரசுபுரிந்த நாடு. விறன மிண்டநாயனுர் அவதரிதத பேறுடையது.

**மறலியூர்தி (113)** - இயமனது வாகனம். எருமைக்கடா.

**மனுவேந்தன் (98 - 112 - 134)** - அநபாயச்சோழன் வழிமுதல். சூரியபரம்பரை யில் வநதோர். திருவாரூரைத் தலைநகராகக் கொணடு சோழநாட்டை ஆண்டவர். மனுநீதி செலுத்து முறையானே மனுநீதிச் சோழன எனப் பெயராக்கிக்கொண்டவர். திருநகரச் சிறப்புச் சுருக்கங் காண்க (பக் - ௧௬௩).

**மனுநீதி (100 - 102) - தொன் மனுநூல் (122)** - சோழ மரபில் முந்தையாகிய **மனு** எனபவரால் வகுக்கப்பெற்ற அரசாங்க நீதிமுறைத தருமநூல்.

**மாணிகுழி (236)** - இது நடுநாட்டுத தலங்களுளொன்று. கருட நதியின் தென் கரையிலுள்ளது. வாமனவதாரங் கொண்ட விஷ்ணுமூர்த்தி மாணிக்கம் வைத்துப் பூசிதத தலம். தலவிசேடங் காண்க (பக் - உ௭௪).

**மாரன் (290 - 319) - அநங்கன் (282 - 292) - மதனுர் (287) - காமன் (310) - மன்மதனுர் (322)** - மன்மதன் என்றுங் கூறுவர். விஷ்ணுமூர்த்தியின் மனதிற் பிறநத வன். காதலிருவருக்கும் நடுநின்று நேயத்தைப் பெருக்குபவன். இவனது தேவி இரதி. இவனுக்குக், கரும்பு வில் ; வண்டு நாண் ; தாமரை - அசோகம் - மா - முல்லை - நீலம் என்னும் ஐந்து மலர்களும் பாணங்கள் ; மீன் கொடி ; இலஞ்சி மாலை ; சோலை படைவீடு ; மங்கையர் சேனைகள் ; தெனனம்பாளை கவரி ; தென்றல்

தேர் ; இருள் யானை ; கடல் முரசம் ; குயில் எக்காளம் ; சந்திரன் குடை ; மாலையும் இரவும் இவன் ஆட்சிக்காலம். தட்சிணாமூர்த்தியா யெழுந்தருளியிருந்த சிவபெருமான் மீது தேவர்களால் குமார சம்பவத்தின் பொருட்டுத் தனிதது ஏவப்பட்டு மலரம்பு சொரிந்தான். இறைவன் நெற்றிக் கண்ணால் பார்த்ததும் சாம்பராயினான். இவனது தேவி இரதி வேண்டவும், இறைவன் பார்வதியம்மையைத் திருமணம் செய்த காலதது அத் திருவருளால் உயிர்பெற்றெழுந்தான். இரதிக்கு மாத்திரம் உருவுடையவனாய், உலகருக்கு அநங்கனாய் விளங்குபவன்.

**மாவலி (236)** - சிவபெருமானிடம் பெருவரம் பெற்றுப் பெருவலி பெற்ற பேரரசன். இவன்பால் திருமால் வாமனனாய் மூவடி மண்ணிரந்து, பெற்று, இவனைப் பாதலததழுத்தி, அப்பழி தீரத் திருமாணிகுழியிற் சிவனைப் பூசித்தனர். இச்சரிதம் சிவஞானசித்தியார் என்ற ஞானசாத்திரத்தில் "தானமென் றிரந்துசெல்ல" என்ற பாட்டில் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. முன்பிறவியில் எலியாயிருந்து, திருக் கோயிலிலிருந்த விளக்குநெய்யை யுண்ணும்போது, மூக்குச் சுட்டிடக், கனன்று, அபுத்திபூர்வமாய்த் திரியைத் தூண்டிய சிவபுண்ணியங் காரணமாக இறைவனருளால் மூவுலகாளும் பேரரசு பெற்றவன். இச்சரிதம் "நிறைமறைக் காடு தன்னி னீண்டெரி தீபந் தன்னைக், கறைநிறத் தெலிதன் மூக்குச் சுட்டிடக் கனன்று தூண்ட, நிறைகடல மண்ணும் விண்ணு நீண்டவா னுலக மெல்லாங், குறைவறக் கொடுப்பர் போலுங் குறுக்கைவீ ரட்ட னாரே" என்று அப்பர் சுவாமிகளாற் பாராட்டப்பெற்றது.

**மாறர் - மாறன் (439) - மாறனார் (440)** - இளையான் குடிமாற நாயனார் புராணங் காண்க.

**முருகன் (290)** - குமாரக்கடவுள். என்றும் இளமையும் அழகுமுடையவர். சிவ பெருமானது இளைய சேய். இவரது வரலாறு கந்தபுராணத்துட் காண்க.

**முனைப்பாடி (147)** - முனையரையர் என்ற பேருடைய சிற்றரச மரபினரால் ஆளப்பெற்ற நாடு. "நரசிங்க முனையரென் னும் நாடுவாழரசர்" என்னுமாட்சி காண்க. தற்காலம் எறக்குறைய, தென்னாறுகாடு சில்லா இந்நாட்டின் பாப்பாகும்.

**மூலட்டானம் (270)** - திருவாரூர்ப் புற்றிடங் கொண்டார் எழுநதருளியிருக்கும் இடம். திருவாரூர்த் திருமூலட்டான மெனப்படும். தில்லையிற் பொனனம்பலததின வடபுறம் மூலஇலிங்கமூர்த்தி எழுந்தருளி யிருக்குமிடமும் இவவாறே பெயர் பெறும்.

**மெய்ப்பொருணாயனார் (467—472)** - அறுபான் மும்மைத்தனியடியாரு ளொரு வர். சிவவேடததையே சிந்தை செய்யு மியல்பினர். ஆகமப்பிரியர். இராசராசதேவர் இந்நாயனாரது செப்புப்படிமததில் "தத்தா ! நமரே காண் என்ற மெய்ப்பொருணாய னார்" எனப் பொறித்துள்ளார். "இன்னுயிர் செகுக்கக் கண்டும் எம்பிரானனபரென்றே நன்னெறி காத்தவர்". சரிதங் காண்க (பக் - கூ0அ).

**மேருச்சிலை (496—498)** - மகாமேருமலையையே சிவபெருமான் திருபுராதகனத் தில் வில்லாகக் கொண்டனர் எனப.

**யாதவன் (24) - துவரைக்கிறை (24)** - யதுமரபிற் பிறந்தவன் கண்ணன். துவாரகைக்கு அரசன். உபமன்னிய மாமுனிவராற் சிவதீக்கை செய்யப்பெற்றவன். "ஓதிய வாசுதேவர்" என்ற பாட்டில் இச்செய்தியை ஞானசாத்திரமாகிய சிவஞான சித்தியாரில் எடுத்துக் காட்டியிருத்தல் காண்க.

**யோகம்** - சைவபாதங்கள் நான்கனுள் ஒன்று. "முக்கு ணம்புல னைந்துட னடக்கி மூல வாயுவை யெழுப்பிரு வழியைச், சிக்கெ னும்படி யடைத்தொரு வழியைத் திறந்து தாண்டவச் சிலம்பொலி யுடன்போய்த், தக்க வஞ்செழுத தோரெழுத் துருவாந் தன்மை கண்டரு டரும்பெரு வெளிக்கே, புக்கழுந்தின ரோமதுநூப் பெறுவார்; புவியில் வேட்டுவ னெடுத்தமென் புழுப்போல்" - திருவாதவூரர் புராணம். இதனைத யோக மார்க்கம் என்ப.

**வகை** (49) - தொகை நூலை வகைப்படுத்திக் கூறுவது. வகைநூல் என்பர்.

**வானிழல்** (9) - ஆகாயவாணி. இறைவனது அருளிப்பாடாகிய கேட்கப்படும் நிலையினை மேற்கொண்ட திருமேனி.

**விஞ்சையர்** (14 - 290) - ஒருவகைத் தேவச் சாதியார். கானம் வல்லவர்.

**வியாக்கிரபாதர் - புலிக்காலன்** (41) - தில்லையில் திருநடனம் காணும் முனிவருளொருவர். மத்தியந்தன முனிவர் புதல்வர். இவர் சிவபூசை கடைப்பிடித்துச் சிவபெருமானை நேரிற் றரிசித்து வந்தவர். சிவபூசைக்குப் பழுதில்லா மலர் எடுக்க நகங்களிற் கண்களும், மரம் வழுக்காமல் ஏறப் புலிக்காலும் கையும் பெற்றவர். வசிட்டரது உடன் பிறந்தவளை மணந்து உபமன்னியு முனிவரை ஈன்றவர்.

**விறன்மிண்டநாயனுர்** (494—500—501)-அறுபத்துமூன்று தனியடியாரிலொருவர். சுந்தரமூர்த்தி சுவாமிகள் காலத்தவர். வேளாளர்; செங்கண்ணூர் க்ஷேத்திர மானமியம் என்னும் மலையாள நூலின் முகவுரையில் "நாயர்" என்று கூறப்பெறுகின்றனர். நாயனுர் என்பதனை மலையாளர் நாயர் என மருவி வழங்கினா போலும். "நாயனை யடியா னேவுங் காரியம்" - "நாயனு மடிமை நாட்டியதாகும்" என்ற வழக்குக்களும் காண்க. திருவேடத்தினில் உண்மை யனபுடையாராய்ப் பத்தி செய்பவர். திருத்தொண்டத்தொகையால் உலகு விளங்கவரும் பேறு தனக்குக் காரணர். "தியாகேசரும் புறகு" என்று கூறும் திண்மையுடையார். சரிதச் சுருக்கங் காண்க (பக் - ௩௩௪).

**விட்டுணுமூர்த்தி - நெடியோன்** (18)-**மால்** (20—54—126—137)-**மாதவன்** (24)-**அரி**(73)-**வாமனன்** (236)-**செங்கணவன்** (236)-மும்மூர்த்திகளு ளொருவர். திதிக்கடவுளென்பர். நீலவர்ணமுடையாராய், சங்கு சக்கர கதா கோதண்ட நாந்தகதாரியாய், இலக்குமி சமேதராய்த் திருப்பாற்கடற் பள்ளியுடையாராய் வைகுண்டத்தில் எழுந்தருளியிருப்பர். சிஷ்டர்களின் அநுக்கிரகத்தின் பொருட்டும், துஷ்டாகளின் நிக்கிரகத்தின் பொருட்டும் பத்துப் பிறவி யெடுத்தவர். கருடனை யூர்தியாக வுடையவர். சிவபெருமானைத் திரிபுர தகன காலத்து இடபமாய்த் தாங்கியவர். வராகமாய் நிலந்தோண்டிச் சிவனாது திருவடிகளைக் காண முயன்றவர். அயக்கிரீவனைக் கொன்றபின் சார்ங்கம் என்னும் வில்லின்மீது சார்ந்து உறங்குகையில் அவ்வில்லின் நாணற்றுத் தலையிழந்தமையால், இலக்குமி திருவாரூரில் இறைவனைப் பூசித்து மங்கலம் பெற்றதன் பயனாக மீண்டு மெழுந்தவர். மாவலிபால் மண்ணிரந்த சரிதம் முனனர்க் கூறப்பட்டது. கிருட்டிணவதாரத்தில் சிவதீக்கை பெற்றுச் சிவபூசை செய்தவர். இராமாவதாரத்தில் இராவணன்சேனையைக் கொன்ற பழிபோக இராமேசுவரத்தில் இலிங்கந் தாபித்துப் பூசித்தவர். சிவபெருமான் சலந்தராசுரனைக் கொன்ற சக்கரத்தை வேண்டித் தினமாயிரந் தாமரைகளாற் சிவபூசை செய்து, ஓர் நாள் பூவொன்று குறையத், தன் கண்ணொனை யிடந்து அர்ச்சிக்கப், பெருமான் வெளிப்பட, அவரிடம் சக்கரமும் அதைத் தாங்கச் சத்தியும் பெற்ற பேராளர். இதனை "நீற்றினை நிறையப் பூசி" என்ற திருவீழிமிழலைத் திருநேரிசையிற் பாராட்டி யருளினர் அப்பர் சுவாமிகள். (எஞ்சிய பகுதிகள் அந்தந்தத் தொகுதிகளிலுள்ளவற்றைத் திரட்டி எழுதப் பெறும்.)

**வீதிவிடங்கப் பெருமான்** (130—276) - திருவாரூர்த் தியாகேசப் பெருமான். உளிபடாமல் இயன்ற திருவுருவுடையாராயும் திருவீதியில் வருபவராயு முள்ளவர். திருவாரூரினின்றும் போந்து திருமால் மார்பகத்தில் வைத்துத் தியானிக்கத் திருப்பாற் கடலிற் பலகாலம் வீற்றிருந்தார். அங்கு நின்றும் இந்திரன் வேண்டிப் பெற்றுத் தேவலோகத்தில் வைத்துப் பல காலம் பூசிக்க இருந்தவர். பின்னர் முசுகுந்தச் சக்கரவர்த்தியால் மீண்டும் திருவாரூரில் எழுந்தருளி வீற்றிருக்கின்றவர்.

**வீரட்டானம்** (230 - சிவபெருமான் பிரமனது தலையொன்றினைக் கிள்ளியது - அந்தகாசுரனைச் சங்கரித்தது - திரிபுர மெரித்தது - தக்கயாக சங்காரம் புரிந்தது - சலந்தரனைக் கொன்றது - யானை உரித்தது - காமனை எரித்தது - இயமனை உதைத்

*தது - என்ற எட்டுவீரங்கள் செய்த எட்டுத் தலங்கள். இவை முறையே திருக்கண்டியூர், திருக்கோவலூர், திருவதிகை, திருப்பறியலூர், திருவிற்குடி, திருவழூவூர், திருக் குறுக்கை, திருக்கடவூர் என்பன.*

**வெண்ணெய் நல்லூர்** (193—195—196) - **வெண்ணெய் நல்லூராய்** (194) - **வெண்ணெய் நல்லூர்ப் பித்தன்**(205) - *இங்குள்ள திருக்கோயிலுக்குத்* **திருஅருட்டுறை** *என்று பெயர். நம்பியாரூரைத் தடுத்தாட் கொண்ட தலம். தடுத்தாட் கொண்ட நல்லூர் என்றும் கல்வெட்டுக்களில் காணப்படுகின்றது. இவ்வூரில் வழக்குவென்ற திருவம்பலம் குலோத்துங்கச் சோழராற் கட்டப்பட்ட வரலாறு கல்வெட்டுக்களிற் காணப்படும். தலவிசேடங் காண்க* (பக் - உ௫௫).

**வேட்கோவர்** (371—378—380—391—392) - **குலம்** (360-376) - *மண்ணுடையார், குயவர் என்பர்.*

**வேதம்** - **இருக்கு** (260) - **வேதவாரணம்** (340) - **மறைச்சிரம்** (351) - **அரு மறை** (354) - *இவை நான்கு.* இருக்கு - *எசுர் - சாமம் - அதர்வணம் என்பன. வடமொழியி லாக்கப் பெற்றன.* இறைவன் இவற்றைப் *பிரமனுக்கு உபதேசிக்கப், பிரமன் இருடி களுக்கு உபதேசித்தனர் என்பர். மந்திரரூபமாயும் தோத்திரரூபமாயும் உள்ளது.*

**வேதாளம்** (20) - *சிவபெருமானது சிவகணப்பூதப் படைகளில் ஒருவகை.*

**வேளாண் குலம்** (494) - *வேளாளர் மரபு. சில ஆட்சிக்குரிய மரபு. "வேளாள ரென்றவர்கள் வள்ளன்மையான் மிக்கிருக்கும் தாளாளர்" என்று திருஞானசம்பந்த சுவாமிகள் போற்றியது அறிக. இவர்களது மரபு விளக்கம் திருக்குறிப்புத்தொண்ட நாயனார் புராணத்தினும், திருத்தொண்டர் புராண வரலாற்றினும் காண்க.*

**இந்நூலின்**

**திருமலைச் சருக்கம் - தில்லைவாழந்தணர் சருக்கம் - இவைகளிற் கண்ட பெயர்விளக்கம் முற்றும்.**

---

குறிப்பு:—*சிவபெருமான், உமாதேவியார், சரசுவதி, சூரியன், பிரணவம், சிதம் பரம், திருத்தொண்டர், இசைக்கலைப் பெயர்கள், நீதிவழக்குக் கலைப்பெயர்கள், சரியை, கிரியை, யோகம், மாறர், விட்டுணுமூர்த்தி, வியாக்கிரபாதர், குபேரன் முதலிய சில பெயர்கள் நூலிற் காணப்படாதவையாயினும், நூலுட் கண்டவற்றை அவ்வத் தலைப்பின்கீழ்த் தொகுத்து இலகுவிற் காண உதவுவன ; ஆதலின் அவையும் தரப் பட்டன.*



அருண்மொழித் தேவர் எனும்

ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள்

(சோழநாட்டுத் திருநாகேச்சுரத்திலே உள்ள
திருவுருவம்)

" தூக்கு சீர்த்திருத் தொண்டத் தொகைவிரி
வாக்கி னாற்சொல்ல வல்ல பிரானெங்கள்
பாக்கி யப்பய னாப்பதி குன்றைவாழ்
சேக்கி ழானடி சென்னி யிருத்துவாம் "—சிவஞான சுவாமிகள்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# பெரிய புராணம்

என்னும்

# திருத்தொண்டர் புராணம்

## முதற் காண்டம்

## பாயிரம்

### நடராசர் துதி

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம். க

(இதன் பொருள்) *உலகு எலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்* - உலகங்கள் எல்லா வற்றாலும் உணர்தற்கும் ஓதுதற்கும் அரியவனாய்; *நிலவு உலாவிய நீர்மலி வேணியன்* - (அங்ஙனம் அரியவனாயினும் தன்னை யாவரும் எளிதில் கண்டு தரிசித்து உய்யவேண்டும் என்னும் கருணையினால்) மூன்றாம் பிறைச்சந்திரன் உலாவுதற்கு இடமாய்க் கங்கையைத் தரித்த சடையை உடையவனாயும்; *அலகு இல் சோதியன்* - அளவில்லாத ஒளியுரு வுடையனாயும்; *அம்பலத்து ஆடுவான்* - திருத்தில்லையில் திருச்சிற்றம்பலத்தினிடத்தே ஆனந்தத் திருக்கூத்து ஆடுகின்றவனாயும் உள்ள இறைவனுடைய; *மலர் சிலம்பு அடி வாழ்த்தி வணங்குவாம்* - அன்பர் உள்ளத்தே மலர்கின்ற சிலம்பணிந்த திருவடிகளை வாழ்த்தி வணக்கம் செய்வோம்.

(விளக்கவுரை) திருத்தொண்டர் புராணம் : *இறைவனுக்குத் தொண்டுசெய்யும் அடியவர்களது அடிமைத் திறத்தை விரித்துக்கூறும் பெருநூல் என்று பொருள். இது இந்நூலுக்கு ஆசிரியர் தந்த பெயர். பாயிரம் பத்தாவது பாட்டினுட் காண்க. இதனைப் பெரியபுராணம் எனக் கூறுவது உலகிற் பரந்த வழக்கப் பெயராம். செய்தற் கரிய செய்கை செய்த பெரியார் சரிதங் கூறும் நூலாதலின் இவ்வாறு வழங்கலாயிற்று.*

*இது ஒரு பெருங்காப்பியம். அங்ஙனமன்றிப் பல சரிதங்கள் சேர்ந்த ஒரு கோவை எனச் சிலர் எண்ணுவர். அது சரியன்று. சுந்தரமூர்த்திகளைத் தலைவராகவும் பரவையார் சங்கிலியார் என்ற இருவரையும் தலைவியராகவும் கொண்டு அவர்கள் கயிலையிலிருந்து ஒரு காரணம்பற்றிப் பூவுலகத்தில் அவதரித்து, மணந்து, உலகத்தார்க்கு*

அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கு உறுதிப்பொருள்களையும் காட்டி, உணர்த்தி, உய்வித்து மீளவும் திருக்கயிலை சேர்ந்தார்கள் என்பது காப்பியத்தின் உட்பொருள். இதில் தலைவன் தலைவியர் கூட்டம்—பிரிவு—முதலிய அகப்பொருளும், போர் முதலிய புறப்பொருளும், சூரியன் உதயம்—அத்தமனம் ஆகிய பொழுதின் சிறப்பும், பெரும் பொழுது சிறுபொழுது முதலிய பகுப்புக்களும், இன்னும் பெருங்காப்பிய உறுப்புக்கள் முற்றும் சிறப்பாய் அறியக்கிடக்கும். இது பெருங்காப்பியமாகும் விவரங்களை விரிவாக எனது சேக்கிழார் எனும் நூலிற் காண்க.

**முதற் காண்டம் :** இது இந்நூற் பெரும் பிரிவுகளிலே முதலாவது. ஆசிரியர் இந்நூலை இரண்டு பெரும் பிரிவுகளாக வகுத்துள்ளார். நூலின் பெரும் பிரிவு காண்டம் எனப் பெறுவது வழக்கு.

**பாயிரம் :** இது நூலின் முகப்பில் உரைக்கப்படுவது. நூற்பெயர் - வழி - எல்லை - நுதலிய பொருள் முதலிய பொருள்களைக் கூறுவது பாயிரம் எனப் பெயர்பெறும். இதன் இலக்கணத்தை நன்னூல் முதலியவற்றிற் காண்க. " ஆயிரம் முகத்தா னகன்ற தாயினும் - பாயிர மில்லது பனுவ லன்றே " என்பது விதியாகலின் இப்புராணத்திற்கு முதலில் ஆசிரியர் பாயிர முரைத்து வைத்தார்.

**உலகு** என்பது உயர்ந்தோரைக் குறித்து நின்றது ; " உலகெனப்படுவது உயர்ந் தோர் மேற்றே " என்பதிலக்கணம்.

**உணர்ந்து ஓதற்கு அரியவன்** - உணர்தற்கும் ஓதுதற்கும் அரியவன். உணர்தல் மனத்தின் தொழில் ; ஓதுதல் - வாக்கின் தொழில். எனவே, உட்கரண புறக்கரணங்களாகிய கருவிகளின் தொழிலுக்கு அப்பாற்பட்டவன் என்பதாம். " மாற்ற மனங்கழிய நின்ற மறையோன் ", "சொற்பதங் கடந்த தொல்லோன்" (திருவாசகம்), "உணர்ந் தார்க் குணர்வரியோன் " (திருக்கோவையார்), " உரையின் வரையும் பொருளின் அளவும், இருவகைப்பட்ட எல்லையும் கடந்து " (பட்டினத்தடிகள் கோயில்நான்மணிமாலை) என்பனவாதி திருவாக்குகள் காண்க.

இங்குக் குறித்தது இறைவனது சொரூப இலக்கணம். இது சித்தாகிய அவனது அருவத் திருமேனி. உயிர்கள் தமது பசு பாச ஞானத்தால் எட்டுதற்கு அரியவன் என்பது. " அரியானை............யார்க்கும் தெரியாத தத்துவனை......" என்று இந்த அம்பலத் தாடுவானை அப்பர் சுவாமிகள் எடுத்துத் துதித்த கருத்தும் காண்க.

**நிலவு உலாவிய நீர்மலி வேணியன்** - இது இறைவனது தடத்த இலக்கணங் குறித்தது. இஃது அவனுடைய உருவத் திருமேனி. அருவத் திருமேனியிலிருந்து உருவத் திருமேனி தாங்கி வருவது உயிர்களுக்கு அருள்புரியும் பொருட்டு. நிலவும் நீரும் சடையிற் றாங்கிய வரலாறுகள் அவனது அருளைக் குறிப்பன. இவ்வரலாறுகளின் விரிவைக் கந்தபுராணம் முதலியவற்றிற் காண்க. உலவுந் தன்மை யுடைத்தாயிருந்தும் சாபத்தால் வந்த குறைநோய் காரணமாக உலவுதலையிழந்த நிலாவை உலவும்படி வைத்தான் ; ஓடுந் தன்மையுடைய நீரினை ஓடாமல் தங்கவைத்தான், என்று இச் செயல்களின் பெருமை குறித்தவாறு. " நில்லாத நீர்சடைமேல் நிற்பித்தானை - நிலமருவி நீரோடக் கண்டான் றன்னை " (வாகீசர்) என்பனவாதி திருவாக்குகள் காண்க.

உலாவிய என்பது இறந்தகாலங் குறிப்பதாலும் நிலவு, நிகழும்இக்காலத்தும் உலவுதலாலும் இது கால வழுவமைதியாமோ ? எனின் ஆசிரியர் முதற்பாட்டிலே வழுவமைதி அமைப்பாரல்லரே என்று சங்கை கொள்வார் சிலர். நிலா உலாவத் தொடங்கியதொரு முன் காலம். ஆதலின் இறந்த காலத்திற் கூறுதல் வழுவன் றென்க. உலாவிய என்பதனை உலவும் பொருட்டு என்ற பொருளில் வரும் செய்யிய என்னும் வாய்ப்பாட்டு வினை எச்சமாகக் கொண்டு, நிலா உலாவுந் தன்மை பெறுந்

பொருட்டுத் தண்ணிய நீர்மை மலிந்த வேணி என்று உரைத்தலுமாம். உலாவிய என்ற வினை எச்சம் மலி என்ற வினை கொண்டது.

**அலகில் சோதியன் - "சோதி"** - ஈண்டு ஞானவொளி. இவ்வொளி, விளக்க விளங்கும் இல்லக விளக்காகிய சுடர் விளக்கும், பல்லக விளக்காகப் பலரும் காணும் ஞாயிறு முதலிய சுடர் விளக்கும், இந்திரிய அந்தக்கரண ஆன்ம போதமாகிய ஆன்ம விளக்கும், அல்லவாய், இவை எல்லாவற்றையுங் கடந்து, தற்பிரகாசமாயும் பரப்பிரகாசமாயும் நிற்றலான அளவில் சோதியாய், எவற்றிற்கு மேலாக நிற்றலாற் பரஞ்சோதியாய்த், தானே விளங்குதலாற் சுயஞ் சோதியாய், உள்ள பரஞானமான சிவஞானச் சோதி என்றறிக."—கயப்பாககம் - சதாசிவ செட்டியார், B.A., அவர்கள் குறிப்பு. இது இறைவனது அருவுருவத் திருமேனியாம். "திகழ் ஒளியை" என்ற வாகீசர் திருவாக்கும் காண்க. அலகில் - அளவில்லாத, அளவிட முடியாத. பின்னர்த் தடுத்தாட்கொண்ட புராணம் 193-வது பாட்டில் "சோதியா யெழும் சோதியுட் சோதிய" என்ற இடதது உரைக் குறிப்புப் பார்க்க. மேலே கூறிய அருவம் - உருவம் - அருவுருவம் என்ற மூன்று திருமேனிகளையும் தாங்கிய இறைவனே அம்பலத்திலே ஆடுகின்றவன் என்பார். இவற்றிற்கு அடுததபடியிலே **அம்பலத்தாடுவான்** என்று எடுத்துக் கூறினர். அம்பலமும் ஆடும் இயல்பும் பின்னர்க் கூறப்பெறும்.

"உருமேனி தரிததுக் கொண்ட தென்றலும் உருவி றந்த
அருமேனி யதுவுங் கண்டோம் ; அருவுரு வான போது
திருமேனி உபயங் கண்டோம் ; செப்பிய மூன்றும் நந்தம்
கருமேனி கழிக்க வந்த கருணையின் விளைவு காணே"—**சிவஞானசித்தியார்.**

"மன்றி லானஎம் மியல்புனக் குரைக்கின் மாசி லாவுரு மூன்றவற் றருவம்
ஒன்று பேரொளி யொன்றரு வுருவ மொன்று தானரு ளுருவமென் றுணர்வாய்"
—**திருவாதவூரர்புராணம்**

முதலிய ஆதாரங்களைக் காண்க.

"'உலகெலா முணர்ந்தோதற் கரியவன்' என்பதனுன், சொரூப சிவ வியல்பும், 'அலகில் சோதியன்' என்பதனுற் றடத்த விலய சிவவியல்பும், 'அம்பலத் தாடுவான்' என்பதனுன் தடத்த அதிகார சிவவியல்பும், 'நிலவு லாவிய நீர்மலி வேணியன்' என்பதனுன் தடத்த போக சிவவியல்பும் கூறப்பட்டமை யறிகதுகொள்க."—கயப்பாக்கம் சதாசிவ செட்டியார், B. A., அவர்கள் குறிப்பு.

இப்பாட்டிற்கு மேற்கூறியபடி அரியவன்—வேணியன்—சோதியன்—ஆடுவான் என்று நான்காகப் பகுதது உரை கூறுதல் ஒன்று. இவ்வாறன்றி அரியவனுகிச் சோதியன் என்றும் வேணியனுகி ஆடுவான் எனறும் இரண்டாகப் பகுத்து நிரனிறையே கூட்டிப் பொருள் உரைத்தலும் ஆம். இங்ஙனம் கொள்ளும்போது அவனே தானுகி ஏகனுகி நின்று தன்மையிலே கருவி கரணங் கடந்து அறியப்பெறும் நிலை ஒன்றும், கருவி கரணங்களுடன் கூடிய அறிவினுல் முன்னிலையில் அறியப்பெறும் நிலை ஒன்றும் குறித்தவாறு. "உணர்வி னேர்பெற வரும்சிவ போகததை யொழிவின்றி உருவின்கண், அணையும் ஐம்பொறி யளவினு மெளிவர அருளினை எனப்போற்றி" (திருஞான - புரா - 161) என்பதும் காண்க.

**வணங்குவாம்** - என்று உளப்படுத்திக் கூறியதனுல் குருவின்மூலம் படர்க்கையில் அறியப்பெறும் நிலையுமாம்.

**மலர் சிலம்பு அடி** - அடியார் உள்ளததினிடத்தே மலர்கின்ற சிலம்பையணிந்த திருவடி. "மலர்மிசை ஏகினுன்" என்ற திருக்குறளில் ஆசிரியர் பரிமேலழகர் "அன்பால் நினைவாரது உள்ளக் கமலததே - அவர்நினைநத வடிவோடு விரைந்து சேறலின்" என்று கூறியதும் காண்க.

அடியார்களது குவிந்த உள்ளக் கமலங்களை மலர்த்தும் திருவடி என்றுமாம். மலரடி - சிலம்படி என்று தனித்தனிக் கூட்டுக. மலரைச் சிலம்புக்கு அடைமொழி யாக்கி மலர்கின்ற நாத உருவமாகிய சிலம்பு என்பதுமாம். சிலம்பு நாதத்தின் மூலம் தான் இருக்கும் இடமாகிய திருவடியை உணர்த்தி உயிர்களை வந்து அடையும்படி அழைக்கும் குறிப்பு. கழறிற்றறிவார் நாயனார்க்குத் தினந்தோறும் பூசைமுடிவிலே "பூசைக் கமர்ந்த பெருங்கூத்தர் பொற்பார் சிலம்பின் ஒலி யளித்"தமை காண்க. "திருச்சிலம்போசை ஒலிவழியே சென்று, நிருத்தனைக் கும்பிடென் றூர்ந்தீபற" எனும் திருவாக்கும் காண்க.

வாழ்த்துதல் - நாம் வாழும்பொருட்டு. "வாழ்த்துவதும் வானவர்கள் தாம்வாழ் வான்" என்பது திருவாசகம். "நமச்சிவாய வாஅழ்க" முதலிய திருவாக்குகளும் திருப்பல்லாண்டு முதலிய அருட்பாக்களும் இக்கருத்தே பற்றியன.

"வணங்குவாம்" என்றதனால் வணக்கமும், "வாழ்த்தி" என்றதனால் வாழ்த்தும், "மலர்சிலம்பு அடி" என்றதனால் அத்திருவடிகளை எக்காலத்தும் மனத்தே பதித்த அடியார்களது அடிமைத் திறத்தைக் கூறுவது இந்நூல் என்று குறிப்பதாகிய வஸ்து நிர்த்தேசமும் பெறும். திருவடியையே பற்றுக்கோடாகக் கொண்டவர்கள் இப்புராணத்திலே கூறப்பெற்ற அடியார்கள். அதனாலேயே அவர்களுக்கு அடியவர் என்று பெயராம். அடியை வணங்கி அங்கு நிலைபெற்றவரை ஏத்துதல் மரபு. இதன் விரிவைப் பின்னர்த் தடுத்தாட்கொண்ட புராணம் 191 முதல் 194 திருப்பாட்டுக்களின் உரையிற் காண்க.

"உலகெலாம்" என்ற திருவாக்கு சேக்கிழார்பெருமானுக்கு நடேசப் பெருமான் எடுத்துக் கொடுத்த முதல். இம்முதலினையே முதலாக வைத்துக்கொண்டு ஆசிரியர் அத்திருவருளின் வழியே இப்புராணம் பாடி முடித்தனர். இதனைத் திருத்தொண்டர் புராண வரலாற்றிலே உமாபதி சிவாசாரிய சுவாமிகள் விரிவாய்க் கூறியருளியது காண்க. "அருமறை முதலில் நடுவினில் கடையில் அன்பர்தம் சிந்தையில் அலர்ந்த, திருவளர் ஒளிசூழ் திருச்சிற் றம்பலம்" என்றபடி இப்புராணமும் மறையே—வேதமே—யாதலால் இறைவன் தந்ததும் பிரணவ உருவமானதுமான இம்முதலைப் புராணத்தின் முதலாகிய இப்பாட்டிலும், "சோதி முத்தின் சிவிகை..... உய்ய உலகெலாம்" (திருஞானசம்பந்த நாயனார் புராணம் - 216) என்ற இடையிலும், "என்றும் இன்பம்......நிலவி யுலகெலாம்" என்ற இறுதிப்பாட்டிலும் பதித்து வைத்தனர். அதுவேயுமன்றி அடியார்களிடையே திருவருள் வெளிப்படும் அரிய சிற்சில இடங்களிலும் அருமையாக வைத்துள்ளார். ஆங்காங்குக் கண்டுகொள்க.

உலகெலாம் என்பது பிரணவ உருவமுடையது. என்னை? வாய்திறந்த (அங்காந்த) போதே பிறப்பது அகரமாதலாலும் அதுவே எல்லா எழுத்துக்கும் முதலானதாலும் அகாம் பெறப்பட்டது. உலகெலாம் என்றதில் முதல் உகரமும், இறுதி மகர ஒற்றும் ஆக அகர உகர மகரங்களாகிய வியட்டிப் பிரணவ உருவம் இப்புராணத் திருமுறையாம் என்க.

தகர ஆகாயமாகிய சித் ஆகாயத்தைக் குறிப்பதும் "எல்லையிலா மறைமுதல் மெய்யும்" ஆகிய தகரத்துடன் (த்) கூடிய ஓங்காரத்திலே "தோடுடைய" என்று தொடங்கிய தமிழ் வேதம் "நிலவி உலகெலாம்" என்றதில் உள்ள மகர ஒற்றுடன் (ம்) கூடித் தேவார முதற் பெரியபுராண மிறுதியாக உள்ள சைவத் திருமுறை பன்னிரண்டும் மறையேயாய்ப் பிரணவ உருவமுடையன என்பதும் காண்க.

"அரியவன்—வேணியன்—சோதியன்—ஆகி ஆடுவான் அடி வணங்குவாம்" என்று வினைமுடிவு செய்க. உயர்ந்தார்க்கும் அரியவனாயினும் தாழ்ந்தார்க்கு எளியவனாய்த் தன்னை விளங்கக் காட்டும் ஒளியுடன வெளியிலே ஆடுவான். "ஆடுநண்

பொருள் ஆகியும் வெளியே அம்பலத்து நின்றுடுவார்'' (இயற்பகை - 4) எனப் பின்னர் கூறுவதும் காண்க. "ஓதியாரும் அறிவா ரில்லையோதி உலகெலாம், சோதியாய் நிறைந் தான் சுடர்ச் சோதியுட் சோதியான் '' (தேவாரம் - திருஞான - இந்தளம் - திருவை யாறு - 7) என்ற வேதப்பிரமாணமும் காண்க.

மலர் சிலம்படி என்பது வினையுருபு தொக்கதென "நாமேவு மம்முதலொ டொன்றவினை யுருபுதொக, நான்கனடி யாதிசெய்து, நாற்சீரி னுனெறி விளக்கி யொளிர் சேக்கிழார், நற்றமிழ்க் கவிதழையவே '' என்று திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சேக்கிழார் சுவாமிகள் பிள்ளைத்தமிழில் பாராட்டியதைக் காண்க. இக் கலிவிருத்தத்தின நான்காமடி நாற்சீருடையதாய் ஒவ்வொரு சீரும் சைவாகமங் களிலோதிய நாற்பாதங்களாகிய ஞானம், யோகம், கிரியை, சரியை எனும் நெறிகளை விளக்குந் தன்மையதெனப் போற்றப்பட்டது. இவையே சன்னெறி, தோழர்நெறி, மக்கள்நெறி, அடிமைநெறி என்று கூறப்படும்.

இன்னும் இப்பாட்டினுரை விரிக்கில் பெருகும். அறிந்தார்வாய்க் கேட்டுணர்க. இத்திருப்பாட்டினை அடியொற்றியே கம்பர் தமது இராமாயணததில் "உலகம் யாவை யும்'' என்ற கடவுள் வணக்கச் செய்யுள் கூறியிருத்தலும் காண்க. (1)

2. ஊன டைந்த உடம்பின் பிறவியே
தான டைந்த உறுதியைச் சாருமால்
தேன டைந்த மலர்ப்பொழிற் றில்லையுள்
மான டஞ்செய் வரதர்பொற் றாடொழ. ௨

இப்பாட்டினால், மேலே 'மலர் சிலம்படியை வாழ்த்தி வணங்'கியதன் பயன் கூறியவாறு:

(இ - ள்) ஊன்...பிறவியே - ஊன பொருந்திய உடம்புடன் சேர்ந்த மானிடப் பிறவியே; தான்...சாரும் ஆல் - தான் பெற்ற உறுதிப் பொருளை அடையும்; தேன்... தில்லையுள் - தேன் சேர்ந்த மலர்கள் நிறைந்த சோலைகள் சூழ்ந்த தில்லைப்பதியிலே; மாநடம்...தொழ - பெருங் கூத்தைச் செய்கின்ற வரதனுடைய பொற் பாதங்களை வணங்க; தான் தொழப் பிறவி உறுதியைச் சாரும் - என்று கூட்டி முடிவு செய்க.

(வி - ரை) **ஊன் அடைந்த உடம்பின் பிறவி** - மற்றப் பிறவிகளினின்றும் பிரித்து ஊனினால் ஆகிய விசேட உடம்பு பெற்ற மானிடரை உணர்த்திற்று. மரம் செடி முதலிய தாவரங்களும் உடம்பும் பிறவியும் ஆம். ஆயினும் அவ்வுடம்புகள் ஊனடைந்த உடம்புகளல்ல. மற்ற ஆடு முதலிய உயிர்ப் பிராணிகளும் ஊனடைந்த உடம்புடையன. அவற்றுள் சிருட்டிக் கிரமததிலே மேலே வந்த சிறந்த அறிவுக்கு இடமாகிய ஊன் பொருநதிய உடம்பு மானிட உடம்பே யாதலின் இங்குக் குறிததது மானிடப் பிறவியை என்க. இவவாறு அன்றி **ஊன்** உடம்பிற்குப் பொது இலக்கணமாகக் கொண்டு சிறுபான்மை ஈ (ஈங்கோய்மலை), எறும்பு (எறும்பியூர்), கழுதை (காவீரம்), முதலியவை சிவபெருமானைப் பூசிதத செய்தியையும் அடக்கி உரைததலுமாம். ஊன் அடைந்ததே யாயினும் - உறுதியைச் சாரும் என்று உம்மை விரித்துரைக்க. ஆல் - உறுதி குறிக்கும் அசைமொழி.

**உடம்பின் பிறவி** - உடம்பிற்குள் வந்த உயிர் எடுதத பிறவி.—**தான் அடைந்த** - அந்தந்த உயிரின் பக்குவ நோக்கிப் பிறவி தரப்பெற்றதனாலுண்டாகிய.—**உறுதி** - பிறந்த பயன். தானடைய நின்ற உறுதி என்று முரைப்பர்.

"மானிடப் பிறவி தானும் வகுத்தது மனவாக் காயம்
ஆனிடத் தைந்தும் ஆடும் அரன்பணிக் காக அன்றே

வானிடத் தவரும் மண்மேல் வந்தரன் றனையர்ச் சிப்பர்
ஊனெடுத் துழலும் ஊமர் ஒன்றையும் உணரார் அந்தோ ''
—சிவஞான சித்தியார்.

என்ற சாத்திரமும் காண்க.

இறைவனுடைய அடியைத் தொழுதலே மனிதர் பிறந்து அறிவு படைத்ததன் பயனாகும் என்பது

"கற்றதனா லாயபயன் என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின் ''

எனும் திருக்குறள் முதலிய பிரமாணங்களாலும் அறிக.

"கால்கொடுத் திருகை ஏற்றிக் கழிநிறைத் திறைச்சி மேய்ந்து
தோல்படுத் துதிர நீராற் சுவரெடுத் திரண்டு வாசல்
ஏல்வுடைத் தாவ மைத்தங் கேழுசா லேகம் பண்ணி
மால்கொடுத் தாவி வைத்தார் மாமறைக் காட னாரே ''

எனும் தேவாரத்திலே அப்பர் சுவாமிகள் மனிதர்கள் ஊனடைந்த உடம்பின் பிறவி தானடைந்த தன்மையை விரித்துக் கூறுவது காண்க. **ஊன்** என்று தொடங்கியது அதன் உண்மைத்தன்மை காட்டி வெறுக்கை தோன்றற்காக.

**தொழு...சாரும்** - தொழப்பெறுமானால் பிறவி உறுதியைச் சாரும்.—**வரதர் பொற்றாள்** - வரதருடைய மாநடஞ்செய் பொற்றாள் என்று நடஞ்செய்தலைத் **தாள்** உடன் கூட்டி யுரைத்தலும் ஒன்று. **வரதன்** - வரங்கொடுப்பவன். **பொன்தாள்** - அழகிய பாதம். இது தூக்கிய திருப்பாதம்.

"......எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே ''

என்று இதனையே அருளினார் அப்பர் சுவாமிகள்.

ஊன் அடைந்து வெறுக்கத் தக்கதேயாயினும் இக்காரியம் செய்யுமாயின் விரும்பத்தக்கதாம் என்றபடி.

**தேன் அடைந்த** - தேன் அடைந்த மலர் - தேன் அடைந்த தில்லை - தேன் அடைந்த நடம் - தேன் அடைந்த பொற்றாள் - என நால்வழியும் பிரித்துக் கூட்டி உரைத்துக்கொள்ளலாம்.

"அந்த இடைமருதில் ஆனந்தத் தேன்இருந்த
பொந்தைப் பரவிநாம் பூவல்லி கொய்யாமோ ''

என்பது திருவாசகம். ஆதலின், நடராசரையே தேன் என்றுரைத்தல் ஒன்று. "இம்மலைப் பெருந்தேன் சூழ்ந்து '' என்று பின்னர்க் கண்ணப்ப நாயனார் புராணத்துக் குறிப்பிடுதலும் காண்க.

"..................ஆனந்தத் தேனசொரியும்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பி ''

என்று திருவாசகத்திற் காண்கின்றபடி தேன் அடைந்த (நடஞ்செய்) தாள் என்பதுமாம்.

**ஊன்** - ஊனம், குற்றம் என்று பொருள்கொண்டு மலமாகிய குற்றத்தினால் உயிர் தூர் உடம்பினுட் பிறந்த பிறவி என்றுரைத்தலுமாம்.

முதற்றிருப்பாட்டிலே 'மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்' என்றார். அதன் பயன் யாது? என்பார்க்கு அந்த நடஞ்செய் பொற்றாள் தொழ பிறவியே உறுதி சாரும். வேறு என்னதான் கிடையாது? என்று இப்பாட்டினால் விடைகூறியவாறு. (2)

3. எடுக்கு மாக்கதை யின்றமிழ்ச் செய்யுளாய்
நடக்கும் மேன்மை நமக்கருள் செய்திடத்
தடக்கை யைந்துடைத் தாழ்செவி நீண்முடிக்
கடக்க ளிற்றைக் கருதது ளிருத்துவாம். ௩

இது விநாயக வணக்கம்

(இ - ள்) எடுக்கும் மாக்கதை - உயிர்களை மலமாகிய சேற்றிலிருந்து எடுக்கும் தன்மையுடைய இப்பெரிய புராணம்; இன் தமிழ்ச் செய்யுளாய் - இனிய தமிழ்ப் பாட்டுக்களாக; நடக்கும்...செய்திட - இனிது நிறைவேறி உலகில் நிலவுகின்ற மேன்மையை நமக்கு அருள்செய்யும் பொருட்டு; தடக்கை ஐந்துடைத தாழ்செவி நீள்முடி - ஐந்து தடக்கைகளையும் தாழ்ந்த செவிகளையும் நீண்ட முடியினையும் உடைய; கடம் களிற்றைக் கருத்துள் இருததுவாம் - மதயானை முகமுடைய விநாயகக் கடவுளை மனதிலே பதிய வைப்போம்.

(வி - ரை) எடுக்கும் மாக்கதை - ஆன்மாக்களைப் பாவங்களாகிய குழியிலிருந்து மேலே எடுத்து உயர்த்தவல்லதாய்ச் சரிதங்களிற் சிறந்தது. "என்னை இப்பவததிற் சேரா வகை எடுத்து" என்ற திருவாக்கும் காண்க.

எடுக்கும் - மேற்கொண்டு தொடங்குகின்றதாகிய என்றுரைத்தலுமாம். மாக்கதை- பெரிய கதை; பெரியபுராணம் என்க. இப்புராணம் பல சரிதங்களின் கோவையன்று என்பதும் இஃது பெருங்காப்பியமாய்த் தொடர்நத ஒரே சரிதம் என்பதும் முன்னரே கூறப்பெற்றது. ஆதலின் மாக்கதை என ஒருமையிற் கூறியவாறு. இதனுள் அங்கமாக எல்லாத் தொண்டர் சரிதங்களும் பொருந்துவன ஆதலின் மாக்கதை என்று ஒருமையிற் கூறியவாறுமாயிற்று. இதுவும் ஆசிரியர் கருதிய பெயரே என்பர்.

செய்திடத் தடக்கை ஐந்துடைத் தாழ்செவி. செய்திட - செய்யும் பொருட்டு என்று உரைக்க. அன்றியும், செய் - செய்கின்ற; திட - தட - கை - திடமுடைய பெருங்கை என்றுரைத்தலுமாம். அடியார்களது வலிய வினைகள் யாவையும் போக்கி அருள் புரிவதற்குத் திடமும் பரப்பும் பொருந்திய ஐநது கைகளும், அவர் குறை கேட்டருளச் சித்தமாய்த் தாழ்ந்த செவியும் உடையார் எனக.

இஃது, தொடங்கி எடுத்துக்கொண்ட நூல் இடையூறு இல்லாமல் இனிது முடியும் பொருட்டு நூன்முகத்திலே செய்யப்பெறும் விநாயக வணக்கம். இந்நூலுக்கு "மெய்ம்மொழி வானிழல் கூறிய பொருளாய்" "உலகெலாம்" என்று அடி எடுதது கொடுத்தார் நடராசர். ஆதலின் அவரை முதலில் வணங்கி அதன்பின் நூல் தொடங்குகின்றார் ஆதலின் இதுவே நூன்முகமாயிற்று.

அன்றியும் சாக்கிரத்திலே அதீதத்தைப் புரிய வல்லவர் ஆசிரியர் சேக்கிழார் பெருமான். ஆதலின் அவர்க்கு இடையூறு சிறிதும் அணுகாது என்பதை அறிந்து வைத்தாராயினும் ஆன்றோர் ஆசாரம் பாதுகாப்பதற்கும் உலகுக்கு அறிவுறுத்தற்குமாக இங்கு விநாயக வணக்கம் செய்தார் என்பதுமாம். மேலும் ஒளி வட்டத்தின் உள்ளே விளங்கும் நடேசப் பெருமானை (பிரணவ உருவமுடையவராக) வணங்கவே எல்லா மூர்த்திகளையும் வணங்கியபடியாம். விநாயகப் பெருமான் தம்மை நினைப்பவர்களுக்கு வரும் எல்லா இடையூறுகளையும் போக்கி அவர்கள் எடுத்த காரியங்களையும் இனிது முற்றுவிக்கும் தன்மை யுடையவர். அது இறைவனது திருவாணை.

"என்னரே யாயினும் யாவதொன் றெண்ணுதல்
முன்னரே உனதுதாள் முடியுறப் பணிவரேல்

அன்னார்தஞ் சிந்தைபோல் ஆக்குதி அலதுனே
உன்னலார் செய்கையை ஊறுசெய் திடுதிநீ ''

என்பது கந்தபுராணம். இன்னும் விநாயகர் வரலாறுகளைக் கந்தபுராணத்துட் காண்க. விக்கினங்களை எல்லாம் (இடையூறுகளை) போக்குகின்றவராதலின் விக்கின விநாயகர் என்று அவருக்குப் பெயராயிற்று. ''குமாரனும் விக்கின விநாயகனும்'' என்பது தேவாரம்.

**தடக்கை ஐந்து** - பண்ணியம் (மோதகம்) ஏந்தியது ஒருகை. இதனைத் தமக்காகப் பயன்படுத்திக் கொள்வர்; ஒரு கை இரத்தின கலசம் ஏந்தியது; இதனைத் தந்தை தாயர்க்கு உபசாரத்தின் பொருட்டு ஆக்குவர்; ஒரு கை தமது ஒடித்த கொம்பினைத் தாங்கியது. இதைக் கயமுகாசுரனைக் கொன்று தேவர்களுக்கு அருள்புரியப் பயன் படுத்தினர். மற்ற இரண்டு கைகள் பாசமும் அங்குசமும் தாங்கியவை. இவ்விரண்டு கைகளையும் உயிர்களைக் கட்டுப்படுத்தும் ஆணவமாகிய மத யானையை அடக்கி உயிர் களைக் காப்பதற்காகப் பயன்படுத்துவர். இவ்வாறு தமது கைகள் ஐந்தில் மற்றவர் களுக்கு ஒவவோர் கையும் கருணையினல் உயிர்களுக்காக இரண்டு கைகளையும் வைத் தார் என்று இவரது கருணைப்பெருக்கைக் கச்சியப்ப முனிவர் தணிகைப் புராணத் திலே ''பண்ணிய மேந்தும் காந்தனைக் காக்கி'' என்று பாராட்டியிருத்தல் காண்க.

**கடக்களிறு** - கடம். யானைக்கு உரியது மூன்று மதம் - இங்கே விநாயக மூர்த்திக் குத் தலை ஒன்றுமே யானை உருவுடையதாதலால் கன்னமதம் கபோலமதம் எனும் இரண்டுமே கொள்ளப்படும். பெரும்பான்மைபற்றி மும்மதத்தன் என்று உபசரிப்ப தும் வழக்காம். முருகப்பெருமானுடன் வள்ளிப்பிராட்டியாரைச் சேர்த்தற் பொருட்டு யானை உருவத்தோடு எழுந்தருளியபோது மும்மதத்தன் என்ற பேர் முழுதும் பொருந்த இருந்தமையும் உணரப்பெறுவதாம்.

**இன் தமிழ்** - இனிமை என்ற பெயரும், இனிய பொருளும் உடைமையினல் இன் தமிழ் என்றார். சொல்லாலும் பொருளாலும் இனியது. சொல்லால் இனிமை இலக்கணங்களாலும், பொருளால் இனிமை இறைவனைச் சுட்டிக் காட்டுகின்ற இயல்பா லும் உணர்க. இன் தமிழ் என்றும் இன் செய்யுள் என்றும் கூட்டலுமாம். (3)

வேறு

4. மதிவளர் சடைமுடி மன்று ளாரைமுன்
துதிசெயும் நாயன்மார் தூய சொன்மலர்
பொதிதலன் றுகர்தரு புனிதர் பேரவை
விதிமுறை உலகினில் விளங்கி வெல்கவே. ௪

இது திருக்கூட்ட வாழ்த்து

**(இ - ள்)** மதிவளர்...உளாரை - பிறை வளர்தற்கு இடமாகிய சடையையுடைய திருச்சிற்றம்பலவாணரை; முன் துதி செயும் நாயன்மார் - கினைந்து துதித்துச் செயல் செய்யும் நாயன்மார்களுடைய; தூய...பேரவை - தூய சொன்மலரின் நலத்தை அனு பவிக்கும் தூயவர்கள் நிறைந்த அடியார் பெருந் திருக்கூட்டமானது; விதிமுறை - இறைவன் ஆணை வழியே; உலகினில் விளங்கி வெல்கவே - உலகில் விளக்கமடைந்து வெற்றி பெறுவதாக.

**(வி - ரை)** மதிவளர் சடை - மதியை வளரச்செய்து இடமும் கொடுத்த சடை. மதிவளர் மன்றுளார் எனக் கூட்டித் தம்மை யடைந்தார்க்கு நாளுநாளும் நல்லறிவு வளரச்செய்யும் இறைவன் என்றுரைத்தலுமாம். ஆணவமல மறைப்பிலே கிடக்கும்

உயிர்களுக்கு இறைவன் நல்அறிவு விளக்கம் செய்து தன்னை அடையும்படிச் செய்கின்ருன் என்பது சாத்திரமாம். "நல்லறிவையும் வகுத்து" என்ருர் தாயுமானுர்.

**முன் துதி செயும்** - முன் - நினைக்கின்ற, துதி - துதிக்கின்ற, செயும் - செய்கின்ற என மூன்ருகப் பகுத்து மனம் வாக்குக் காயம் என்ற மூன்ருலும் பணிசெய்கின்ற நாயன்மார் என்க. முன் - முன்னே என்று உரைத்தலும் ஒன்று. அடியவர்கள் தேவர்க்கும் ஏனைய எல்லாருக்கும் முன்னே சென்று நின்று துதிக்கும் உரிமையுடையவர். "தொண்டர்கள்பின் உம்பர்சூழாம் மல்குதிருக் காளத்திமாமலை" என்பது திருநாவுக்கரசு நாயனுர் புராணம் - 343. இப்பொருளில் துதிசெயும் - துதிக்கும் என்க.

**நாயன்மார்** - தலைவர்கள். அடியார்கள். சிவபெருமானது திருவடிசம்பந்தமுடையவர்களே ஏனை யாவர்க்கும் தலைவராவார் என்ற உண்மைப்படி அடியவர்களே நாயன்மார் (தலைவர்) என்று பெயர்பெறுவர். நாயனுர் என்பது எல்லார்க்குந் தலைவராயினமை பற்றிச் சிவபெருமானுக்கே உரிய பெயர். அவர் பெயர் அவரைச் சார்ந்த அடியவர்க்குமாயிற்று.

"அழகிது நாயனீரே அமுதுசெய் தருளும்" என்ருர். (கண் - புரா - 125.) "அயவந்தி யமர்ந்த நாயனுரையும் அருச்சனை புரிந்திட நயந்தார்" (திருநீலநக்க நாயனுர் - புரா - 7.) "நாயனு மடிமை காட்டிய தாகும்" (அகத்தியர் தேவாரத் திரட்டு.) "தில்லை நாயனுரை நயந்துரை செய்தன" (சேதிராயர் திருவிசைப்பா - 10.) முதலிய திருவாக்குகள் காண்க.

**புனிதர்** - உள்ளும் புறம்பும் தூய்மையுள்ளவர்கள். "மாசிலாத மணிதிகழ் மேனிமேற், பூசுநீறுபோல் உள்ளும் புனிதர்கள்" (திருக்கூட்டச் சிறப்பு.) "அகந்தூய்மை வாய்மையாற் காணப்படும்" என்பது குறள். இராசத தாமத குணங்களின் தொழில் ஒழிந்து சத்துவ குணத் தொழில் மிகுந்தவர்கள்.

**நாயன்மார் தூய சொல் மலர் போதி நலன் நுகர்தருத லாவது** - நாயன்மார்கள் அருளிய தூய தேவாரம் திருவாசகம் முதலிய தூய சொற்களாகிய மலர்களிலே பொதிந்த நலமாகிய சிவபெருமானது புகழ்ச் சிறப்புக்களை எண்ணி எண்ணித் திளைத்து அனுபவித்தல். **மலர்ப்போதி** - மலர்களாகிய சுமைகளினுடைய என்று உரைத்தலுமாம். பொதி - சுமை. "அப்பொதி கொடுப்பக் கொண்டு" (குங்கிலியக்கலயர் புராணம். 12.) நாயன்மார்களைப் பற்றிய தூயசொல் என்றுரைப்பினும் அமையும். துதிசெயும் நாயன்மாரும் அந்தத் துதிகளாகிய தூய சொன்மலர் நலனுகர் புனிதரும் நிறைந்த பேரவை என உம்மைத் தொகையாக்கி உரைத்தலுமாம். நுகர்தரு - ஒரு சொல். அதை (நுகர் புனிதர் - தரு புனிதர் என) இரண்டாக்கித் தாமும் நுகர்ந்து பிறர்க்கும் தரும் புனிதர் என உரைக்கினும் அமையும்.

**பேரவை** - அடியார்களது திறங்களை அனுபவிக்கும் பெருஞ் சபை. பெருந் திருக்கூட்டம் - இச்சபை இறப்பு, நிகழ்வு, எதிர்வு எனும் முக்காலத்தும் நிகழ்வதாதலாலும் அளவின்மையாலும் பெருஞ் சபையாயிற்று. நுகர்தரு புனிதர் என மூன்று காலத்துக்கும் பொருந்தும் எச்சத்தாற் குறித்ததும் காண்க. ஆதலின் பேரவை என்ருர். அளவின்மை வரும் பாட்டிற் காண்க. இச்சபை எக்காலத்தும் எவ்விடத்தும் நிகழும் தன்மை

"மூவேந்தர் தமிழ்வழங்கும் நாட்டுக் கப்பால்
முதல்வனுர் அடிச்சார்ந்த முறைமை யோரும்
நாவேய்ந்த திருத்தொண்டத் தொகையிற் கூறும்
நற்ருெண்டர் காலதது முன்னும் பின்னும்........" என்பதனுற் காண்க.

—அப்பாலுமடிச்சார்ந்தார் புராணம்

**விளங்கி வேல்கவே** - விளக்கமும் வெற்றியும் பொருந்துவதாக என்க. விளக்கம் பெறுதல் உலகத்താராற் போற்றப் பெறுதல்; வெற்றி பெறுதல் - மேலோங்கி நிற்றல். "வேகங் கெடுத்தாண்ட வேந்த னடிவெல்க" முதலாகத் திருவாசகத்திலே இறைவனது திருவடிகள் வெல்க - வெல்க என்று பன்முறையும் வாழ்த்திப் போற்றியது காண்க.

**வேறு**

5. அளவி லாத பெருமைய ராகிய
அளவி லாவடி யார்புகழ் கூறுகேன்
அளவு கூட வுரைப்பரி தாயினும்
அளவில் ஆசை துரப்ப வறைகுவேன். ௫

**இதுமுதல் மூன்று திருப்பாட்டுக்கள் அவையடக்கம்.**

அவையைத் தன்னுள்ளே அடக்குதல். தன்னைத் தாழ்த்தலால் அவை அடங்கு மென்பது. "வலிதன்றே தாழுந்துலக்கு" என்ற கருத்தும் காண்க.

**(இ - ள்)** அளவு...கூறுகேன் - அளவற்ற பெருமைகளை யுடையார்களாகிய அளவில்லாத அடியார்களது புகழ்களை எவ்வாறு எடுத்துச் சொல்ல வல்லேன்; அளவு கூட உரைப்பு அரிது - அவற்றை அளவு கூடும்படிச் சொல்லுதல் அரிது; ஆயினும் - இருந்தபோதிலும்; அளவு இல் ஆசை துரப்ப அறைகுவேன் - (என் மாட்டாமையை அறிந்து தடுத்தேனாயினும் தடுக்க ஒண்ணாதபடி) அளவற்ற ஆசை (என்னைச் சொல்வாயாக என்று) துரப்பதனாலே சொல்லத் துணிகின்றேன்.

**(வி -ரை)** அளவிலாத பெருமை - மேற்பாட்டிலே "தெரிவரும் பெருமை", "பொருவருஞ் சீர்" என்று விதந்து பேசப்பட்டது. இப்பெருமைகளின் விரிவைப் பின்னர்த் 'திருக்கூட்டச் சிறப்பு' என்ற பகுதியிற் காண்க. பெருமை - செயற்கரும் செய்கை செய்வது.

அளவிலாசை - பேராசை. வருகின்ற பாட்டில் பெருநசை என்பது காண்க. தனது தகுதிக்கு மீறிய செயல் செய்வேன் என்று எழும் ஆசை.

துரப்ப - தூண்ட. தூண்டுதலினால் சொல்லப் புகுந்தேன்.

அளவு கூட - அளவு கூடும்படியாக; அளவிட்டு - அளவுபடுத்தி என்பது. (5)

6. தெரிவ ரும்பெரு மைத்திருத் தொண்டர்தம்
பொருவ ருஞ்சீர் புகலலுற் றேன்முற்றப்
பெருகு தண்கட லூற்றுண் பெருநசை
ஒருசு ணங்கனை யொக்குந் தகைமையேன். ௬

**(இ - ள்)** முற்றப் பெருகு...உண் - பெருத்த அமிர்தமாகிய பாற்கடலை ஊற்றுக் காண உண்ணவேண்டும் என்கிற; பெருநசை...தகைமையேன் - பேராசை கொண்டதொரு நாயினைப் போல்கின்ற தன்மை யுடையேன் யான்; ஆதலின், தெரிவு அரும் பெருமை திருத்தொண்டர்தம் - அறிதற்கரிய பெருமை வாய்ந்த திருத்தொண்டர்களுடைய; பொருவருஞ்சீர் புகலலுற்றேன் - ஒப்பற்ற சீர்களை எடுத்துச் சொல்ல முற்படுகின்றேன்.

**(வி - ரை)** முற்றப் பெருகு - இதற்குமேற் பெரிதில்லை என்று அளவு மிகவும் பெருகிய.

**கடல் ஊற்று உண் பேருநசை** - சிறு ஊற்றை உண்டு வற்றச்செய்து விடுவது போலே கடலாகிய இதனையும் (ஊற்றுக்காண) உண்டு வற்றச்செய்து விடுவோம் என்ற பேராசை. சிறிது சிறிதாக நக்கி உண்பதல்லாமல் ஒரு சேர உண்ண முடியாததால் நாயைக் கூறியவாறு. பேராசையும் அதனாலே விளங்கும் - மேற்பாட்டில் அளவில் ஆசை என்றமை காண்க. இதனையே கம்பர் "பூசை முற்றவும் நக்குபு புக்கென" என்றமை காண்க.

**ஒரு சுணங்கனை ஒக்கும் தகைமையேன்** - சுணங்கன் - நாய். நாயை ஒக்கும் தன்மையுடையேன். நாயைப்போல என்று உவமித்தார் - நாயினேன் என்று உருவக மாகக் கூறாது உவமமாகக் கூறினர். கட்டுப்பட்ட காலம் தவிர மற்றைக் காலத்திலே மலமருந்துதல் முதலிய துர்க்குணமுடையது நாய். மனிதர் நற் கூட்டத்தின் நீங்கிய உடன் இழி செயல் செய்வர் - நாயாயிருந்தால் அந்த இழிகுணம் அதன் இயல்பென் பர். நாய் அல்லாதிருந்தும் அதுபோன்ற இழிகுணமுடைமை மிக்க இழிவு என்பார் உருவகமாக்காது உவமமாகக் கூறினர் போலும்.

**தெரிவரும் பெருமை** - பின்னர்த் திருக்கூட்டச் சிறப்பில் காண்க. "மண்பா தலம்புக்கு......"; "வானர்த்துளங்கிலென்........."; "எங்கெழிலென் ஞாயிறு"; "வடகோ டயர்ந்தென்ன......" முதலிய திருவாக்குகளிலும் காண்க.

**தொண்டர்** - தொண்டு செய்வோர். இறைவனுக்கும் அடியார்க்கும் பலவகையா லும் அடிமைசெய்தலைத் தவிர வேறு ஒன்றும் செயல் செய்யாதவர்.

தண்கடலூற்றும் என்று பாடமாயின், ஊற்றும் - கவிழ்க்கும் எனப் பொருள் கொள்க. கடலையே கவிழ்க்கும் பேராசை என்க. (6)

7\. செப்ப லுற்ற பொருளின் சிறப்பினால்
அப்பொ ருட்குரை யாவரும் கொள்வரால்
இப்பொ ருட்கென் உரைசிறி தாயினும்
மெய்ப்பொ ருட்குரி யார்கொள்வர் மேன்மையால். எ

(இ - ள்) செப்பல்...சிறப்பினால் - சொல்லாற் பெறப்படும் பொருள் சிறந்ததானல், அதனைச் சொல்லும் சொல் சிறந்ததல்லாவிட்டாலும் அதுபற்றி யிகழாது பொருளின் சிறப்பையே நோக்கி; அப்பொருட்கு...கொள்வர் ஆல் - அப்பொருளைச் சொல்லும் சொல்லை யாவர்களும் கைக்கொள்வர்; (அதுபற்றியே) இப்பொருட்கு...ஆயினும் - இதனுள்ளே குறித்த அடியார் புகழ்களாகிய பெரும்பொருளுக்கு எனது சொல் சிறி தேயானாலும்; மெய்பபொருட்கு...மேன்மையால் - உண்மைப் பொருளையே உணரும் உரிமையுடைய பெரியோர் இதனை அந்த மேன்மையே கருதி யிகழாது கைக்கொள்வர்.

(வி - ரை) இப்பாட்டில் முதலிரண்டடிகளிற் கூறியது ஒரு பொது உண்மை. அவ்வுண்மையைப்பற்றி என்உரையும் கொள்வர் என்று அவை அடக்கம் கூறியவாறு.

**செப்பலுற்ற பொருள்** - ஒருவன் சொல்லப்புகுந்த பொருள். இவ்வாறன்றிப் பொருள் என்பதை மக்கள் என்று கொண்டு, மக்களின் சிறப்பு நோக்கி அவர் வாயில் உரைக்கும் பாச்சி - சோச்சி முதலிய உரையும் கொள்ளுவர் என்றுரைப்பாரு முளர். "தம்பொருள் என்ப தம்மக்கள்"—குறள்.

**மெய்ப்பொருட்கு உரியார்** - உண்மை காணும் விருப்புடைய பெரியோர். பிறர் (பொய்ப்பொருள கருதுவோர் முதலிய பிறர்)கொள்ளாவிடினும் இவர் கொள்வர் என்க.

"தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்
எம்மை யுடைமை எமையிகழார்—தம்மை
உணரார் உணரார் உடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்" என்பது.—சிவஞானபோதம்.

**மேன்மையால்** - பொருளின் மேன்மையால் என்க. தங்கள் மேன்மையால் என்றுரைப்பினுமாம். **அப்பொருட்கு உரை** - அப்பொருளை உரைக்கவந்த உரை. உரை பொருளுக்கு ஏற்பத் தகுதியற்றதாயினும் என வருவித்துரைக்க.

**இப்பொருட்கு** - இந்தப் புராணத்திற் போந்த பொருளுக்கு. "எப்பொருள் யார் யார்வாய்க் கேட்பினும் அப்பொருள், மெய்ப்பொருள் காண்பதறிவு" என்ற திருக்குறட் சொல்லையும் கருத்தையும் இங்கு வைத்து நோக்குக. (7)

8. மேய விவ்வுரை கொண்டு விரும்புமாம்
சேய வன்றிருப் பேரம்பலம் செய்ய
தூய பொன்னணி சோழனீ டூழிபார்
ஆய சீர்அந பாய னரசவை. அ

(இ - ள்) சேயவன்...சோழன் - செம்மேனி எம்மானாகிய நடராசப் பெருமானுடைய திருப்பேரம்பலமாகிய சபையைப் பொன்னினால் மெழுகி வேய்ந்து அணி செய்த சோழர் பெருமானாகிய; நீடூழி...அநபாயன் - உலகிலே நீடூழி நிலைத்துப் புகழும் சிறப்பும் உடைய அநபாயச் சோழச் சக்கரவர்த்தியாரது ; அரசு அவை மேய...ஆம் - அரச சபையானது (மேலே கூறியபடி சிறந்த பொருளைத் தன்னுள்ளே) மேவப் பெற்றதால் இவ்வுரையை ஏற்றுக்கொண்டு விருப்பத்துடன நிகழச் செய்வதாகும்.

(வி - ரை) ஆம் - (விரும்பும். ஆதலின்) இது ஆகும். ஆவதாம் - செய்யப்பெறுவதாயிற்று என்று இந்நூல் செய்தற்குரிய காரணம் கூறினார். அநபாயச் சோழர் செய்க எனக் கேட்டபடியே ஆசிரியர் செய்தனர் என்ற வரலாறு திருத்தொண்டர் புராணத்திலே உமாபதி சிவாசாரியார் விரிவாய்க் கூறியருளினார். அங்குக் காண்க. அநபாயன் அரசவை இவ்வுரை கொண்டு விரும்பும் என்று கூட்டி முடிக்க.

**பேரம்பலம் செய்ய தூய பொன்அணி சோழன்**-இப்புராணம் பாடுவித்த அநபாயர் என்ற குலோத்துங்கச் சோழர் II தில்லையிலே பேரம்பலத்திற்குப் பொன் வேய்ந்தார் என்பது *கல்வெட்டுகளாலும் அறியப்பெறும் உண்மை.ஆசிரியரது காலத்தை நிச்சயம் செய்யக் கிடைக்கும் சரித ஆதரவுகளில் இது ஒன்று. இங்குக் கூறிய "பேரம்பலம்" என்றற்குச் சிற்றம்பலம் என மயங்கிக்கொண்டு உரை கூறுவாரும் உளர். சிற்றம்பலம் வேறு ; பேரம்பலம் வேறு ; இரண்டும் வெவ்வேறாய் இறைவன் எழுந்தருளியிருக்கும் தனியிடங்கள் என்பது தில்லையிற் சென்று கூர்ந்து தரிசித்தார்க்கு நன்கு விளங்கும். முதலாவது குலோத்துங்கச் சோழர் (இரண்டாவது குலோத்துங்கருடைய பாட்டனார்.) சிற்றம்பலம் பொன்வேய்ந்தார். இரண்டாவது குலோத்துங்கர் மீண்டும் சிற்றம்பலத்தில் பொனவேய்தற்கு இடமில்லாமையால் பேரம்பலத்தைப் பொன்வேய்ந்தார். அன்றியும், தமது அன்பு மிகுதியினால் தில்லை எல்லையிலும் திருவீதிகளிலும் அவ்வாறே பொன்மயமாக்கும் பல திருப்பணிகளும் செய்தனர் என்பது ஆசிரியர் பின்னர்க் கூறுவனவற்றால் விளங்கும்.†

"சென்னி, அபயன, குலோத்துங்கச் சோழன், தில்லைத் திருவெல்லை
பொன்னின் மயமாக்கிய வளவர் போரேறு, என்றும் புவிகாக்கும்
மன்னர் பெருமான், அநபாயன்"—சண்டீசர் புராணம் - 8.

---

*திருப்புறம்பயம். 1927 - 350 இலக்கமுள்ள கல்வெட்டினால் விக்கிரம சோழ வளநாட்டின் அரசரான குலோத்துங்கர் பேரம்பலம் பொன்வேய்ந்தமை தெரிகின்றது.

†இதன் விரிவு, எனது 'சேக்கிழார்' என்னும் நூலில் 12 முதல் 23 பக்கங்களிற் காண்க.

" மன்னுதிருத தில்லைநகர் மணிவீதி யணிவிளக்கும்
சென்னி, நீடு அநபாயன்,..............."—புகழ்ச்சோழ நாயனார் புராணம்-8.

கோண்டு விரும்பும் அநபாயன் அரசவை என நிகழ்காலத்திற் கூறியதனால் இப் புராணம் அவ்வரசன் முன்னர்ச் சபையில் கேட்கப்பெற்றதென்பதும் பெற்றாம். நீடூழி பார் ஆயசீர் அநபாயன் - இப்போது அநபாயர் உலகை ஆள்கின்றார். 'அவர் அரசு நீடூழி நிலை பெறுக. அதன்கீழ் உலகம் ஆகுக. (ஆக்கம் பெறுக) என்று இப்புராணம் பாடுவித்த உபகாரத்தின் பொருட்டு வாழ்த்துக் கூறியவாறுமாயிற்று. "வேந்தனு மோங்குக" என்ற தேவாரமும் காண்க.

"...வையம் பொதுக்கடிந்து இனிது காக்கும்
கோற்றவன் அநபாயன் பொற்குடைநிழற் குளிர்வது........."
—திருநாட்டுச் சிறப்பு - 35.

என்ற இடத்திலேயும் அந்நாளிற் சோழவளநாடு அநபாயருடைய ஆளுகையில் வாழ் கின்றதாக நிகழ்காலத்துக் குறித்ததும் காண்க. பாடுவித்த அரசன் சிறப்பை வாழ்த்திய தும் நன்றிபாராட்டியதும் ஆம். இக்கருத்துப் பற்றியே ஆசிரியர் அநபாயருடைய பெயரை இப்புராணத்துள்ளே பதினொரு இடங்களில் அமைத்துள்ளார். அங்கங்கே கண்டு கொள்க.* (8)

9. அருளி னீர்மைத் திருத்தொண் டறிவரும்
தெருளி னீரிது செப்புதற் காமெனின்
வெருளின் மெய்ம்மொழி வானிழல் கூறிய
பொருளி னாகும் எனப்புகல் வாமன்றே. கூ

(இ - ள்) அருளின்...தெருளினீர - அருளே தன்மையாயுள்ள திருத்தொண்டின் புகழ் அறிய அரிதென்று (மேலே "அளவுகூட உரைப்பரிது" என்றும், "தெரிவரும் பெருமை" என்றும் கூறி) உணர்ந்துள்ள நீர்; இது செப்புதற்கு ஆம்? எனின் - இது செப்புதற்குத் துணியலாமோ? என்பீராகில்; வெருள் இல்...பொருளின் - மயக்கநீக்கும் மெய்ம்மொழியாலே வானினிடத்தே யமர்ந்து கூறியருளிய பொருளின் துணையாலே; "ஆம்" எனப் புகல்வாம் - அது யாம் செப்புதற்கு உரித்தேயாம் என்று துணிந்து கூறு வோம்; அன்றே - அவன் மெய்ம்மொழி கூறித் துணைசெய்த அன்றைக்கே.

(வி - ரை) அருளின் நீர்மைத் திருத்தொண்டு - பிறிதொன்றினும் படாது அருள் வயப்பட்டு அத்தன்மையேயாக நிற்கும் திருத்தொண்டு. "ஏகனாகி இறைபணி நிற்க" என்ற இலக்கணப்படி உள்ள அடிமைத் திறம். அறிவரும் தெருளினீர் - அறிவரிது என்ற தெருட்சி பெற்ற. அல்லது அறிவு - அரும் - தெருள் - இல் - நீர் என்று பிரித்து, உரிய அறிவும் அரிய ஞானமும் இல்லாத நீர் என்று உரைத்தலும் ஒன்று.
ஆம் எனின்-ஆமோ என்று வினவுவீராயின். ஆம் - ஆமோ? வினா உருபு தொக்கது.
வெருள் - வெருட்சி. ஐயம் - திரிபு - மயக்கம் முதலியன. இல் இல்லையாகச் செய் யும்; போக்கும்.
மெய் மொழி வான்நிழல் கூறிய பொருள் - (1) வானினின்றும் நிழலாய்க் கூறிய மெய்ம்மொழிப் பொருள். (2) மெய்ம்மொழிவான் நிழல் - உண்மையே மொழிபவன், சத்தாகிய இறைவனுடைய நிழல். வெளிப்படாத நிலை - மறைந்து நின்று கூறிய நிலை. (3) வான் நிழல் கூறிய மெய்மொழியும் பொருளும் என்றுமாம். நிழல் - ஒரு பொரு ளின் சாயலாய்க் காணப்பட்டு அப்பொருளை அனுமான அளவையால் அறிவிப்பது.

*சேக்கிழார் - 180, 181, 182, 183 பக்கங்களிற் காண்க.

பொருள் - உலகெலாம் என்று எடுத்துக் கொடுத்த முதல் மொழியாகிய ஊதியம். மெய்ம்மொழி-மெய்யனுடைய மொழி; மெய்யாகிய மொழி என்க. இதன் விரிவு முதற் பாட்டில் காண்க.

புராணம் பாடத் தொடங்குமுன் ஆசிரியர் சேக்கிழார் பெருமான் நடராசப் பெருமான் திருமுன்பு நின்று வணங்கி "அடிகளே!...உனது அடியார் சீர் அடியேன் உரைத்திட இடர் கெடுத்து அடி எடுத்துத் தருவாய்" என்று பிரார்த்தித்தனர். அதற்கு

" அலைபு னற்பணி ரதிர திச்சடை யாட வாடர வாடகின்
றிலகு மன்றினி லாடு வார்திரு வருளி னால்அச ரீரிவாக்(கு)
'உலகே லாம்'என அடிஎடுத்துரை செய்த பேரொலி ஓசையிக்
கிலகு சீரடி யார்செ விப்புலத் தெங்கு மாகி நிறைந்ததால் "

என்று இதனையே உமாபதி சிவாசாரியார் திருத்தொண்டர் புராண வரலாற்றிற் கூறியருளியது காண்க. (௯)

வேறு

10. இங்கித ஞமங் கூறின் இவ்வுல கத்து முன்னாள்
தங்கிருள் இரண்டின் மாக்கள் சிந்தையுட் சார்ந்து நின்ற
பொங்கிய இருளை ஏனைப் புறவிருள் போக்கு கின்ற
செங்கதி ரவன்போல் நீக்கும் திருத்தொண்டர் புராண மென்பாம்.

இப்புராணத்தின் பெயர் கூறியவாறு.

(இ - ள்) இங்கு...கூறின் - இப்புராணத்தின் பெயர் என்னென்று சொல்வோமாயின்; இவ்வுலகத்து...இரண்டில்-ஆதிகாலந் தொட்டு இங்குள்ள இருவேறு இருட்கூட்டங்களிலே ; ஏனை...செங்கதிரவன்போல் - மற்றப் பௌதிகமாகிய வெளியிருட்டைப் போக்குகின்ற சூரியனைப்போல; மாக்கள்...இருளை - மாக்களின் மனத்துள்ளே பொருந்தி நின்று பொங்கிய அக இருளாகிய ஆணவத்தைப் போக்கி உதவும்; திருத்தொண்டர் புராணம் என்பாம் - திருத்தொண்டர் புராணம் என்று சொல்வோம்.

(வி - ரை) ஆசிரியர் இதற்கு இட்ட நூற்பெயர் திருத்தொண்டர் புராணம் என்பது.

புறவிருள் போக்குகின்ற கதிரவன்போல் அகவிருளைப் போக்கும் புராணம் என்பது உவமம். பௌதிகமாகிய புற இருள் பொருள்களைக் காணவொட்டாமல் மறைத்துக்கொண்டிருக்கும். ஆனால் தன்னை மறைக்கச் சக்தி யில்லாமல் காட்டிக்கொண்டிருக்கும். ஆதலின் அதற்கு வேறு அடைமொழியின்றி ஏனை என்று இலகுவிற் பிரித்துக் கூறினர். ஆனால் அக இருளுக்குச் சிந்தையுள்ளே - சார்ந்து - நின்ற - பொங்கிய என மூன்று அடைமொழி கொடுத்துக் கூறினர். அது உலகததைக் காணவொட்டாமல் மறைத்து நிற்கின்றதேயன்றித் தன்னையும் மறைத்துக்கொண்டு நிற்கும் வலியுடைமை பற்றி என்க. "இருபொருளும் காட்டாதிது" என்பது சாத்திரம்.

மாக்கள் - ஆணவமாகிய அக இருளில் மூடப்பட்டார் நன்மை தீமை நாடியறியும் அறிவு இல்லாதவராதலின் மாக்களே ஆவர் என்பார் ஐயறிவுடையவற்றின் பெயராகிய மாக்கள் என்ற பெயரால் கூறினர். 'மாவு மாக்களு மையறி வினவே" என்ப திலக்கணம்.

சார்ந்து—நின்று—பொங்கிய - சார்தல்—நிற்றல்—பொங்குதல் என மூன்றும் இருள்மலம் என்னும் ஆணவமாகிய மூலமலததின் செய்கை.

சார்தல் - அநாதியே பந்தித்தல் - சார்ந்ததன் வண்ணமாகிய உயிர்களைத் தன்வயமாக்குவது. "ஆணவத்தோ டத்துவித மானபடி" என்ற திருவாக்கும் காண்க.

**நிற்றல்** - என்றும் நீங்காது நிலைத்து உயிர்களுடன் சேர்ந்து நிற்றலாம். "மூத்தியி லும் மூன்று முதலும் மொழியக்கேள்" என்றபடி அப்போதும் வலிகெட்டாயினும் நீங்காது நிற்பது.

**பொங்குதல்** - தன் செயலைப் பல சத்திகளாலும் செய்துகொண்டு உயிர்களைப் பிறவிகளில் மேன்மேலும் செலுத்துதல். "கருணைக் கிணங்காத வன்மையையும்" என்ற தாயுமானார் திருவாக்கும் காண்க.

**நீக்கும்** - வலியில்லாமலும் செயலில்லாமலும் செய்யும்.

**பாயிர**மாகிய இப்பகுதியிலே முதற்பாட்டு இறைவன் திருமொழியும், இரண்டா வது பாட்டு அவன் துதியுமாம். மூன்றாவது பாட்டு நூன்மங்கலமும் காப்புக் கடவுள் வணக்கமுமாம். நான்காவது பாட்டு நூல் நுதலிய பொருளைக் கூறிற்று. 5, 6, 7-வது திருப்பாட்டுக்கள் அவையடக்கம் கூறுவன. 8-வது பாட்டு நூல் செய்வித்தார் பெயரும் நூல் கேட்டாரும் அவைக்களமும் கூறிற்று. 9-வது பாட்டு நூல் வந்த வழியும் 10 வது பாட்டு நூற்பெயரையும், சிந்தையிருளைப் போக்குகின்றது என்ற நூற்பயனையும் அறி விப்பனவாம். இன்றமிழ்ச் செய்யுளாய் என்றதால் மூன்றாவது பாட்டில் நூல்வழங்கும் எல்லை தமிழ் உலகத்தின் எல்லையே என்று எல்லையும் கூறியபடியாம். என்பாம் - புகல் வாம் - என்ற வினைகளுக்குத தோன்றா எழுவாய் "சேக்கிழார்" ஆசிரியர் என நூல் செய்தாரையும் குறித்தவாறும்.

"ஆக்கியோன் பெயரே வழியே எல்லை
நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே
கேட்போர் பயனோ டாயெண் பொருளும்
வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே" என்பது இலக்கணம். (10)

**பாயிரம் முற்றிற்று.**



## முதலாவது

# திருமலைச் சருக்கம்

## திருமலைச் சிறப்பு

11. பொன்னின் வெண்டிரு நீறு புனைந்தெனப்
பன்னு நீள்பனி மால்வரைப் பாலது
தன்னை யார்க்கு மறிவரி யானென்றும்
மன்னி வாழ்கயி லைத்திரு மாமலை. க

**திருமலைச் சருக்கம்** : முதற் காண்டத்திலே, திருமலையில் நிகழ்ந்ததாய் இப்புராண அடியார் திறங்கள் உலகத்திலே தெரிந்த வரலாற்றை உரைக்கும் பகுதி. சருக்கம் உட் பிரிவு. சுந்தரமூர்த்திகள் திருவாரூரிலே பாடியருளிய திருத்தொண்டத் தொகையே இப்புராணத்து மூலமாம். அவர் திருக்கயிலை மலையிலிருந்து இவ்வுலகிலே அவதரிக்க நேர்ந்ததும், திருவாரூரிலே போந்து திருத்தொண்டத் தொகை பாட நிகழ்ந்ததும் ஆகிய வரலாறு இச்சருக்கத்திலே பேசப்பெறும். திருமலை - திருக்கயிலை மலை. திருத்தொண் டத்தொகை பாடியபின் இறுதியில் சுந்தரமூர்த்திகள் திருமலைக்குத் திரும்பி அணைந்த வரலாறு இறுதிச் சருக்கமாகிய வெள்ளானைச் சருக்கத்திற் பேசப்பெறும். இவற்றிற் கிடையே திருத்தொண்டத் தொகையின் ஒவ்வோர் திருப்பாட்டின் முதற் சொற் றொடரையே பெயராகக் கொண்டு "தில்லைவாழ் அந்தணர் சருக்கம்" முதல் "மன்னிய சீர்ச் சருக்கம்" வரைப் பதினொரு சருக்கமும் கூடி ஆகப் பதின்மூன்று சருக்கங் களில் நிறைந்து முடிவுபெற்றது இப் புராணம். அவற்றுள் திருமலைச் சருக்கம், தில்லை வாழ் அந்தணர் சருக்கம், இலைமலிந்த சருக்கம், மும்மையால் உலகாண்ட சருக்கம், திருநின்ற சருக்கம் என்ற ஐந்தும் முதற் காண்டத்தில் அடங்கியன. இவற்றுள்ளே முதலாவது, **திருமலைச் சருக்கம்** :—திருமலைச் சிறப்பு - திருநாட்டுச் சிறப்பு - திரு வாரூர்த் திருநகரச் சிறப்பு - திருக்கூட்டச் சிறப்பு - தடுத்தாட்கொண்ட புராணம் - என ஐந்து உட்பகுதிகளை யுடையது.

**திருமலைச்சிறப்பு** - திருமலையின் பெருமையைச் சொல்லும் பகுதி. திருமலை - முழுமுதற் கடவுளாகிய இறைவன் எழுந்தருளிய தலைமைபற்றி அடைமொழியும் வேறு தனிப்பெயரும் இல்லாமலே திரு என்ற உயர்வு காட்டும் அடையுடன் சொல்லப் பட்டது. திருக்கோயில் என்பது கோயில்களிற் சிறந்து தலைமைபெற்ற தில்லையை உணர்த்துவதுபோலத் திருமலை என்பது மலைகளிற் சிறந்து தலைமைபெற்ற கயிலை மலையை உணர்த்திற்று. "திருவளர் தாமரை" என்ற திருக்கோவையாருக்குப் பேராசிரி யர் உரைத்தவற்றைக் காண்க. திரு - கண்டாரால் விரும்பப்படுந் தன்மை நோக்கம். இது இம்மலைக்கு மிகப்பெரிதும் பொருத்தமுடைத்தாம் என்பது இதனைக் கண்டார்க்கு இனிது விளங்கும். திருமலை என்பதற்கு வெள்ளிமலை எனத் தக்கயாகப்பரணி உரை யில் கண்டவாறு மறிக.

**(இ - ள்)** பொன்னின்...புனைந்து என - பொன்னின் மேலே வெள்ளிய திரு நீற்றை அணிந்தாற்போல ; பன்னும்...பாலது - எடுத்துச் சொல்லற்குரிய நீண்ட இமய மலையில் உள்ளது ; தன்னை...அறிவரியான் - யாவர்க்கும் தனது தன்மையை இன்ன

உ

"In the mind of a Hindu, Kailas is always associated with soul-elevating, sublime, spiritual ideas. Kailas Hills are a huge range with a central, beautiful, naturally carved and decorated, shining peak, eternally clad with silvery snow 22,980 feet above the sea-level. Some take the height to be 22,028 feet. This particular peak is in the form of a natural huge Siva Linga (Virat form). This is worshipped as the form of Lord Siva from a distance. There is neither a Temple nor a Poojari nor daily Pooja there. The picturesque and magnanimous scenery of Kailas with its awful solemnity and weird grandeour of landscape is unprecedented in the whole world. The Alpine scenery is nothing, nothing before Kailas. To many the fruition of all earthly desires is the crowning glory of a visit to the sacred places, by which the sins of former births are cleansed and exemption from metempsychosis obtained."

**A Trip to Sacred Kailas-Mansarowar,**

*—Swami Sivananda.*

பக்கம்—16.



திருக்கயிலாய மலை

BY KIND PERMISSION OF MESSRS GANESH & CO, MADRAS

"பொன்னின் வெண்டிரு நீறு புனைந்தெனப்
பன்னு நீள்பனி மால்வரைப் பாலது
தன்னை யார்க்கு மறிவரி யானென்றும்
மன்னி வாழ்கயி லைத்திரு மாமலை"—பெரியபுராணம்.

தென்று அறிவதற்கு அரியதாயிருக்கின்ற சிவபெருமான் ; என்றும்...மாமலை - எக்காலத்தும் நீங்காமற் பொருந்தி வாழ்தற்கிடமாகிய கயிலை என்கின்ற பெரிய திருமலையாகும்.

திருமலையின் சிறப்புக் கூறுவதுடன் சுந்தரமூர்த்திகள் கயிலாயத்திலிருந்து நிலவுலகில் அவதரிக்க நேர்ந்த சரிதமும் இதிற் கூறப்பெற்றது. சுந்தரமூர்த்திகள் நிலவுலகிற்குப் புறப்பட்டதும் மீண்டுச் சேர்ந்ததும் இம்மலையேயாதலாலும், இப்புராணத்திற்கு மூலநூலாகிய திருத்தொண்டத் தொகை கிடைப்பதற்கு மூலகாரணமாகிய நிகழ்ச்சி நிகழ்ந்த இடம் இதுவாதலாலும் இம்மலைச் சிறப்பைக்கொண்டு புராணம் தொடங்குகின்றார் ஆசிரியர்.

(பாயிரத்துடன் தொடர்பாய் இச்சருக்க முழுதும் பாட்டிலக்கம் தொடர்ந்து சில ஏட்டுப்பிரதிகளிற் காணப்பெறுகின்றது )

(வி - ரை) கயிலைத் திருமாமலை...பனிமால்வரைப் பாலது என்று முடிக்க.

**பொன்னின் வெண்திருநீறு புனைந்து என** - இது உவமானம். பொன்னின்மேல் வெள்ளிய திருநீறு அணிந்தாற்போல மால் வரையின் மேலே பனி உறைந்து உள்ளது என்பது.

**பனிமால்வரை** - பெரிய இமயமலை. இது பொன்மலை என நூல்களிற் பேசப்பெறும். இமாசலம் - இமாலயம் - (The Himalayas) என்பது. பன்னும் - பலவாற்றாலும் புகழ்ந்து பேசப்படுவது. நீர் பனிக்கட்டியாக உறைந்து கிடக்கும் மலையாதலின் **பனிமால்வரை** என்றார் - இது அன்பின நீர்மை உறைப்புப்பெற்றுத் தங்கும் இடம் என்பது குறிப்பு - இறைவனுடைய திருக்கயிலை இதில் இருத்தலின்-என்க. உலகிலே மிகப்பெரிய மலைத்தொடர்ச்சி. இதன் சிகரமே உலகில் மிக உயர்ச்சியுடையது. அந்தச் சிகரம் கயிலை மலையாம். மிக உயர்ந்த மலையின் மிக உயர்ந்த சிகரம் என்க. இது எப்பொழுதும் பனிக்கட்டியால் மூடப்பெற்றிருக்கும். ஆதலின் வெண்மையாய் வெண்ணீற்றுக கோலமாய் விளங்கும். குறித்த உயரத்துக்கு மேற்பட்ட இடங்கள் தான் பனியால் மூடப்படும். அவ்வுயரத்துக்குக் கீழே உள்ள மலையின் பாகங்கள் பனி மூடாமல் தூரப் பார்வைக்குப் பொன்னிறமாகவே காட்டும். ஆதலின் 'பொன்னின் மேல் வெண்ணீறு புனைந்தாற்போல்' என்றார். **வரைப்பாலது** - வரையின் ஒரு பகுதியிலே உள்ளது. இது கயிலை மலையின் தூர தரிசனம் கூறியபடி.

**தன்னை யார்க்கும் அறிவரியான்** - "இன்ன தன்மையன் என்று அறியொண்ணா எம்மானை" என்பது சுந்தரமூர்த்திகளது திருவாரூர்த் தேவாரம். "யாவராயினும் அன்பரன்றி அறியொணா மலர்ச் சோதியான் " (திருவாசகம்). "கனகக் குன்றத் தெழிற் பெருஞ் சோதியை" "பொன்னெடுங் குன்ற மொன்றுண்டு கண்டீர்" என்பனவாதி திருவிருத்தங்களால் அப்பர் சுவாமிகள் துதித்தருளியபடி பொன்மலையும் கயிலைவெண் சிகரமும் இறைவன் வடிவமாகவே விளங்குவது ஆதலின் அத்தோற்றத்திற்குள்ளே "அரியான்" மன்னி வாழ்கின்றான் என்று குறிப்பிட்டபடியுமாம். "பொன்னொத்த மேனிமேல் வெண்ணீ றணிந்து " என்னும் தேவாரமும் காண்க. **மன்னிவாழ் கயிலைத் திருமாமலை** - இததிருமலையையே சிவசொரூபமாகக் கண்டு அதனுள்ளே சிவத்தையும் கண்டு ஆசிரியர் தரிசித்து நம்மையும் தரிசிக்கச் செய்கின்றபடி காண்க. அதில் விளங்கும் பெருமானைப்போலவே இந்த மலையும் உயர ஆகாய விமானங்களிற் பறந்து காண் பார்க்கும் அறிதற்கரியதாய் விளங்குவது இந்நாட் கண்கண்ட காட்சியாம். கயிலை - இது பூகைலாயம். (நூல்களிற் பேசப்பெறும் மகா கயிலாயமன்று) மதங்காகமம் காண்க. இங்கே மன்மத தகனம்—சனகாதி முனிவர்களுக்கு உபதேசம்—முதலியன நிகழ்ந்தன. இதிற் பஞ்சரிஷிகளது ஆசிரமங்களும் உள்ளன. பின்னர் " முனிவர் அஞ்சலி மாலையும் முன்னெலாம் " என்று கூறுவது காண்க. அப்பர் சுவாமிகள் திருக்கயிலை

யாத்திரை செய்த இடம் இதுவே. இறைவன் மும்மூர்த்திகட்கு முதல்வராய் உப தேசம் செய்தனர் என்பது வரலாறு. சமீபகாலத்தில் இம்மலையின் ஒரு பாகத்தில் இந்துநதிச் சார்பிலே ஒரு பெரிய மண்மேட்டைத தோண்டிப் புதைந்து கிடந்த ஒரு பெருநகரங் கண்டுள்ளார்கள். அதிற் சைவப் பெருமைகளும், சரிதங்களும், பழமையும், காணப் பல பொருள்கள் கிடைத்தன. அதிலே ஒன்று - மூன்று சிரமும் நான்கு கைகளும் கொண்டு யோகாசனததில் உபதேச மூர்த்தியாய் ஒரு மரத்தடியில் வீற்றிருக்கும் உருவமாய் இதனைச் சுற்றிப் புலி யானை இருடிகள் முதலியன காணப்பெற்றது. இது மேற்குறித்த மும்மூர்த்திக்கு உபதேசித்த ஆசிரியமூர்த்திக் கோலம் போலும். காதுகளைப் பொத்திக்கொண்டு கேட்பதுபோல உள்ள உருவங்களும் பக்கத்திருப்பனவாம். சிவலிங்கம்,நந்திதேவர், அம்பிகை, முதலிய உருவங்களும் உள்ளன. இவற்றின் விரிவை சர், ஜான் மார்ஷல் என்பவர் எழுதிய "இந்து நதிச் சாரல் நாகரிகம்" (Indus Valley Civilisation) என்னும் நூலுட் காண்க. மேலே கண்ட மும்மூர்த்தி உபதேசக் கோலத்தைக் கேட்கும்போது,

"காது பொத்தரைக் கின்னரருழுவை கடிக்கும் பன்னகம் பிடிப்பருஞ் சீயம்
கோதினமாதவர் குழுவுடன் கேட்பக் கோல ஆல்நிழற் கீழறம் பகர"

என்னும் சுந்தரமூர்த்திகளது திருநின்றியூர்த தேவாரம் - (6). நினைவுக்கு வரும்.

என்றும் மன்னி-எக்காலததிலும் நீங்காது நிலைபெற்று. ஊழிக்காலததிலும் தான் அழியாமல் நிற்பதாலும், எல்லாவற்றையும் அழிக்கும் நாயகனுகிய சிவபெருமானுக்கு இருப்பிடமாய் நிற்பதாலும் என்றும்-எக்காலதகும் - என்றூர். இதனையே திருநொடித தான்மலை என்று சுந்தரமூர்த்திகள் தேவாரத்திற் பாடியிருத்தல் காண்க. நொடித்தல்- அழித்தல். காரைக்காலம்மையார் தலையால் நடந்து சென்ற கயிலை இது. 1

12. அண்ணல் வீற்றிருக் கப்பெற்ற தாதலின்
நண்ணு மூன்றுல குந்நான் மறைகளும்
எண்ணில் மாதவஞ் செய்யவந் தெய்திய
புண்ணி யந்திரண் டுள்ளது போல்வது. உ

(இ - ள்) அண்ணல்...ஆதலின் - (யாவருக்கும் மேலாம் அளவில்லாத சீருடையானுகிய) பெருமையுடைய சிவபெருமான் விரும்பி எழுநதருளி என்றும் மன்னியிருக்கும் பேறுபெற்ற மலையாதலால்; நண்ணும்...புண்ணியம் - சேர்கின்ற மூன்று உலகங்களும் நான்கு வேதங்களும் அளவில்லாத பெருந்தவம் செய்ததனுல் நேரே கண்ணுற் காணும்படி வந்துசேர்ந்த புண்ணியங்களானவை யாவையுமே; திரண்டு உள்ளது போல்வது - ஒருங்கு சேர்ந்து உருவெடுத்து நிலைத்ததே போன்றுள்ளதாம் இத்திருமலை என்க.

(வி - ரை) அண்ணல் - பெருமையுடையான். எல்லார்க்கும் மேலானவனுதலால் இது சிவபெருமானையே குறிக்கும். அவன புண்ணியமூர்த்தியாதலால் அவன் எழுந்தருளியிருப்பதான இத்திருமலையும் புண்ணிய சொரூபமுடையது. "பூதநாயகன் புண்ணிய மூர்த்தியே" (அப்பர்) முதலிய திருவாக்குகள் காண்க.

நண்ணும் மூன்றுலகு-உயிர்கள் உலகங்களிற் புகுநதே தங்களது வினைகளை ஒழிக்க வேண்டியிருத்தலால் நண்ணும் எனறூர் - மேல் - நடு - கீழ்-எனற மூன்று நிலையிலும் உள்ள உலகங்களின் பெரியோர்கள். புண்ணிய அனுபவம் மேலுலகததிலும் பாவ அனுபவம் கீழுலகத்திலும் செய்யப்பட்டுக் கழிந்தபின் உயிர்கள் நடு உலகமாகிய இந் நில உலகிற் பிறந்து சிவபுண்ணியம் செய்தே அதுகாரணமாக வீடுபெறுவர் என்பது சகல சாத்திரங்களின் முடிந்த முடிபு. ஆதலின் மேல் கீழ் உலகங்களின் தவம் நடுவுலகத்தில் நின்றது. நடுவுலகத்தின் பயன் சிவபுண்ணியமாயிற்று. சிவபுண்ணியங்களின் பயனுய்த்

திருமலை நிறைந்து என்பது கருத்து. நான்மறை தவம் செய்வதாவது மறைக்காடு முதலிய தலங்களில் அருச்சித்து இறைவனைத் தமக்குள்ளே விளங்கும்படி பெறுதல்.

**வந்து எய்திய** - தவம் செய்ததனால் உருவெடுத்து முன்னேவந்து பொருந்தியது போலும். பெரியோர் வசனமும் வேத வசனமும் பொய்யாகாமற் காட்சிப்படும் பொருட்டு அவர்கள் தவம்செய்ய உருவுடன் ஈசன் இருக்கும் இடமாகியது.

**புண்ணியம் திரண்டு உள்ளது** - புண்ணியமாவது தவத்தினுக்குரிய செயல். புண்ணியத்தின் நிறம் வெண்மை என்பர். புண்ணியமே உருவெடுததாற் போன்றுள்ளது திருமலை என்பது கருத்து. புண்ணியத்தினிடமாக வீற்றிருப்பதுபோலவே இத் திருமலையிலும் இறைவன் வீற்றிருக்கின்றதனால் இதற்குப் புண்ணியத் திரட்சி உவமானமாயிற்று. 2

13. நிலவு மெண்ணில் தலங்களும் நீடொளி
இலகு தண்டளி ராக வெழுந்ததோர்
உலகம் என்னும் ஒளிமணி வல்லிமேல்
மலரும் வெண்மலர் போல்வதம் மால்வரை. ௩

(இ - ள்) நிலவும்...தளிர் ஆக - நிலைதது நின்றுள்ளனவாய் அளவில்லாதனவாகிய தலங்களை தனது ஒளி வீசி விளங்கும் குளிர்ந்த தளிர்களாகக் கொண்டு; எழுந்தது... வல்லிமேல் - முளைதது எழுந்ததாகிய உலகம் என்கிற ஒப்பற்ற ஒளிவீசும் அழகிய கொடியின் உச்சியிலே; மலரும்...மால்வரை - பூக்கின்ற வெள்ளைப் பூப்போன்றுள்ளது அப்பெரிய திருமலையாகும்.

(வி - ரை) நிலைபெற்ற பல தலங்களையும் தளிர்களாகக் கொண்டு தழைத்துப் படர்வது உலகமாகிய கொடி. அக்கொடியின் உச்சியிற் பூக்கும் வெண்மலர்போன்றது திருக்கயிலைமலை என்க.

கொடிப் பூவாகிய ஒரு வெண்பூவை அடைய விரும்பியவன் அதனைப் பூக்கின்ற கொடியைச் சார்ந்து அதைத் தழைததுப் படரச்செய்து காததது அதனபின் முடிவில் எவவாறு பூவைப் பெறுவானோ, அதுபோல, உயிர்கள் தாம் சேரவேண்டிய இடமாகிய திருக்கயிலையை யடைய வேண்டினால், ஞாலத்தை நயந்து அதில் தலங்களிற் படர்ந்து தரிசித்து முடிவில் திருமலையை அடையலாம் என்பது கருத்து.

**தளிர்** - பிற தலங்கள். ஒவ்வொர் காரணம்பற்றிச் சிவன் வெளிப்பட்டு அருள்வது.

**வெண்மலர்** - கயிலை. அத்தளிர்களை முன்னாகக் கொண்டு நிரந்தர வாசத தலமாய் இறைவன் இருப்பது. மலையின் நிறம்பற்றி வெண்மலர் என்றார். "பிறைதவழ் கயிலைக் குன்றம் பிரம ரந்திரமாம்" என்பது (திருவிளையாடல்). "வடபாற் கயிலையும் தென்பால் நல்லூரும் தம் வாழ்பதியே" (அப்பர் தேவாரம்). "புவனியிற் போய்ப் பிறவாமையில் நாள் நாம் போககுகின்றோம் அவமே இந்தப் பூமி, சிவனுய்யக் கொள்கின்ற வாறு" (திருவாசகம்). முதலிய திருவாக்குகள் காண்க. உலகிற் செய்யும் எல்லாச் சிவ தருமங்களும் எல்லாத் தல தரிசனங்களும் இத்திருமலையினைப் பெறும் பொருட்டேயாம் என்பது துணிபு. அப்பர்சுவாமிகள் பல தலங்களையும் தரிசிததுப் படர்ந்து முடிவிலே திருக்கயிலை யாததிரை செய்து வழிகாட்டியதும் இக்கருததுப் பற்றியே என்க. 3

14. மேன்மை நான்மறை நாதமும் விஞ்சையர்
கான வீணையின் ஓசையும் காரெதிர்
தான மாக்கள் முழக்கமும் தாவில்சீர்
வான துந்துபி யார்ப்பு(ம்) மருங்கெலாம். ச

(இ - ள்) மேன்மை...நாதமும் - மேன்மைதரும் நால்வேதங்களினுடைய நாதமும் ; விஞ்சையர்...ஓசையும் - வித்தியாதரர் முதலியோர் கானங்களினுலும் வீணைகளினுலும் செய்கின்ற ஓசைகளும் ; கார்...முழக்கமும் - மேகங்களும் யானைக் கூட்டங்களும் ஒன்றற்கொன்று எதிராகச் செய்யும் முழக்கங்களும் ; தாஇல்சீர்......ஆர்ப்பும் - குற்றமில்லாத சிறப்புடைய ஆகாய துந்துபிகளின் முழக்கங்களும் ; மருங்கெலாம் - அதன் பக்கங்களிலெல்லாம் (நிறைந்துள்ளன).

(வி - ரை) மேன்மை நான்மறை நாதம் - சத்தங்கள் இருவகைப்படும். ஒலி எனப்படும் பொருளுடைய சததம். (1). ஓசை எனப்படும் பொருளில்லாத சத்தம்.(2). முன்னையது சுததமாயையிலிருநதும், பின்னையது அசுதத மாயையிலிருந்தும் பிறக்கும். "ஓசை ஒலி எலாம் ஆனுய் நீயே" என்பது அப்பர் சுவாமிகள் தேவாரம். "ஓம் எனும் பதத்தில் வேதமாதி உற்பவித்திடும் ஆலவிதழி னுதிக்குமாபோல்" என்றபடி நாதப் பிரமததிலிருந்து வேதம் முதலிய எல்லாச் சாத்திரங்களும் உண்டாயின. ஆதலின மறைநாதம் என்ருர். இங்கே நாதம், வேதம் பயிலும் ஓசைகளைக் குறித்தது. தேவர் முனிவர்கள் துதிசெய்யும் வேத வசனங்களால் எழும் நாதததைக் குறிக்கும். வேதங்கள் நாத ஒலியால் தாமே முழங்கிக்கொண்டிருக்கும் என்பதுமாம்.

"ஓதுமறை யோர்பிறி துரைத்திடினும் ஓவா
வேதமொழி யாலொலி விளங்கிஎழும் எங்கும்" (31)

"சங்கபட கங்கருவி தாரைமுத லான
எங்கணு மியற்றுப வரின்றியும் இயம்பும்
மங்கல முழக்கொலி மலிநத மறுகெல்லாம்" (34)

என்று பின்னர்த் திருஞானசம்பந்த நாயனுர் புராணததுக் கூறுவது காண்க. நாதம் மேன்மை தருவதால் 'மேன்மைநாதம்' என்ருர். பின்வரும் ஓசை வகைகளைவிட மேலான நாதம் என்றுரைத்தலும் ஆம். மேன்மையுடைய மறை எனறுமாம்.

விஞ்சையர் - விஞ்சை (விதசை) - கானம் முதலிய பல வித்தைகளிலும் வல்ல தேவக்கூட்டத்தார். கின்னரர் முதலிய பல வகுப்பார்களையும் உடன்கூட்டிக் கானம் வீணையின் ஓசை என்ருர்.

கானவீணை - கானமும், பாடும்போது உடன் வாசிக்கும் வீணை ஓசையும் என்க. வீணுகானம் என ஒன்ருக்கியு முரைப்பர்.

தானமாக்கள் - யானைகள். மேக கர்ச்சனை யுண்டாமபோது யானைகள் எதிராய்ப் பிளிறும். ஆதலின் கார்எதிர் என்ருர். தானமாக்கள் என்றதனுல் அம்மலைச்சாரலில் வாழும் வேறு பல பிராணிகளையும் கொள்க. கண்ணப்பர் புராணம் 6-வது பாட்டும் பார்க்க.

துந்துபி - ஐவகைத் தேவவாததியங்கள். "கடவுள் மால்வரையினுச்சி, அதிர்தரும் ஓசை ஐந்தும் ஆர்கலி முழக்கம் காட்ட" (கண்ணப்பர் புராணம்) காண்க.

இப்பாட்டிலே மறைநாதம் ஒலியையும் ; கானம், வீணை, ஓசை, முழக்கம், ஆர்ப்பு, இவைகள் ஓசையையும் குறித்தன. உலகியலிலே பொருளற்ற சததஙகளே மிகுந்தும் பொருளுள்ள சத்தங்கள் குறைந்தும் காணப்படுவ தியல்பாதலின் ஒலிக்கு ஒன்றும் ஓசைக்கு நான்கும் கூறினுர்போலும். நிறைந்துள்ளன என்ற வினைமுற்று வருவிததுரைத்துக்கொள்க. 4

ஆர்ப்ப என்பது பாடபேதம்.

15. பனிவி சும்பி லமரர் பணிந்துசூழ்
அனித கோடி யணிமுடி மாலையும்
புனித கற்பகப் பொன்னரி மாலையும்
முனிவர் அஞ்சலி மாலையும் முன்னெலாம். ரு

(இ - ள்) பனி...முடி மாலையும் - குளிர்ந்த தேவ உலகத்தில் உள்ள தேவர்கள் வணங்கிச் சூழ்கின்ற அனேகமாகிய கிரீட வரிசையும்; புனிதம்...அரிமாலையும் - தூய கற்பகப் பூக்களாற் கட்டப்பட்டுப் பொன் இழைகள் கூடிய பூமாலைகளும்; முனிவர் அஞ்சலி மாலையும்; முனிவர்கள் கும்பிட்டு நிற்கும் வரிசையும்; முன்னெலாம் - முன் பகங்களில் நிறைந்துள்ளன.

(வி - ரை) மேற்பாட்டிலே காதுக்குப் புலப்பட்டு கயிலையின் மருங்கெலாம் நிகழ் காட்சி கூறினார். இப்பாட்டிலே கண்ணுக்குப் புலப்பட்டு முன்னெலாம் உள்ள காட்சி கூறுகின்றார். அங்கு முன்புறம் காணப்படுவன மூன்றுவகை மாலையாம். அவை அணிமுடிமாலை, பொன் அரிமாலை, அஞ்சலிமாலை என்பன. இவற்றில் அரிமாலை பூமாலையாம். ஏனை யிரண்டுமாலையும் வரிசை என்ற பொருளில் வந்தன. அமரர்கள் தத்தமக்கேற்ற கிரீடங்களுடன் வணங்கும்போது வரிசையாய் நின்று முடிசாய்த்து வணங்கவும், ஒரு புறம் முனிவர்கள் நின்று வரிசையாய்க் கைகூப்பி வணங்கவும் உள்ள காட்சியின் வரிசைகளையே மாலைகள் என்றார். திருக்கோயிலின்முன் வரிசையாய்த் தகுதிக்குத் தக்கபடி வருதது, நினறு, வணங்கும் ஒழுங்கும் விதியும் குறிததவாறுமாம். இக்காலத்தில் ஆலய தரிசன விதி தவறித் தாறுமாறாய் நின்று அபசாரமே செய்யும் மக்கள் இதைக் கூர்ந்து கவனிப்பார்களாக.

**பனிவிசும்பில் அமரர்** - குளிர்ச்சி பொருந்திய தேவலோக வாசிகளாகிய தேவர்கள் சூழும் - என்க. விசும்பிலிருநதபடியே அமரர் பணியத்தக்கதாய் மிக உயர்நத திருமலை என்று கொண்டு உரைததலும் ஆம். இப்பொருளில் அமரர் பனிவிசும்பிற் பணிந்து சூழ் என்று மாறிக் கூட்டுக. சூரபன்மா முதலியோரால் அவ்வப்போது அலைப்புண்டு பனிக்கின்ற (துன்பப்படுகின்ற) விசும்பு என்றுமாம். அவ்வாறு துன்பப் படுகின்ற காலத்தில்தான் கயிலைக்குச் சென்று இறைவனிடம் முறையிட்டுத் தவங் கிடப்பதும், ஏனைக்காலத்தில் மறப்பதும், இநதிரன் முதலிய தேவர் செயலாதல் கந்த புராண முதலியவற்றிற் காண்க. மந்தாகினித் திவலை (ஆகாய கங்கை)யாலும் கற்பகச் சோலை முதலியவற்றாலும் விசும்பிற்குக் குளிர்ச்சியாம். தேவவுலகம் மேல்உலக மாதலாலும் மேலே உயர்ந்து செல்லச்செல்லக் குளிர்ச்சி அதிகமாதலாலும் **பனிவிசும்பு** ஆம். **அமரர்** - (மர் - மரணம்.) மரணமில்லாதவர். மற்ற உயிர்களை நோக்க ஏகதேசத்தில் அதிக காலம் மரணமில்லாதவர்களேயனறி எக்காலததும் இறவாதவர்கள் என்பதல்ல. இறவாதவன் சிவபெருமானாகிய இறைவன் ஒருவனேயாம். "ஈறிலாதவன் ஈசன் ஒருவனே" (தேவாரம்). நீண்ட ஆயுளுடைமைபற்றி உபசார வழக்கினால் அமரர் (மரண மற்றவர்) எனப்படுவர். நீடித்து மரணத்தை நீக்கிக்கொண்டவர்கள் என்க.

**அனிதகோடி** - அனிதம் - அனேகம். தேவர்கள் முப்பத்து முக்கோடி என வருத திருக்க அனேககோடி என்ற தெவ்வாறெனின்,—"நால்வேறு இயற்கைப் பதினொரு மூவரோடு" (திருமுருகாற்றுப்படை) என்றபடி தேவர்கள் நான்கு வகையினராய் அவற்றில் 33 உட்பிரிவுடையராய் உள்ளார். ஆதித்திய வமிசம் 12. உருத்திரவமிசம் 11. வசுக்கள் வமிசம் 8. அச்சுவினி தேவர் வமிசம் 2. இவர்கள் பிரமதேவ சிருட்டியிலே காசிப முனிவரது இருமனைவியருள் அதிதி என்பவள்பால் தோன்றியவர். திதி என்ற மற்ற மனைவியினிடம் தோன்றியவர் தைத்தியர் என்ற அசுரர். சுர - நுரை. "வாருணி நறவம் பிறந்தது மற்ற துண்டலால் சுரராயினர்" (கூர்மபுராணம்) நுரையாகிய அமிர்தமுண்டதால் சுரர் என்ற பேர்பெற்றனர். 33 கோடியாகிய இவர்களுடன் உலகத்திலே புண்ணியங்கள்செய்து தேவர்களாகும் எண்ணில்லாத உயிர்களும் கூடுவதால் அனேக கோடியாகுவர். கயிலையின் முனபக்கத்தில் வரிசையாக தேவர்களும் முனிவர்களும் தொழுதுநிற்பர் என்பது கருத்து.

*கற்பகமாலை* - முன்பக்கத்திலே அலங்காரம்செய்யத் தூக்கப்படுவனவும் இறைவன் திருவடிக்குச் சூட்டுதற்காக ஏந்தப்படுவனவும்ஆம். தேவர்கள் அணிந்தனவும்ஆம். பின்னர் "தேன்உறை கற்பகவாச மாலைத தேவாசிரியன்" (தடுத - 124) என்று கூறுவதும் காண்க. "இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால், இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஒருபால், துன்னிய பிணைமலர்க் கையினர் ஒருபால்" என்ற திருவாசகமும் காண்க. மேலே "மதுமலர் இருகையும் ஏந்தி" (19) என்பதும் காண்க. 5

16. நீடு தேவர் நிலைகளும் வேண்டிடின்
நாடும் ஐம்பெரும் பூதமும் நாட்டுவ
கோடி கோடி குறட்சிறு பூதங்கள்
பாடி ஆடும் பரப்பது பாங்கெலாம். க

(இ - ள்) *நீடுதேவர் நிலைகளும் - நீடிய தேவர் பதங்களையும் ; வேண்டிடின் - அவசியமாய் வேண்டுமானால் ; நாடும் ஐம்பெரும் பூதமும் - உலக காரணமாய் நாடும் ஐம்பெரும் பூதங்களையும் ; நாட்டுவ கோடிகோடி குறள்சிறு பூதங்கள் - தாம் எண்ணியபடி நிலைநாட்ட வல்லனவாகிய கோடி கோடியாகிய அனேகம் சிறு குறள்வடிவுள்ள சிவ பூதகணங்கள் ; பாடிஆடும் பரப்பது பாங்கு எல்லாம் - பாடிக்கொண்டும் ஆடிக்கொண்டும் உள்ள பரந்த இடங்களையுடையன அத்திருமலையின் பக்க இடங்கள் எல்லாம்.*

(வி - ரை) **நீடு தேவர் நிலை** - தேவர்களது நீடுநிலை என மாற்றிப் பொருள் உரைக்க. தேவர் கணங்களும்-என்பது பாடமாயின் தேவகணங்களையும் நாட்டுவ-என்க.

**வேண்டிடின்** - நடுநிலைத் தீவகமாய், வேண்டிடின் நிலைகளும், வேண்டிடின் பூதங்களும், நாட்டுவ என முன்னும் பின்னுங் கூட்டி முடிக்க.

**நாட்டுவ** - நாட்டுவன - பெயர். நாட்டுவனவாகிய-நாட்டும வலியுடைய - பூதங்கள் என்க. மற்றவர்களைப் பார்க்க தேவர்களது நிலைகள் நீடுவன ஆயினும் சிவகணங்களின் வலிமையையும் கால அளவையும் நோக்க அவை குறைந்தனவாகி அழியுந் தன்மையுடையன என்பார் நீடு நிலைகளும் நாட்டுவ என்று சிறப்பும்மை தந்து கூறினார். "கோடிலாப் பேய்க்கணஞ்சூழ்" என்பது திருஞானசம்பந்த நாயனார் தேவாரம். குறிஞ்சி அச்சிறுபாக்கம் - 3.

**கோடிகோடி குறட்சிறு பூதங்கள்**-இவை சிவகணங்களாகிய பூதங்கள். இவற்றின் எண்ணும் உருவும், வடிவும், அளவும, வலியும் ஆனந்தமும் கூறியவாறு. அப்பர் சுவாமிகளுக்குத் திருத்தோளில் இடபமும் சூலமும் பொறித்ததும், திருஞானசம்பந்த நாயனார்க்கு ஆயிரம் பொன் அடங்கிய உலவாக்கிழி தந்ததும் முதலியவற்றைத் திருவருளாணையின் வழிச் செய்தன இப்பூதங்களேயாம். "ஆளும்பூதங்கள் பாடநின்றாடும் அங்கணன்றனை" (தேவாரம்) என்பது முதலிய திருவாக்குகள் காண்க. சிவபெருமான் பூத நாயகனுதலாலும் அவனது கணங்களாகிய பூதங்கள் அவனது திருமலையைச் சுற்றி இருந்து ஆனந்தித்திருப்பன ஆதலாலும் இவ்வாறு கூறினார். பார்வை யளவிலே குறட்சிறு பூதங்களாயினும், ஆணை வலியிலே பெரியன என்பார் குறட்சிறு பூதங்கள் **பெரும்பூதமும் நாட்டுவ** என்று இலகு தோன்றக் கூறினார். **வேண்டிடின் நாட்டுவ** என்று சொல்லவே, ஆக்கலும், அளித்தலும், அழித்தலும் செய்யவல்லன என்பது பெறும். ஐம்பூதச் சேர்க்கையாலாகிய இவ்வுலகத்தையும் தேவர் நிலைகளாகிய பிரம உலகம், விட்டுணு உலகம், முதலியவற்றையும் நாட்டும வலிமையுடையன சிவகணங்களாகிய இப்பூதங்கள் என்றபடி. ஐம்பூதங்களின் சேர்க்கையால் ஆக்கலும், அவற்றின் ஒவ்வொன்றன் மிகுதிப்பாட்டிலே அழித்தலும், படும் இவ்வுலகம். அதனால் உலகத்தார் இவற்றையே பெரிதென மயங்கிப் பயந்து இவற்றிற்குப் பூசை முதலியனவும் செய்வர். ஆயின் அப்பூதங்களையே ஆக்கியும் அழித்தும் நாட்டவல்லன இந்தக்

குறட் பூதங்களாம் என்று கூறினமையால் சிவபூதங்களின் சிறப்பும் இவற்றினாற் சேவிக்கப்பெற்ற இறைவனது பெருமையும் உணர்த்தியவாறு.

இப்புராணத்துப் பேசப்பெறும் அடியார்களும் சிவபெருமானது அருள்வழி நின்று திருக்கயிலையிற் கணங்களாகவும் கணநாயகர்களாகவும் பெற்றார்கள். கணநாதநாயனார்,

"தூநறுங் கொன்றை முடியவர் சுடர்நெடுங் கயிலைமால் வரையெய்தி
மானநற்பெருங் கணங்கட்கு நாதராம் வழித்தொண்டி னிலைபெற்றார்" 6

சேரமான்பெருமாள்நாயனார்,

"......நன்மைசேர் கணநாதரா யவர்செயு நயப்புறு தொழில் பூண்டார்..."
—வெள்ளானை - 49.

என்று வருவனவாதி அடியார் பேறுகளைக் காண்க. சிவகணங்களின் பரம்பரையே அடியார் பரம்பரையாகும்- "பூத பரம்பரை பொலிய" என்றமை காண்க. ஆதலின் அடியார்களது வன்மையும் தன்மையும் உடன்கூட்டிக் குறிப்பிட்டவாறுமாம்.

குறட் பூதங்களின் வலிமை கந்தபுராணம் - மகாசாத்தாப்படலம் - மகாகாளர் வருகைப்படலம் முதலிய சரிதங்களிற் காண்க. இவை மண்ணையும் விண்ணையும் நாட்ட வல்லன என்ற பல சரிதங்களையும் கூறும் இன்னும் மற்ற மாபுராணங்கள் இதிகாசங்களிலும் காண்க. காரைக்காலம்மையார் "மற்றொருகண் நெற்றியின்மேல் வைத்தான் றன் பேயாய, நற்கணத்தில் ஒன்றாய நாம்" என்று அறபுதத்திருஅந்தாதியிற் பாராட்டியிருத்தலும் இங்கு நினைவு கூர்க.

இத்திருமலைப் பாங்குகள் எல்லாம் வேண்டிடின் தேவர் நிலைகளும் ஐம்பூதமும் நாட்டுவனவாம் சிறு பூதங்கள் பாடியாடும் பரப்பினையுடையன என்று முடிக்க. குறள் - சிற்றுருவம். 6

17. நாயகன் கழல் சேவிக்க நான்முகன்
மேய கால மலாமையின் மீண்டவன்
தூய மால்வரைச் சோதியின் மூழ்கியோன்
றூய வன்னமுங் காணு தயர்க்குமால். எ

(இ - ள்) நாயகன்...மீண்டு - இறைவனது திருவடிகளைச் சேவிக்கச் சென்ற பிரமதேவர் அப்போது அதற்கு உரிய காலமல்லாத காரணத்தால் திரும்பி வந்து; அவன... அயர்க்கும் ஆல் - அவ்விறைவனது தூய பெரிய கயிலைமலையினது வெள்ளிய பேரொளியிலே கலந்து அதனோடு ஒன்றாகியதால் தன் ஊர்தியாம் அன்னப்பறவையை வேறுபிரித்துக் காணமுடியாமல் வருந்துவான்.

(வி - ரை) ஆல் - ஆச்சரியக் குறிப்புப்பட நிற்கும் ஒரு சொல்.

**நாயகன்** - தலைவன். இங்கு எல்லார்க்கும் தலைவனாகிய சிவபெருமானை உணர்த்திற்று. கழல் சேவிக்க மேய நான்முகன்—என மாற்றுக.

**காலம் அலாமை** - சேவித்தலுக்கு உரிய காலமல்லாததால். இறைவனைச் சேவித்தற்கு அடியவர்களல்லாதார்க்கு ஒவ்வொரு காலம் வரையறுக்கப்பெற்றுள்ளது. அடியவர்கள் எப்போதும் பணிசெய்ய உரியவர்கள். மேய எனபதனைக் காலம் என்பதுடன் சேர்த்து உரைப்பாரும் உண்டு. அப்பொருளில் உட்புகுந்தவனாகிய என்று வருவித்துக்கொள்க. **மீண்டவன்** - என ஒரு சொல்லாக்கி மீண்டவனாகி அயர்க்கும் எனறு கூட்டி உரைப்பாருமுளர்.

**தூயமால்வரைச்சோதி** - மால்வரையின் தூய சோதி என்று மாற்றிப் பொருள் உரைத்துக்கொள்க. தூய்மை வெண்மையின் குறிப்பு. அது முதற்பாட்டிற் குறித்தபடி வெண்டிருநீற்றின் சோதியாதலின் தூய சோதி என்றார்.

**மூழ்கி ஒன்றாய** - மலையின் வெள்ளிய ஒளியினுட் பொருந்தியதால் தனித்து வேறாகக் காணமுடியாதிருத்தல். பொருள் இரண்டாயினும் ஒருதன்மைப்படுதலே ஒன்றுதல் எனப்பட்டது. கண்ஒளியும் கதிர் ஒளியும்போல் ஒன்றித்துக் கலத்தல். இதனையே இரண்டற்றதாகிய அத்துவிதக் கலப்பு என்பர் பெரியோர். ஆன்மாக்களைத் தனது அருட்சோதியிலே இரண்டறக் கலக்கும்படி செய்வான் இறைவன்; அவனது திருமலையும் அத்தன்மை பெற்றது என்ற குறிப்பும் தோன்றுதல் காண்க.

**மால்வரை** - பெரியமலை. மால் (விட்டுணு) போன்ற மலை என்றும் ஆம். "கடல் கடைந்திடச் சென்றிடும் வெள்ளைமால் கடுப்ப" என்றபடி. இப்பொருளில் இது உள் பொருள் உவமமாம். மாலே ஆகிய மலை என்று முரைப்பர். திருமால் சிவபெருமானை இடபமாகத் தாங்கி நின்றமை புராணத்துக் கேட்கின்றோம்.

"தடமதில்கள் அவைமூன்றும் தழலெரித்த அந்நாளில்
இடபமதாய்த் தாங்கினான் திருமால்காண் சாழலோ"—திருவாசகம்

"அந்தண் வெள்ளிமால் வரையிரண் டாமெனை அணைந்தோர்
சிந்தை செய்திடச் செங்கண்மால் விடையெதிர் நிற்ப"
—திருநாவுக்கரசு நாயனார் புராணம் - 378

என்று கூறுதல் காண்க.

**சோதியின் மூழ்கி ஒன்றாய** - "......கனகமலையருகே, போயின காக்கையும் அன்றே படைத்தது பொன் வண்ணமே" என்பது பொன் வண்ணத்தந்தாதி. பொன்மலையைச் சார்ந்த காகமும் பொன்னிறமாம் என்பது பழமொழி. காக்கையின் கருமையாகிய வேற்று நிறமும் மாற்றப்பெற்றுப் பொன்வண்ண மாகும் என்றால், வெள்ளிய தூய ஒளியில் அவ் வெள்ளைநிறமே யாகிய அன்னம் மூழ்கி ஒன்றாய்க் கலத்தலும் அதனால் வேறு காணப்படாமையும் இயல்பேயாம் என்க. 7

**வேறு**

18. காதில்வெண் குழையோன் கழல்தொழ நெடியோன்
காலம்பார்த் திருந்ததும் அறியான்
சோதிவெண் கயிலைத் தாழ்வரை முழையிற
றுதிக்கையோ னூர்தியைக் கண்டு
மீதெழு பண்டைச் செஞ்சுட ரின்று
வெண்சுட ரானதென் றதன்கீழ்
ஆதியே னமதாய் இடக்கலுற் றானென்
றதனைவந் தணைதருங் கலுழன். அ

**(இ - ள்)** காதில்...அறியான் - காதிலே வெண்சங்கக் குழையை அணிந்த இறைவனது பாதங்களைத் தொழுவதற்கு நெடியோனாகிய திருமால் உரிய காலத்தை எதிர் பார்த்துக் காத்துக்கொண்டிருந்த செய்தியை அறியாதவனாகி; சோதி...கண்டு-வெள்ளை ஒளியுடைய கயிலையின் சாரலில் உள்ள ஒரு முழையிலே விநாயகருடைய வாகனமாகிய பெருச்சாளியைப் பார்த்து; மீது...என்று - முன் காலத்தில் மேலே எழுந்த செஞ்சுடராகிய அக்கினித்தூணமானது இன்று வெள்ளை யொளித் தூணாய் நிற்பதான எண்ணத்தாலே அதனை ஆதிவெள்ளைப்பன்றி உருவெடுத்து அடிதேடி நிலந்தோண்டி நிற்கின்றான் என்பதாய்க் கருதி; அதனை...கலுழன் - கருடன் அப்பெருச்சாளியினிடம் வந்து சேரும்.

**(வி - ரை)** இது வெள்ளி பாடல் என்பர். அதாவது, ஒரு வெள்ளியம்பலத் தம்பிரான் என்பவரால் இடைச் செருகலாய்ச் சேர்க்கப்பட்ட பாட்டு என்று கூறுவர்,

இதன் கருத்தும் பொருளும் மேற்பாட்டையே அனுவதித்துக் கூறியதாக வெள்ளையாகவே காணப்படுகின்றது. மேற் பாட்டிலே பிரமனுக்குச் சொன்ன கருத்தும் பொருளுமே இப்பாட்டில் விட்டுணுவுக்கும் சொல்லப்பட்டது. மேற்பாட்டில் ஊர்தியையுடையவன், ஊர்தியைக் காணாது மயங்குகின்றான். இப்பாட்டில் ஊர்தி, உடையவனைக் காணாது மயங்குகின்றது.

**வெண் குழையோன்** - சிவபெருமான்.—**நெடியோன்** - விட்டுணு.—**முழை** - மலையிற் பொந்து - பெருந் துவாரம.

**துதிக்கையோன் ஊர்தி** - பெருச்சாளி. இது உருவத்தால் பன்றிபோல் தோற்றப்பட்டு விட்டுணுவினது ஆதி வெள்ளைப்பன்றிநிலையைக் கருடனுக்கு நினைப்பூட்டிற்று. **ஆதி ஏனம்** - சுவேதவராகம் எனப் பெறுவது. பெருச்சாளியும் மலையில் ஒளியால் வெள்ளையாய்த் தோன்றியபடியால் இது மாலாகிய வெள்ளைப்பன்றியோ என்று கருடன் எண்ணியது.

கருடன் தனது தலைவனாகிய திருமாலைக் காணாது தேடிற்று. திருமலையடியில் ஒரு வெள்ளிய பெருச்சாளியைக்கண்டு அது வெள்ளைப் பன்றியோ என்று நினைத்தது. முன்னொருகால் செஞ்சுடராகிய அண்ணாமலையைப் போலவே இது ஒரு வெண்சுடர் மலை என்று நினைத்துத் தனது முன்னை உருவாகிய வெள்ளைப் பன்றியாக மண்ணைத் தோண்டி அடிதேடுகின்றானோ தன் தலைவன்? என நினைத்து அதனைச் சார்ந்தது; என்பது இப்பாட்டின் கருத்தாம். வெள்ளைப் பன்றியாய் விட்டுணுமூர்த்தி செயல் செய்த கற்பமே சுவேதவராக கற்பம் எனப்படும். 8

19. அரம்பைய ராடல் முழவுடன் மருங்கி
 லருவிகள் எதிரெதிர் முழங்க
வரம்பெறு காதல் மனத்துடன் தெய்வ
 மதுமல ரிருகையு மேந்தி
நிரந்தர மிடைந்த விமான சோபான
 நீடுயர் வழியினு லேறிப்
புரந்தரன் முதலாங் கடவுளர் போற்றப்
 பொலிவதத் திருமலைப் புறம்பு. கூ

(இ - ள்) அரம்பையர்...முழங்க - அரம்பை முதலிய தெய்வப் பெண்கள் ஆடலுக்கேற்ப முழக்கும் முழவுகளோடு, பக்கத்தே ஓடும் மலையருவிகள் எதிர் எதிர் இசைப்பனபோலச் சத்திக்க; வரம்பெறும்...ஏந்தி - இறைவனிடத்தே தாங்கள் குறித்த வரங்களைப் பெறவேண்டும் என்னும் ஆசையுடைய மனத்தோடு தேன் நிறைந்த கற்பகப் புதுப்பூக்களை இரண்டு கையிலும் ஏந்திக் கொண்டு; நிரந்தரம்... ஏறி - நெருங்கிய விமானங்களுடன் கூடிய படிவழியேறி வந்து; புரந்தரன்...புறம்பு - இந்திரன் முதலிய தேவர்கள் துதிக்க விளங்குவது அத்திருமலையின் வெளிச் சாரல்.

(வி - ரை) **ஆடல் முழவு** - ஆடலுக்கிசைய முழக்கப்படும் முழவு. "வலம்வந்த மடவார்கள் நடமாட முழவதிர" (திருஞானசம்பந்த சுவாமிகள் தேவாரம்-திருவையாறு).

**வரம்பெறு காதல் மனம்** - போகபதங்களின் நாயகர்களாதலின் தங்கள் தங்கள் பதவிகளுக்கு உரிய இன்பங்களைத் தரவும் அவற்றிற்கு வரும் துன்பங்களைப் போக்கவும் வேண்டும் வரம்பெறும் மனம்.

**தெய்வ மதுமலர்** - கற்பக முதலிய தேவ வுலகத்து மலர்கள். **மதுமலர்** - தேன் நிறைந்த புதுப் பூ.

நிரந்தரமிடைந்த விமான சோபான நீடு உயர் வழி-எங்கும் நெருங்கிய விமானங்களுடன் கூடிய படிகளையுடைய நீண்டு உயர்ந்த வழி. படிஎறும் வழியிலே நெருக்கமான மண்டபங்களும் அவற்றிலே விமானங்களும் உண்டு என்க.

புரந்தரன் முதலாம் கடவுளர், மலர், கைஏந்திச், சோபான வழியினால் ஏறிப் போற்றத் திருமலைப் புறம்பு பொலிவது என்று முடிக்க.

இந்திரன், மால், பிரமன் முதலிய பற்பல தேவர்களும் தங்களுக்கு அசுரர்களாலே துன்பம் நேர்ந்தபோதும், பின்னும், அவ்வப்போதும், திருக்கயிலை சென்று வரங்கிடந்து வேண்டியவற்றைப் பெற்ற வரலாறு கந்தபுராணம் முதலிய மாபுராணங்களிற் காண்க.

மேற்கூறிய மூன்று பாட்டுக்களாலும் பிரமன் முதலிய தேவர்கள் இறைவனை வணங்கி வரம்பெறக் காத்துக்கொண்டிருந்தார்கள் என்றும், அவ்வாறு அவர்கள் காத்து நிற்பது திருமலையின் வெளிப்புறங்கள் என்றும், இவர்கள் தமகள் பக்குவத்திற்கேற்பச் சோபானக் கிரமத்திலே சிவபெருமானைப் பூசித்து வரம்பெற உள்ளவர்கள் என்றும், குறித்தவாறு. "தடஞ்சிலாதல சோபானத்தா லேறி வாழ்ந்திமையோர் குழாம் நெருங்கு மணிநீள்வாயில்" என்று தென்கயிலையாகிய திருக்காளத்திக் கோயில்வாயிலைக் கூறுதல் காண்க. (திருஞான - புரா - 1022)

கடவுளர் - தேவர்கள். முழுமுதற் கடவுள் அல்லர். வரம்பெறும் என்றமையானறிக. ஏகதேசத்தில் உபசார வழக்கில் இவர்களும் கடவுளர் எனப் பெற்றார்கள்.

"அரியயன் இந்திரன் சந்திரா தித்தர் அமரரெல்லாம்
உரியநின் கொற்றக் கடைத்தலையார் உணங்காக் கிடந்தார்;
புரிதரு புன்சடைப் போக முனிவர் புலம்புகின்றார்;
எரிதரு செஞ்சடை ஏகம்ப! என்னோ திருக்குறிப்பே"

"உந்திநின் றாருன்றன் ஓலக்கச் சூளைகள் வாய்தல்பற்றித்
துன்றிநின் றார்தொல்லை வானவ ரீட்டம் பணியறிவான்
வந்துநின்றா ரயனும் திருமாலும்; மதிற் கச்சியாய்!
இந்த நின்றோம்; இனி யெங்ஙனமோ வந் திறைஞ்சுவதே"

என்பனவாதி திருவிருத்தங்களையும் காண்க.

இக்கருத்தை மேல்வரும்பாட்டு விளக்குதலும் காண்க. 9

20. வேதநான் முகன்மால் புரந்தரன் முதலாம்
விண்ணவ ரெண்ணிலார் மற்றும்
காதலால் மிடைந்த முதற்பெருந் தடையாம்
கதிர்மணிக் கோபுரத் துள்ளார்
பூதவே தாளப் பெருங்கண நாதர்
போற்றிடப் பொதுவினின் றாடும்
நாதனு ராதி தேவனுர் கோயி
லாயக னந்தியெம் பெருமான். ௧௦

(இ - ள்) வேதநான்முகன்...உள்ளார் - (மேலே கூறியபடி) பிரமன் விட்டுணு இந்திரன் முதலிய தேவர்களும் மற்றும் எண்ணில்லாத முனிவர் முதலியோர்களும் வரம்பெறும் ஆசையுடன் நெருங்கிக் கூடித் தடைபட்டு வெளியே காத்திருக்கும் முதற் திருவாயிலின் கோபுரத் துவாரத்திலே வீற்றிருப்பவர்கள்; பூதம்...நாயகன் - சிவ பூதங்களும் வேதாளங்களும் முதலிய கணநாதர்கள் நேரே தரிசித்துத் துதிக்கும்படி